புகழேந்திப்புலவர்

இயற்றிய

# புலந்தரான் தூது

சித்திரப்படப் பதிப்பு



PUBLISHED BY
LONGMANS, GREEN & CO.
167, MOUNT ROAD,
BOMBAY & CALCUTTA

MADRAS:
1914

மாதர் மஞ்சரி: மலர் - 5

புகழேந்திப்புலவர்

இயற்றிய

# புலந்திரன் தூது



சித்திரப்படப் பதிப்பு.



PRINTED AT THE VAIJAYANTI PRESS, MOUNT ROAD
MADRAS:
1913

புலந்தரன் தூது

# கதையின் வரலாறு

புண்ணிய பூமியாகிய நமது பரதகண்டத்தில், பூர்வம் சந்திர குலத்தார், சூரியகுலத்தார் என்று இருபெருங் குலத்தார் இருந்து அரசு செலுத்தி வந்தார்கள். அவர்களுள் பீஷ்மன் என்பான் ஓர் அரசன், சந்திரகுலத்தில் பிறந்து, அஸ்தினபுரத்தில் இருந்து அரசாண்டு வந்தான். அவனுக்குத் திருதிராஷ்டிரன், பாண்டு, விதுரன் என மூன்று புத்திரர்கள் பிறந்தனர். அவர்களுள் திரிதிராஷ்டிரன் பட்டத்துக்கு வந்தான். இவனுக்குத் துரியோதனன் முதலாகிய நூறு குமாரர் பிறந்தனர். பாண்டுவுக்குத் தருமர் முதலாக ஐந்து புத்திரர் பிறந்தனர். இவ்வைவர்க்கும் முன்பிறந்தவர் ஒருவருண்டு. ஆனால் அவர் இவர்களுக்கு முன்பிறந்த செய்தி, வெகு நாள்வரை இரகசியமாகவே யிருந்ததால், ஐவரே பாண்டுவின் மக்களாகக் கருதப்பட்டு வந்தனர். இவர்களுள் தருமர், திரிதிராஷ்டிரன் புத்திரராகிய நூற்றுவர்க்கும் மூத்தவர். ஆனதுபற்றி திரிதிராஷ்டிரன், தருமர் முதலிய ஐவருக்கும் இந்திரப்பிரஸ்தம் என்ற நாட்டை, அரசாளும்படிக் கொடுத்திருந்தான். திரியோதிரன் அஸ்தினபுரத்தை ஆண்டுவந்தான்.

திரியோதிரனுக்குப் பஞ்சவர்மீது இளமைதொட்டுப் பொறாமை யிருந்ததால், அவர்களைப் பலவிதத்திலும் தந்திரமாய் அழித்துவிட முயன்றான். ஆனால் அப்படிச் செய்யக் கூடவில்லை. ஆதலால், அவர்களை மாயமாய்ச் சூதாட அழைத்து, தமது இந்திரப்பிரஸ்த நகரைத் தோற்கும்படிச் செய்தான். அவர்கள் நாடிழந்த பிறகு, துரியோதனன், அவர்களைக் காட்டுக் கோட்டினான்; ஆயினும் துரோணர் முதலிய பெரியோர் வேண்டுகோளால், அவர்கள் பன்னிரண்டு

வருஷம் வனவாசமும் ஒருவருஷம் அஞ்ஞாதவாசமும் செய்துவந்தால் அவர்கள் நாட்டைத் திருப்பிக் கொடுப்பதாகக் கூறினன். அதற்கிசைந்து பாண்டுமக்கள் ஐவரும் தம் மனைவி திரௌபதையுடன் காடு சென்றனர்.

அவர்கள் காட்டில் பன்னிரண்டு வருஷம் வசித்து முடித்து பதின்மூன்ருவது வருஷம் விராடதேசத்தில் மறைந்திருந்தனர். அப்போது தருமர், தாம் தமது நாட்டைத் துரியோதனனிடமிருந்து பெறவேண்டிய காலம், சமீபித்துவிட்டபடியால், அவன் மனத்தை யறிந்துவர ஒருவரைத் தூதாக அனுப்பவேண்டும் என்று கருதினர். அதற்கு ஏற்றவர் யார் என்று கிருஷ்ணருடன் ஆலோசித்து, அர்ச்சுனன் தேவியருள் ஒருத்தியாகிய அல்லியின் புத்திரன் புலந்தரனை அனுப்புவதாகத் தீர்மானித்தார்.

அந்தப்படியே அவர் புலந்தரனை மதுரையினின்றும் வரவழைத்துத் துரியோதனனிடம் தூதுபோய் வரும்படி அனுப்பினர். புலந்தரன் அங்ஙனமே சென்று, துரியோதனனைக் கண்டு, அவன் பஞ்சவர்க்கு நாடு கொடுக்கச் சித்தமாயிருக்கின்ருனு என்று கேட்டான். அப்போது துரியோதனன், நாடு கொடுக்க மறுத்ததுமன்றி, அவன் முன்னிலையில் ஐவரையும் மிகவும் உதாசினமாகப் பேசினன். அதனைப் பொறுக்கமுடியாமல், புலந்தரன் கோபித்துத் துரியோதனனைப் பலவகையிலும் அவமானப்படுத்தி, கர்ணர் கூறிய சமாதான வார்த்தைகளால் கோபந்தணிந்து மீண்டு, பஞ்சவரிடம் வந்து செய்தியை உரைத்துவிட்டு, மதுரை சென்றடைந்தான்.

See p. 6, 14, 16-24, 26, 61





அருச்சுனன், அல்லி, புலந்தரன்.



# புலந்தரன் தூது

## கணபதி தோத்திரம்.

அத்தி முகத்தோனே அரனார் திருமகனே
சத்தியின் புத்திரனே சரிந்த வயிற்றோனே
முத்தி யளிக்கின்ற முருகற்கு மூத்தோனே
வித்தை யெனக்கருளும் வேலவற்கு மூத்தோனே
திருவலமாம் மேற்படி தெற்கிசைந்த வெட்பாளை
வெட்பாளைக் குள்ளிருக்கும் சப்பாணிப் பிள்ளையரே
பொற்பாதம் நான்மறவேன் பொன்னுக் கணபதியே
பொன்னுக் கணபதியே பிரபலமாய் முன்னடவாய்
ஏடு தவறாமல் எழுத்தாணி சாயாமல்
கோடு தவறாமல் கொழுந்தோலை சாயாமல்
நாவு தவறாமல் நல்லோசை தாருமையா
தப்பாம லெந்தனுக்கு சரஸ்வதியே முன்னடவாய்
பஞ்சவர்கள் தங்கதையைப் பட்சமுடன் நான்படிக்க
செஞ்சொல சோதையம்மை தேவகிதம் பாலகனே
கஞ்சன் வலதழித்த கார்மேகா முன்னடவாய்
எல்லை யளந்தபிரான் ஏழுமரம் எய்தவரே
புலந்தரன் தூதுரைக்கப் புண்ணியரே வாக்கருளும்
இந்திரனார் தூதுரைக்க யெந்தனுக்கு வாக்கருளும்
தப்பிதங்கள் வாராமல் தாழ்வுகள் நேராமல்
குற்றங்கள் வாராமல் குறைவுகள் நேராமல்

ஒப்பி மனம்பொறுத்து உத்தமரே வாருமையா
காக்கக் கடனுமக்குக் கர்த்தாவே மெய்ப்பொருளே

## முருகர் தோத்திரம்.

சீரான மாமுகனே சிற்றடியை வேலவரே
மாயோன் மருமகனே வள்ளி மணவாளா
கந்தனே யெந்தனிட கவலையெலாந் தீர்த்தவனே
புலந்திரனுர் தன்தூதைப் புத்தியுடன் யான்பாட
புத்திதனை நீகொடுத்தால் புகழ்ச்சியாய் நான்படிப்பேன்

## சரஸ்வதி தோத்திரம்.

தாயே சரஸ்வதியே சதுர்முகனுர் தேவியரே
என்னுவிற் குடியிருந்து நடத்துமம்மா விக்கதையை
நெஞ்சிற் குடியிருந்து நீநடத்த வேண்டுமம்மா
அஞ்சியுனைப் பணிந்தேன் ஆனந்த வாழ்மார்பி
வஞ்சி யுமையவளே வல்லவியே காருமம்மா
செஞ்சொல் தவருமல் சீராக விக்கதையை
பஞ்சையா னெந்தனுக்குப் பாடவருள் புரியும்
புலந்திரனுர் தூதுரைக்கப் புகழ்ச்சிதர வேண்டுமம்மா
மகிழ்ச்சியா யிக்கதையை மண்டலத்தில் பாடுகிறேன்

## கதையின் வரலாறு.

பட்டணமாம் பட்டணமாம் இந்திரபுரி பட்டணமாம்
பட்டணத்தை யாளுகிற பஞ்சவர்களைவருண்டு
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அரசாளும் நாளையிலே
எதுகுறை யில்லாமல் இனிதரசை யாண்டிருந்தார்
மனதுகுறை யில்லாமல் வையகத்தை யாண்டிருந்தார்
இப்படி யாக இருக்கின்ற வேளையிலே

## திரியோதிரன் சேனைத்தலைவர் ஆலோசனைக்கூட்டம்.

நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் தான்கூடி
அம்பலத்து வாசலிலே அனைவோரும் வந்திருந்தார்

காஞ்சிவள நாடாளுங் கருணரும் வந்திருந்தார்
சாமத் துரோகி சகுனியு மங்கிருந்தான்
பாட்டர் புலவர் பதினெட்டு மந்திரியும்
அல்லவரு மங்கிருந்து ஆலோ சனைகள்செய்து
ஐவராம் பாண்டவரை அங்கே வரவழைத்துத்
தருமர்க் கெதிராகச் சகுனியவன் வந்திருந்து
தார்வேந்தன் முன்பாகச் சண்டாளன் வந்திருந்து
மாயத்தால் சூதாடி மனமுருக மண்பறித்து
மாதைத் துகிலுரிந்து மன்னவரைக் காடோட்டி
ஐவரையுங் காடோட்டி ஆண்டிருந்தான் ராச்சியத்தை
பதின்மூன்று வருஷம் பார வனமோட்டி
பஞ்சவரைக் காடோட்டிப் பாருலக மாண்டிருந்தான்
இப்படி யாக இவனிருக்கும் வேளையிலே

## ஐவர் விராடபுரத்தில் மறைவாயிருந்தது.

ஐவர்பஞ்ச பாண்டவரும் ஆரணங்கு துரோபதையும்
மன்னர்பஞ்ச பாண்டவரும் மயிலனையாள் துரோபதையும்
பன்னிரண்டு தன்வருஷம் பாரவனம் தீர்ந்து
பதின்மூன்றும் தன்வருஷம் விராட புரத்தில்வந்து
மாறுவேஷங் கொண்டு மருமம் தெரியாமல்
உருவங்கள் தெரியாமல் உத்தமர்கள் வாசம்செய்தார்
அந்த வருஷம் அதுவுந் தொலைந்தபின்பு
பதினாலாம் தன்வருஷம் பிறந்தது பஞ்சவர்க்கு

## பெருமாளுடன் பஞ்சவர்கள் தூதனுப்ப ஆலோசனை செய்கிறது.

ஐவ ரரையரும் ஆழி யுசந்தவரும்
வேந்தர் பெருமாளும் வெளிமண்டபத்தில் வீற்றிருந்தார்
தக்க புகழுடைய தருமரெ ழுந்திருந்து
ஏழுலக மாளுகிற எம்பெருமா ளடிபணிந்து
ஆளப் பிறந்த அபிமன்னனும் பட்டானே

அந்தாளந் தீர்த்த அரவானும் பட்டானே
தாம முடியான் கடோர்க்கஜனும் பட்டானே
ஆரை யனுப்புவோம் ஆளடிமைத் தூதுக்கு
எவரை யனுப்புவோம் எழில்பெரிய தூதுக்கு
என்று மவனுரைத்து ஏங்கி மனந்தளர்ந்து
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மன்னர் மனஞ்சலித்து மருமமாய் வீற்றிருந்தார்
ஏழுலக மாளுகிற எம்பெருமா ளேதுசொல்வார்
போட்ட சிறைமீட்க நாளாச்சு மன்னவரே
வைத்த சிறைமீட்க நாளாச்சு மன்னவரே
தூதுக்குப் போவாரார் சொல்லுந் தருமரேநீர்

## துரோபதையின் பிள்ளையைப் பெருமாள் வேண்டாமென்று தடுக்கிறது.

ஆரை யனுப்புவோம் அடல்பெரிய தூதுக்கு
என்று மவருரைக்க ஏதுசொல்வார் தருமலிங்கம்
பச்சை மடல்விரியும் பாளைவிரி பூமணக்கும்
பாஞ்சால மகாராஜன் சுபமணப்பூம் பந்தலிலே
வில்வளைத்து மாலையிட்ட மெல்லி துரோபதையாள்
மாலைக் குழலாள்தன் மைந்தரை யனுப்பிடுவோம்
என்ற-அந்த வுரைகேட்டு ஆதிமூல மேதுசொல்வார்
ஒவ்வாது ஒவ்வாது உத்தமியாள் பெற்றபிள்ளை
இளம்பஞ்ச பாண்டவர்கள் இணைபிரியா மன்னவர்கள்
ஐவரையும் போகவிட்டால் அனர்த்தம்வந்து நேர்ந்துவிடும்
ஒவ்வாது ஒவ்வாது என்றவருந் தாமுரைத்தார்
தக்க புகழுடைய தரும ரதுகேட்டு

## பெருமாள் நல்லரவானையும் வேண்டாமென்று தடுக்கிறது.

வீடெல்லா மாணிக்கம் வாசலெல்லா மாணிக்கம்
கட்டி யுடைத்தால் கலந்தேறு மாணிக்கம்
மாணிக்கக் கூண்டுகட்டி வாசலிலே தானம்பண்ணும்

மாலைக் குழலாள்தன் மைந்தரை யனுப்பிடுவோம்
ஏழுலக மாளுகிற எம்பெருமாள் தான்கேட்டு
ஒவ்வாது ஒவ்வாது உத்தமியாள் பெற்றபிள்ளை
பாசத் திளவரையன் பள்ளி பழகையிலே
பாரதமோ சிரதமோ என்றான் படைத்தலைவன்
பெருமாளோ பொரிமாவோ என்றுசொன்னான் புண்ணியனும்
சொல்லிப் பெருமாளும் தூதுரைக்க மாட்டான்காண்
எரிநாகங் கொண்டவனோ டெதிராள மாட்டானே
ஒவ்வாது ஒவ்வாது உத்தமியாள் பெற்றபிள்ளை
தக்க புகழுடைய தரும ரதுகேட்டு
இனியாரை யனுப்பிடுவேன் எழில்பெரிய தூதுக்கு

## பெருமாள் மின்னொளியாள் பிள்ளையை வேண்டாமென்று தடுக்கிறது.

தேசத்தால் மடையடைத்தால் செல்லேறப் போகுதென்று
பணத்தால் மடையடைத்தால் பாசி பிடிக்குமென்று
துட்டால் மடையடைத்தால் தூசேறப் போகுதென்று
காசால் மடையடைத்தால் களிம்பு பிடிக்குமென்று
சோற்றால் மடையடைக்கும் சோழன் றிருமடந்தை
மேகம் பயந்தெடுத்த மின்னொளியாள் நாயகியாள்
மாலைக் குழலால்தன் மைந்தரைப் போக்கிடுவோம்
ஏழுலக மாளுகிற எம்பெருமாள் தான்கேட்டு
ஒவ்வாது ஒவ்வாது உத்தமியாள் பெற்றபிள்ளை
கொற்றப்போர் மன்னன் குறக்கோலங் கொண்டலவோ
கொற்றப்பே ரம்பலத்தே கூசாமல் போயிருந்தால்
கொச்சையங்கள் சொல்லி யுரைப்பார்க ளவரையும்
ஏளிதங்கள் சொல்லி யுரைப்பார்க ளவரையும்
ஒவ்வாது ஒவ்வாது உத்தமியாள் பெற்றபிள்ளை
தக்க புகழுடைய தரும ரதுகேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
இனியாரை யனுப்புவோம் ஆளடிமைத் தூதுக்கு

எவரை யனுப்புவோம் எழில்பெரிய தூதுக்கு
ஏழுகோடி சேனைக ளெல்லா மடிந்தார்கள்
ஒருகோடி பாலர்கள் ஒக்க மடிந்தார்கள்
யாரை யனுப்புவோம் ஆளடிமைத் தூதுக்கு
எவரை யனுப்புவோம் எழில்பெரிய தூதுக்கு
என்று மவருரைத்து ஏங்கி முகந்தளர்ந்தார்
அப்போது-ஏழுலக மாளுகிற எம்பெருமா ளேதுசொல்வார்

## கிருஷ்ணமூர்த்தி புலந்திரனைத் தூதுக்கனுப்ப சம்மதித்தது.

மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
பொய்கை யறுகாதம் பூமதுரை முக்காதம்
மதுரை-ஐம்பத் தறுகாதம் ஆளுகிற பாண்டியர்கள்
ஆரு யிரவர் அணிதிரளாம் பாண்டியர்கள்
மைந்தரு மில்லையென்று மன்னர் மனஞ்சலித்து
மாளுகிறோ மென்று மலைமேற் றவமிருந்தார்
மாளாதே யென்று மலரி லவதரித்தாள்
மன்னன் விஜயன் மடலூர்ந்த மாதேவி
காளை விஜயன் கடலூர்ந்த மாதேவி
ஏழு பிராயத்திலே எதிர்த்துவந்த நீன்முகனை
வெட்டித் தலைதுணித்து வீரபட்டங் கட்டினவள்
பாவை யிளங்கொடியாள் பயந்தெடுத்த ரத்தினங்கள்
மாலைக் குழலாள்தன் மைந்தரைப் போக்கிடுவோம்
உத்தமியாள் பெற்றெடுத்த புத்திரனைப் போக்கிடுவோம்
என்று-ஏழுலக மாளுகிற எம்பெருமாள் தானுரைக்க
தக்க புகழுடைய தரும ரவர்கேட்டு

## தருமர் வேண்டாமென்று தடுக்கிறது.

ஒவ்வாது ஒவ்வாது உத்தமியாள் பெற்றபிள்ளை
ஏழுவேலி மஞ்சள் எடுத்தந்தப் பாண்டியர்கள்
ஏழேரி தண்ணீரில் எல்லா முரைத்தவர்கள்
சீகாரங் கொண்டார்கள் சீருடைய புத்திரனை

மஞ்சணீர் கொண்டார்கள் மைந்தன் புலந்திரனை
மைந்தனுக்கு மெந்தனுக்கும் பேச வழக்கில்லை
என்று மவருரைத்து இருக்கின்ற வேளையிலே

## புலந்திரன் வரலாறு அருச்சுனன் தருமருக்குக் கூறுதல்.

காண்டா வனமெரித்த காளை யதுகேட்டு
வில்லாளி பார்த்தன் விஜய னெழுந்திருந்து
அண்ண னெதிரிலே அடிவணங்கித் தெண்டனிட்டு
கூத்தனென்னுஞ் சோலையிலே போயிருந்தே னொருநாள்
வாழ்மதுரை பட்டணத்தில் போயிருந்தேன் நான்சிலநாள்
தொட்டுக் கொடுத்ததில்லை சுந்தரப்பெண் பாண்டியற்கு
எடுத்துக் கொடுத்ததில்லை என்தனிட புத்திரனை
மைந்தருக்கு மென்தனுக்கும் வழக்குண்டு எம்பெருமாள்
என்று-வில்லாளி பார்த்தன் விஜய னுரைக்கலுமே

## தருமர் சம்மதித்தது.

தக்க புகழுடைய தரும ரதுகேட்டு
சந்தோஷப் பட்டு சரீரமது பூரித்து
உள்ளங் குளிர்ந்து உடம்பெல்லாம் பூரித்து
தேகம் குளிர்ந்து இருதோளும் பூரித்து
உண்ணுதே பூரித்து உடம்பெல்லாம் பூட்டுவிட்டு
சந்தோஷங் கொண்டாரே தருமர் பெருமாளும்
ஈரலப் பூந்தாரார் இருவரு மோடிவந்து
ஏழுலக மாளுகிற எம்பெருமா ளைப்பணிந்து
தக்க புகழுடைய தரும ரடிபணிந்து
கைகட்டி வாய்புதைத்து வந்துமுன்னே நின்றார்கள்
எங்களை யழைத்தபணி யேதுபணி சொல்லுமென்றார்

## தருமர் அல்லிஅரசாணிக்கும் புலந்திரனுக்கும் ஓலையெழுதுகிறது.

தக்க புகழுடைய தரும ரதுகேட்டு
பங்கயஞ்சீர் கண்ணனுக்கு ஓலை யெழுதுமென்றார்

தம்பி புலந்திரற்குச் சுருளோலை யெழுதுமென்றார்
ஈரல் புகுந்தார் இருவருந் தான்கேட்டு
அருளருளு மென்னண்ணு அப்படிக்கே யாகுமென்று
தாளிப் பனையோலை வாரித் தலைசேர்த்து
வெள்ளைப் பனையோலை விளிம்பிரண்டுந் தான்சீவி
பக்கமுஞ் சீர்வாரி பவளஞ்சீர் ஓப்பமிட்டு
செம்பொன் னெழுத்தாணி தேர்விசையர் கைபிடித்து
என்னவென்று சொல்லி எழுதவென்று ரோலையிலே
தக்கப் புகழுடைய தருமரெடுத்துரைப்பார்
இன்னமின்னங் காடுறைய மாட்டா ளிளங்கொடியும்
எங்குந் திரிந்தார்கள் இளைப்பானுர் கல்லிடறி
பருக்கல் லுறுத்த பனிவந் தலைமோத
ஓடும் பருக்கல்லும் உள்ளங்கால் தானுறுத்த
கவிந்த மரத்தடியில் கண்பள்ளி கொண்டிருந்தோம்
இன்னமின்னங் காடுறைய மாட்டா ளிளங்கொடியாள்
தொங்கலெனும் பூமுடியாள் தூதுரைக்க வேணுமிப்போ
சுந்தரப் பூமுடியான் இங்கேவர வேணுமிப்போ
ஓலை யெழுதி சதுராய்க் குறியுமிட்டு
இராசாக்க ளோலைக்கு இரத்தினக் குறியுமிட்டு
மந்திரிமா ரோலைக்கு மஞ்சட் குறியுமிட்டு
ஓலைச் சுருள்மடித்துச் செந்துரிக்கம் தான்போட்டு
காற்றிலேயும் வேகமுள்ள தூதுவரைத் தானழைத்து
ஓலைச் சுருளெடுத்து உத்தமர்கள் கைக்கொடுத்து
மதுரைவள நாட்டுக்கு மன்னர்களே நீர்போய்
மடக்கோலை கட்டுவச்சு மன்னு திரும்புமென்று
சுருளோலை கட்டுவச்சு தூதர் திரும்புமென்றார்
தூதுவருந் தான்கேட்டுத் தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு
அருளருளு மென்னையா அப்படிக்கே யாகுமென்று
சொல்லப்பெற்றோ மென்று சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றோ மென்றுசொல்லிக் கும்பிட் டெழுந்திருந்து

## தூதன் மதுரைக்கு ஓலைகொண்டு போகுதல்.

மடக்கோலைக் கட்டெடுத்து மன்னர் மடியில்வைத்து
சுருளோலைக் கட்டெடுத்துத் தூதர் மடியில்வைத்து
அந்தப் புரமும் நடந்தார் அழகாக
அங்கவள நாடும் நடந்தார் அழகாக
குரு க்ஷேத்திரபூமி குருபூமி தேசம்விட்டார்
எல்லையது தாண்டி இளங்தோப்புத் தான்தாண்டி
வையைக் கடல்தாண்டி வனமாய் வனந்தாண்டி
காடு செடிதாண்டி கரியமலை தான்தாண்டி
ஓங்கி வளர்ந்தவொரு மூங்கில் வனந்தாண்டி
வேங்கை யடர்ந்தவனம் வெண்களாப் பூத்தவனம்
மதுரைத் திசைநோக்கி வாறார்கள் தூதுவர்கள்
வாற வழிதனிலே என்னென்ன வதிசயங்கள்
கொன்றைகள் பொன்காய்க்க வேங்கைகள் குட்டியீன
முத்துக்காய் காய்க்கப் பவளக் கொடிகனக்க
நீர்முத்துச் சாலைகளும் நின்று நிழலாட
நீரோடும் நீர்முதலை நின்று விளையாட
சேறுங் கழலுமங்கே சென்று விளையாட
வாழை பழுக்கக் கரும்புக் குலைசாய
ஆலை பழுக்க அணில்கள் விளையாட
கிளாக்கள் பழுக்கக் கிளிகள் விளையாட
மாலை யுதிர மலர்கள் சொரிந்துவிழ
சந்தன ஆறு குழம்பிப் பெருகிவர
சீதேவி யம்மன் உறைவாள் பலதுறையும்
திருவிளையாள் அம்மன் திரிவாள் பலதுறையும்
சோலைமலர் கண்டார் சொக்கரிட பாதங்கண்டார்
சொக்கரிட பாதம் தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டார்
ஆனைமலை கண்டார் அம்மனிட பாதங்கண்டார்
அடிவணங்கித் தெண்டனிட்டு அப்பால் நடக்கலுற்றார்

## பொற்றாமரைச் சிறப்பு.

அல்லி பிறந்தாள் அவள்பிறந்த பொய்கைகண்டார்
பூவில் பிறந்தாள் பிறந்ததொரு பொய்கைகண்டார்
மலரிற் பிறந்தாளும் இவளுதித்த பொய்கைகண்டார்
பொய்கைப் பதுமைகளை போனவரும் பார்த்திருந்தார்
படிக்குப் படிகளொரு பன்னிரு காதவழி
படியகலங் கொண்டதொரு பன்னூற்றைங் காதவழி
ஏறும் படிகளொரு எண்ணூற்றைங் காதவழி
இறங்கும் படிகளொரு எண்ணூற்றைங் காதவழி
நாலு படிகளின்மேல் ஞானவிளக் கெரியும்
அஞ்சு படிகளின்மேல் பஞ்சவர்ணம் போட்டிருக்கும்
எட்டுப் படிகளின்மேல் இலிங்கம் புதைத்திருக்கும்
பத்துப் படிகளின்மேல் பத்தினிமா ரோதிநிற்பார்
தட்டோடே தன்னகையுந் தாமரைப்பூங் காவுகளும்
கட்டுக் கழுத்தி கடலாடும் பொய்கையது
புத்திர சந்தானம் கொடுக்குமந்தப் பொய்கையது
கைம்பெண்கள் ஸ்நானஞ்செய்தால் கைலாசம் சேர்க்கும்பொய்கை
அறிவில்லார் ஸ்நானம்பண்ணல் அறிவளிக்கும் பொய்கையது
மலடிகள் ஸ்நானம்பண்ணல் மைந்தனளிக்கும் பொய்கையது
கன்னிகைப் பெண்கள் கடுகெனவே ஸ்நானம்பண்ணல்
கன்னி கழிந்திடுவார் காளைகளை யீன்றிடுவார்
மைந்தர்களை யீன்றிடுவார் மகிழ்ச்சியாய் வாழ்ந்திடுவார்
பிள்ளைகளை யீன்றிடுவார் போத வளர்ந்திடுவார்
இப்படியாய்ப் பதவிதரும் இயலான பொய்கைதனை
கண்டாரே தூதுவருங் கண்களிரண்டுங் கொள்ளாமல்
பார்த்தாரே தூதுவரும் பார்வைரண்டுங் கொள்ளாமல்
அப்பொய்கை தான்தாண்டி அப்பாலே போகலுற்றார்
அரதேசி பரதேசி யார்வந்து நின்றாலும்
இல்லையென்று சொல்லார்கள் மெல்லியுட புண்ணியத்தால்
முத்தும் பவளமும் மொண்டு மவர்க்களிப்பார்
வச்சிர மாணிக்கம் வாரி யவர்க்களிப்பார்

பிழைத்தேனென்று போவார்கள் பொற்கொடியாள் புண்ணியத்தால்
அப்போது தூதுவரும் அந்தத் தெருத்தாண்டி
மற்றுமொரு வீதியிலே வாருர்கள் தூதுவர்கள்
ஆனைகட்டி போர்படுப்பார் அல்லியிட ராச்சியத்தில்
குதிரைகட்டி போர்படுப்பார் உத்தமியாள் சீமையிலே
கட்டுக் கலங்காணும் கதிருழக்கு நெற்காணும்
அரிதா ளறுத்துவர மறுதாள் பயிராகும்
அரிதாளின் கீழிருந்து ஐங்கலத்தேன் கூடுகட்டும்
கரும்பு மிளநீருங் கண்திறந்து மடைபாயும்
வாழை வடக்கினும் வான்கமுகு தெற்கினும்
சோலை கிழக்கினும் துய்யபலா மேற்கினும்
இப்பெரிய ராச்சியத்தைக் கண்டாரே தூதுவரும்
கண்டாரே தூதுவரும் கண்கள்ரண்டுங் கொள்ளாமல்
பார்த்தாரே தூதுவரும் பார்வைரண்டுங் கொள்ளாமல்
அந்தத் தெருத்தாண்டி மற்றுமொரு வீதியிலே
மற்றுமொரு வீதியிலே வாருரே தூதுவரும்
வேலைப் பழிக்கின்ற விலைமாதர் வீதிகளும்
சேலை விலைமதிக்கும் சேணியர்கள் வீதிகளும்
யானை விலைமதிக்கும் அரசர்கள் வீதிகளும்
சேனைத் தலைவர்கள் சூழ்ந்திருக்கும் வீதிகளும்
குதிரை விலைமதிக்கும் குச்சிலியர் வீதிகளும்
ஒட்டை விலைமதிக்கும் உத்தமர்கள் வீதிகளும்
கொட்டியே பொன்னளக்கும் கோமுட்டி வீதிகளும்
தட்டிகொட்டிப் பணிசெய்யும் தட்டார்கள் வீதிகளும்
செட்டால் சரக்குவிற்கும் செட்டியர்கள் வீதிகளும்
விற்பிடித் துலாவுகிற வேந்தர்கள் வீதிகளும்
மற்போரு தான்செய்யும் மன்னவர்கள் வீதிகளும்
வேதமுறை தவரு வேதியர்கள் வீதிகளும்
நீதிமுறை தவரு நெறிமன்னர் வீதிகளும்
அந்தத் தெருத்தாண்டி மற்றொரு வீதியிலே
மற்றொரு வீதியிலே வாருரே தூதுவரும்

கடையுங் கடைத்தெருவும் கருமார வீதிவிட்டு
அல்லியுட வாசலுக்கு வாறுரே தூதுவரும்
அரசிலையுந் தோரணமு மார்க்குந்தலை வாசலிலே
அல்லிக் கொடிகட்டி ஆர்க்குந்தலை வாசலிலே
பூதம் பணிகள்செய்யும் பொற்கொடியாள் வாசலிலே
மேகம் பணிகள்செய்யும் மின்னனையாள் வாசலிலே
கண்டானே தூதவனுங் கண்கள்ரண்டுங் கொள்ளாமல்
பார்த்தானே தூதுவனும் பார்வைரண்டும் கொள்ளாமல்
தூதுவனு மப்போது துரிசாகத் தானடந்து
ஓடைமலர்க் கண்ணுள்தன் உட்கட்டிற் போய்ப்புகுந்து
கோசவள நாடான் கொலுவுக்கு முன்னேவந்தார்

## புலந்திரன் கோலச்சபையைத் தூதன் காணுகிறது.

ஐயன் றிருக்கொலுவி லமரர் கொலுவிருந்தார்
செம்பொன் முடிதரித்த ஸ்ரீகிருஷ்ண ரங்கிருந்தார்
இரத்தின முடிதரித்த ராஜாக்க ளங்கிருந்தார்
முத்து முடிதரித்த முடிமன்ன ரங்கிருந்தார்
வயிர முடிதரித்த மந்திரிக ளங்கிருந்தார்
ஈட்டி பிடிமன்னர் இளவரைய ரங்கிருந்தார்
கத்திபிடி மன்னர் கட்டழக ரங்கிருந்தார்
போட்டசட்டை வாங்காத போர்மன்ன ரங்கிருந்தார்
ஆறு யிரவரும் அணிதிரளா ரங்கிருந்தார்
பொன்னுமலை நாடாளும் போர்வழுதி யங்கிருந்தார்
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் வீரியரும்
நடுவே கொலுவிருந்தார் ஞாயி றுதித்தாற்போல்
அப்போது தூதுவரும் ஆணு லழகுமன்னர்
கோசவள நாட்டான் கொலுவுக்கு முன்னேவந்து
மடக்கோலை கட்டுவெச்சு மன்னர் வணங்கிநின்றார்
சுருளோலை கட்டுவெச்சுத் தூதர் வணங்கிநின்றார்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்பார்த்து
அண்ணுந்து தான்பார்த்து அரையர் திருமுகத்தை

ஆர்காணுந் தூதுவரே அறிய வுரையுமென்றார்
எவர்காணுந் தூதுவரே யெங்கிருந்து வந்தீர்கள்
எந்தவூ ரெந்தநாடு எனக்கறியச் சொல்லுமென்றார்
அப்போது தூதுவர்கள் அடிவணங்கி யேதுசொல்வார்
இந்நாட்டா ரல்லகாண் இத்திசைய ரல்லகாண்
தென்னாடுஞ் சூழத் திரைவணங்க வந்தவர்காண்
அத்தி புரமாளும் ஐயமார் தூதுவர்காண்
உங்கள்-ஐயமார் தானனுப்ப அடிவணங்கி வந்தோங்காண்
ஐயமார் தூதரென்று அடிவணங்கித் தெண்டனிட்டார்
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்கேட்டு
ஐயமார் தூதரென்ன அஞ்சிப் பயந்தவனும்
ஐவருட பாதம் அடிநோக்கித் தெண்டனிட்டு
அடுத்துமவன் தெண்டனிட்டு எடுத்தான் சுருளோலை

## புலந்திரன் ஓலைவாசிக்கிறது.

மடக்கோலை தானெடுத்து மன்னவனுந் தான்விரித்து
சுருளோலை தானவிழ்த்துத் துரிதமுடன் வாசிக்க
ஓலைச் சுருள்விரித்து வாசித்தா னுத்தமனும்
ஓலையின் வாசகத்தை யுத்தமனும் பார்க்கலுமே
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
அடித்தான் தலைமேலே கடகங் கழன்றுவிழ
மோதிரக் கையாலே மார்மே லறைந்துகொண்டான்
மணிக்கடகக் கையாலே மார்மே லறைந்துகொண்டான்
வேல்பொருதுங் கண்ணன் விழுந்து புரண்டழுதான்
தாம முடியான் தரைமேல் புரண்டழுதான்
மாலை முடியானும் மண்மேல் புரண்டழுதான்
இப்படி யாக இருக்கின்ற வேளையிலே
அங்கிருக்குந் தூதுவர்கள் அவசரமா யோடிவந்து
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தானிருக்கும்
மண்டபமே தேடியல்லோ மன்னவர்கள் வாறார்கள்
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி

## அல்லியைக் காணுகிறது.

ஓடைமலர்க் கண்ணாள் உட்கட்டில் போய்ப் புகுந்து
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் முன்னேவந்து
அல்லி யெதிரேவந்து அடிவணங்கித் தெண்டனிட்டார்
தெண்டனிட்டுத் தூதுவர்கள் திரும்பி யெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதார்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தான்பார்த்து
நீர்-யாருடைய தூதர் அறிய வுரையுமென்றாள்
என்றவுமே தூதுவர்கள் யார்பணியு மல்ல
ஒருவர் பணியுமல்ல உம்முடைய நற்பணிதான்
பேர்பெற் றுடைய பெருமாளே உம்பணிதான்
எனவே-நீரிங்கே வந்த தெனக்கறியக் கூறுமென்றாள்
அப்போது தூதுவர்கள் எடுத்துரைப்பா ராயிழைக்கு
உத்தமர்க ளவர் உத்தாரந் தானனுப்ப
அனுப்பிய ஓலைதன்னை அலைதாரன் தான்பார்த்து
ஓலைச் சுருள்விரித்து வாசித்தான் உத்தமனும்
தம்பி யிறந்தானென்று தனித்துப் புலம்புகிறான்
வேல்பொருதுங் கண்ணான் விழித்துப் புலம்புகிறான்
அந்த விசேஷ மதுசொல்ல வந்தோமென்றார்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தான்கேட்டு

## அல்லி புலந்திரனைக்காண கோலவுக்கு வருகிறது.

கழற்று முடிகழற்றிக் காரிழையார் கைகொடுத்து
வீர முடிகழற்றி மெல்லியர்கள் கைகொடுத்து
மகுட முடிகழற்றி மங்கையர்கள் கைகொடுத்து
அங்கி நிஜாரு அழகாகத் தான்களைந்து
பாவாடை யுள்ளுடுத்திப் பட்டாடை மேற்சாத்தி
ஆனந்த வாழ்மாரி அலரத் தலைசொருகி
பல்லக்கி லேறாமல் பாண்டிப் பெருமாளும்
தண்டிகையி லேறாமல் தாரார் குழலாளும்
கால்நடையாய்த் தானே கடுக வழிநடந்து

காற்றுடி போலே கடுக வழிநடந்து
எட்டடியும் ஓரடியாய் இட்டு மிகநடந்து
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
பேடைமயில் கண்ணாள் உட்கட்டில் போய்ப்புகுந்து
கோச வளநாடாள் கொலுவுக்கு முன்னேவந்தாள்
பிள்ளை புலந்திரற்குப் பெண்பெருமா ளேதுசொல்வாள்

## அல்லி புலந்திரற்கு சொல்லுகிறது

தருமர் வலுவிழந்தீர் தம்பிமார் தோளிழந்தீர்
வீமர் வலுவிழந்தீர் விஜயனார் தோளிழந்தீர்
உப்பிட்ட வாளை உறையுருவி விட்டாற்போல்
தப்பிவிட்டீர் நீருமிப்போ தம்பி புலந்திரரே
ஆறிவிடும் ஆறிவிடும் ஐயாவே ஆறிவிடும்
தேறிவிடும் தேறிவிடும் தேவரே தேறிவிடும்
என்று-ஆனந்த மார்பனை அணைத்து மடியில் வைத்து
மாலை முடியானை மடிமேலே கொண்டுசென்று
கொற்றவனார் கோபங் குணப்படுத்திக் கொண்டவளும்
மன்னவனார் கோபம் வசப்படுத்திக் கொண்டிருந்து
இப்படி யாக யிருக்கின்ற வேளையிலே
ஆறு யிரவர் அணிதிரளாம் பாண்டியரும்
பொன்னுமலை நாடாளும் அண்ணாவும் ஓடிவந்து
போரஞ்சா மன்னர் புலந்திரரைத் தான்பார்த்து
காடாண்ட பஞ்சவர்கள் நாடாள வந்தார்கள்
சுந்தரப் பஞ்சவர்கள் சுகமா யிருக்கிறார்கள்
ஆறிவிடும் ஆறிவிடும் ஐயாவே ஆறிவிடும்
தேறிவிடும் தேறிவிடும் தேவரே தேறிவிடும்
இப்படிக்கே சொல்லி யிருந்தார்கள் பாண்டியர்கள்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் நாயகமும்
ஓலைச் சுருளெடுத்து உத்தமியாள் கைப்பிடித்து
பவளசேனை மந்திரியைப் பட்டோலை வாசியென்றாள்
பவளசேனை தான்வாங்கி பட்டோலை தான்விரித்து

ஓலைச் சுருள்விரித்து வாசித்தா னுத்தமியும்
வாசித்த வாசகத்தைக் கேட்டந்த மெல்லியரும்

## அல்லியரசாணி புலந்திரனைக்கோபித்து வார்த்தை யுரைக்கிறது.

பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தான்கேட்டு
கதித்துக் கதும்பி கண்கள் நெருப்பாக
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
பக்கச் சதைதுடிக்கப் பத்தினியா ளேதுசொல்வாள்
போபோ புலந்திரரே போகவிடேன் தூதுக்கு
முன்னையும் பூசல் முடிந்து மிருக்குதே
முத்துமுடி பாண்டியனும் பட்டு மிருக்கிறனே
இப்பவும் பூசல் எழுப்புகிறார் பஞ்சவர்கள்
கொல்லநிற்பார் பஞ்சவர்கள் கூட்டி யிருப்பார்கள்
சும்மாடு கட்டிச் சுமப்பார்கள் பஞ்சவர்கள்
சுடலைக் கரைக்குந் தொடருவார் பஞ்சவர்கள்
ஆலோல மென்று அழுவார்கள் பஞ்சவர்கள்
இப்படி யாக இருக்கு மவர்கூட்டம்
போபோ புலந்திரரே போகவிடேன் தூதுக்கென்றாள்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு

## புலந்திரன் மறுத்துச் சொல்லுகிறது.

ஐவ ரரையற்கும் ஆழி வுசந்தார்க்கும்
அவர்க்கே தெரியாதே வுனக்கே தெரியுமோ
போகவிடை தாருமென்றான் போரஞ்சாப் புத்திரனும்
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளேதுசொல்வாள்
சோராவள நங்கை சுபத்திரையைப் போலேநான்
சடையாய்ச் சடைவிரித்துச் சன்னாசி வேடங்கொண்டு
பிலாக்கணஞ் சொல்லி யழமாட்டேன் புண்ணியனே
ஒப்பாரி சொல்லி யழமாட்டேன் உத்தமனே
போபோ புலந்திரனே போகவிடேன் தூதுக்கென்றாள்
போரஞ்சா மன்னர் புலந்திரரு மேதுசொல்வார்

என்னென்ன சொன்னாலும் இனிகேளேன் என்னாச்சி
போகவிடை தாருமென்றான் போர்விஜயன் புத்திரனும்
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளேதுசொல்வாள்
நல்ல தனத்திலே சொன்னாலுங் கேளானே
சொன்னாலுங் கேளானே சுந்தரப் பூமுடியான்
கடுத்த மொழியாகக் காளையற்கு நாமுரைத்தால்
அப்போது நிற்கானோ ஆனந்த வாழ்மார்பன்
பொற்கொடியா ளல்லியரும் புத்திரற்கு ஏதுசொல்வாள்
ஆருடைய புத்திரன்நீ என்றாளே அல்லியரும்
என்றுசொன்ன வார்த்தையை இந்திரருந் தான்கேட்டு
இவ்வுலகந் தானறியும் எம்பெருமாள் தானறிவார்
மண்டலங்கள் தானறிய மன்னவர்கள் தாமறிவார்
சோலை மலருடைய சொக்கருந் தாமறிவார்
ஆனை மலையுடைய அம்மனுந் தானறிவாள்
கவஞ்சு வளைத்த காளையுட புத்திரன்யான்
எட்டாத வில்வளைத்த விஜயனுட புத்திரன்யான்
என்று மவனுரைத்து ஏதுசொல்வா னல்லியர்க்கு
பொழுதுமே தானச்சு போகவிடை தாருமென்றான்
போகவிடை தாருமென்றான் போரஞ்சாப் புத்திரனும்
விடைதாரும் ஆச்சியென்று வேந்தனுந் தெண்டனிட்டான்
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளேதுசொல்வாள்
அங்கிருக்குந் தாதிகளி லதிலொருத்தி தனையழைத்து
பொன்னுமலை நாடாளு மண்ணவைக் கூப்பிடென்றாள்

## தாதிகள் பொன்னுமலைநாடானைக் கூப்பிடுகிறது.

அருளருளு மென்னாச்சி யப்படிக்கே யாகுதென்று
சொல்லப் பெற்றோ மென்று சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றோ மென்று சுறுக்கா யெழுந்திருந்து
பட்டெடுத்துக் கட்டி பலர்மகிழத் தங்களைப்போல்
எனுமிச்சம் பூப்பட்டு நன்றாய் வரிந்துடுத்தி
போறா ளவள்தாதி பொன்னா பரணமின்ன
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி

சித்திர வீதி தெருவும் பலதாண்டி
மாநகர மாளும் மகராஜன் மாளிசென்றாள்
பொன்னுமலை நாடாளும் அண்ணற் கெதிரில்வந்து
அண்ணற் கெதிரில்வந்து அடிவணங்கித் தெண்டனிட்டுத்
தெண்டனிட்டுத் தாதி திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதாள்
பொன்னுமலை நாடாளும் அண்ணுவுந் தான்பார்த்து
நீ-யார்பெண்ணே தாதி யறிய வுரையுமென்றான்
யார்பணியு மல்ல வும்முடைய திருப்பணிதான்
ஒருவர் பணியுமல்ல வும்முடைய நற்பணிதான்
பேர் பெற்றுடைய பெருமாளே வும்பணிதான்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தாதியென்றாள்
பொன்னுமலை நாடாளும் அண்ணுவுந் தான்கேட்டு
நீயிங்கே வந்த தெனக்கறியச் சொல்லுமென்றார்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் நாயகியும்
உம்மை யழைத்துவரக் கட்டளைக ளிட்டார்காண்
வாருமையா வென்றுசொல்லி வருந்தியே தெண்டனிட்டாள்
பொன்னுமலை நாடாளும் அண்ணுவுந் தான்கேட்டு
இந்நேர மங்கே யிருந்துநான் வந்தேனே
நானறியாக் காரியங்கள் உண்டோடி நாயகமே
ஏது வகையாக என்னை வரவழைத்தார்
வரவழைத்த காரியங்கள் வாய்திறந்து சொல்லுமென்றார்
தாமக் குழலாளும் தாதியவ ளேதுசொல்வாள்
இராஜாக்கள் காரியங்கள் நமக்கு வெளிப்படுமோ
கத்திரியர் காரியங்கள் கருமம் வெளிப்படுமோ
மந்திரி காரியங்கள் மருமம் வெளிப்படுமோ
என்னமோ ஏதோ வெனக்கொன்றுந் தெரியாது

## பொன்னுமலைநாடான் அல்லிகோலவுக்கு வருகிறது.

பொன்னுமலை நாடாளும் அண்ணு வெழுந்திருந்து
முத்து மிதியடியைத் தொட்டு மிகநடந்து
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி

வீதியும் வீதித் தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
கடையுங் கடைத்தெருவுங் கருமார வீதிவிட்டு
அங்காடி வீதிவிட்டு அரண்மனையி லுட்புகுந்து
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் முன்னேவந்து
எது வகையாக என்னை வரவழைத்தீர்
வரவழைத்த காரியங்கள் வாய்திறந்து சொல்லுமென்றார்
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளேதுசொல்வாள்
அண்ணுவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
போரஞ்சா மன்னன் புலந்திரனார் வீரியனும்
இவரையுங் காணுதற்கு ஆணழகன் போகவென்றான்
ஆலால முள்ளவனே ஆற்றிலே ஆதரித்து
காவடி தன்ஜலத்தில் கைகழுவி நீர்குடித்து
காவலனார் வீரியனே கண்ணுண்டாய்ப் பாருமென்றாள்
பொன்னுமலை நாடாளும் அண்ணுவுந் தான்கேட்டு
அருளருளு மென்னாச்சி அப்படியே யாகுமென்று
போரஞ்சா மன்னர் புலந்திரனார் முன்னேவந்து
இனிவாருந் தம்பியென்று இருவரு மெழுந்திருந்து
அத்தமுஞ் சத்தமும் அழைக்காதே ஆணழகன்
தாம முடியான் தனித்தா வடமசைய
சாத்திய பூணூலும் தனித்தா வடமசைய
வில்லுங்கை மார்பன் யணிகலமுங் கூட்டாதே
யானையுஞ் சேனையும் அணிகலமுங் கூட்டாதே
இருவருந் தானெழுந்து நடந்தார் துரிதமுடன்

## புலந்திரன் தர்மரைக் காணுகிறது.

வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
குருக்ஷேத்திர பூமி குருபூமி தேசம்வந்தான்
இவருட காவலிலே ஆணழகன் போய்ப்புகுந்தான்

தாரார் புகழுடைய தருமருக் கெதிரேவந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
தர்மரது சீர்பாதம் தார்வேந்தன் சுத்திபண்ணி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டு
ஆனந்த வாழ்மார்பன் அடிவணங்கி நிற்கையிலே
தாரார் புகழுடைய தருமரவர்பார்த்து
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
தூதுரைக்க வந்தீரோ சுந்தரப் பூமுடியாரே
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் முடிபெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
பெண்களைக் கொள்ளுவீர் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்
ஆலிலைபோ லேதழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்ற முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்கா ணென்று வாயார வாழ்த்தினர்
வாழ்ந்திடுவீ ரென்று மனதார வாழ்த்தினர்
தூதுரைத்து மீளுமையா சுந்தரப்பூ முடியாரே
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்திருந்தான் வேந்தர் பெருமாளும்

## புலந்திரன் கிருஷ்ணமூர்த்தியைக் காணுகிறது.

ஏழுலகை யாளுகின்ற வெம்பெருமாள் முன்னேவந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து

பாதமது துலக்கி பன்னீரால் சுத்திசெய்து
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கா லடிபணிந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டு
மாமனுர் பாதம் வணங்கிநின்ருன் மன்னவனும்
அம்மான்தன் பாதம் அடிவணங்கித் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவரைக் கண்டு மனமகிழ்ந்து
ஏழுலகை யாளுகிற யெம்பெருமாள் மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
தூதுரைக்க வந்தீரோ சுந்தரப்பூ முடியாரே
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திருப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
எதிர்த்தார் முடிபெறுவீர் எம்பெருமாள் பதம்பெறுவீர்
பிள்ளைகளைப் பெற்றிடுவீர் பேருண்டாய் வாழ்ந்திடுவீர்
போருக்குப் போவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
ஆலிலைபோல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போலே தழைத்து முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினுர்
ஆயர் திருக்கழுத்தில் அணிந்த பதக்கமது
திருமார்பி லிட்டதொரு திருப்பதக்கந் தான்வாங்கி
ஆனந்த மார்பனுக்கு அழகுபடச் சாத்தினுர்
தூதுரைக்கப் போமிடத்தில் சொல்லுகிறேன் கேளுமையா
ஒன்றுக்குப் பத்து ஒருநூற்றுக் காயிரமாம்
பத்துக்கு நூறு பழுதில்லாமல் உரைத்து
நாவு தவருமல் நல்வார்த்தை குன்ருமல்
சொல்லது தவருமல் சொற்செலவு சாயாமல்
சொல்லுக்குச் சொல்லுரைத்து வாருமையா சுந்தரமே
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்து
விடைபெற் றெழுந்திருந்தான் வேந்தர் பெருமானும்

## புலந்திரன் வீமனைக்காணுகிறது.

வெற்றி மதயானை வீமர்க் கருகில்வந்து
ஏழானை பலமுடைய இயல்வீமர் முன்னேவந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பன்னீரால் காலலம்பி பாத மதுதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
வெற்றி மதயானை வீம ரவர்பார்த்து
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
என்னைப் பெறுவாய் எதிர்த்தார் முடிபெறுவாய்
பிள்ளை பெறுவாய் பெருமாள் பதம்பெறுவாய்
நிற்பாய் நிலைதரிப்பாய் நீரரசை யாண்டிடுவாய்
கற்பதித்த தூண்போல கலங்கா தரசாள்வாய்
விற்பதித்த தூண்போல வெகுநா ளரசாள்வாய்
போருக்குப் போவாய் பொழுதோடே வென்றிடுவாய்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவாய்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினர்
வாழ்ந்திருப்பீ ரென்று மனமார வாழ்த்தினர்
தூதுரைக்கப் போமிடத்தைச் சொல்லுகிறேங் கேளுமையா
சகுனி தலையைத் தவிடு பொடியாக்கி
அம்பலங்கள் தோறும் இடித்துத் தவிடாக்கி
ஆஸ்தானந் தோறும் அடங்கலும் நீயிடித்து
ஒன்றுக்குப் பத்து ஒருநூற்றுக் காயிரமாய்
சொல்லு வழுவாமல் சொற்செலவு சாயாமல்
நாவு தவறாமல் நல்வார்த்தை குன்றாமல்
தூதுரைத்து மீளுமையா சுந்தரப்பூ முடியாரே
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்திருந்தார் வேந்தர் பெருமானும்

## புலந்திரன் அருச்சுனனைக் காணுதல்.

காண்டா புரமெரித்த காளையற் கெதிரில்வந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டு
ஐங்கால் வலம்வந்து அடிவணங்கித் தெண்டனிட்டு
காண்டா புரமெரித்த காளை யவர்பார்த்து
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
வாழ்வாய் வளர்ந்திடுவாய் வர்த்திரிப்பீ ருத்திரிப்பாய்
நிற்பாய் நிலைதரிப்பாய் நீரரசை யாண்டிடுவாய்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வாய்
விற்பதித்த தூண்போல வெகுகால மரசாள்வாய்
என்னைப் பெறுவாய் எதிர்த்தார் முடிபெறுவாய்
பிள்ளை பெறுவாய் பெருமாள் பதம்பெறுவாய்
மைந்தர்களைப் பெற்றிடுவாய் மகிழ்ச்சியாய் வாழ்ந்திடுவாய்
போருக்குப் போய்விடுவாய் பொழுதோடே வென்றிடுவாய்
வென்ற களரியிலே வீரபட்ட மாண்டிடுவாய்
கன்னிகளைக் கொண்டிடுவாய் காளைகளை யீன்றிடுவாய்
புத்திரரைப் பெற்றிடுவாய் பேருண்டாய் வாழ்ந்திடுவாய்
பிள்ளைகளைப் பெறுவாய் பிரபலமாய் வாழ்ந்திடுவாய்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினர்
உச்சி முகந்து உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கங்க ளெல்லாம் பரிவாகத் தான்தடவி
தூதுரைத்து மீளுமையா சுந்தரப்பூ முடியாரே
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தார் வேந்தர் பெருமானும்
ஈரல் புகுந்தார் இருவ ரருகில்வந்து

## புலந்திரன் நகுலசகாதேவரைக் காணுகிறது.

பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பன்னீரால் காலலம்பி பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
தூதுரைக்க வந்தீரோ சுந்தரப்பூ முடியாரே
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திருப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல வெருநா ளரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டம் கொண்டிடுவீர்
எதிர்த்தவரைச் சங்கரித்து எல்லை யரசாள்வீர்
மாதர்களை மாலையிட்டு மைந்தர்களைப் பெற்றிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வும் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காண் என்று மனங்குளிர வாழ்த்தினார்
வாழ்ந்திருப்பீ ரென்று மனமார வாழ்த்தினார்
தூதுரைக்கப் போமிடத்தை சொல்லுகிறேன் கேளுமையா
ஈரலர்ப்பூந் தாரானை எழுதினான் சித்திரத்தில்
அபிமன்ன ராசர்வை இங்கே யெதிர்வைத்து
செத்தவன் பிள்ளையென்று சற்றும் நினையாமல்
இறந்தவன் பிள்ளையென்று எண்ணியவன் பாராமல்
அம்பல வாசலிலே அங்கே படமெழுதி

அம்பலந் தானறிய அங்கேயவன் கட்டிவைத்தான்
தம்பியைக் கண்டுநீ தற்சோர்ந்து நில்லாதே
உடன்பிறப்பைக் கண்டுநீ உற்றஉயிர் சோராதே
கொம்பனையாள் பாடிசென்று கூடிவிளை யாடாதே
மைந்தரைக் கண்டுநீ மகிழ்ந்துவிளை யாடாதே
பிள்ளையைக் கண்டுநீ பித்தம் பிடியாதே
சொல்லு தவறாமல் சொற்செலவு சாயாமல்
நாவு தவறாமல் நல்வார்த்தை குன்றாமல்
தூதுரைத்து மீளுமையா சுந்தரப்பூ முடியாரே
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்தி விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்திருந்தார் வேந்தர் பெருமானும்
ஐவருட உத்தாரம் ஆணழகன் பெற்றுக்கொண்டு
தென்ன முடியானுஞ் சின்னாச்சி மாளிசென்றான்

## புலந்தரன் சுபத்திரையைக் காணுகிறது.

சோர வளநங்கை சுபத்திரையாள் முன்னேவந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பாதமது கழுவிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
மாதாவின் பாதம் மலர்தூவித் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவரைக் கண்டு சுபத்திரையும்
நீர்கொடுத்த கண்கள்ரண்டும் நீக்கி நிகர்விழியும்
கண்ணீர் கலங்கிடவே கட்டழகி யேதுசொல்வாள்
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திருப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல விளங்க அரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்

பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
எதிரியை வென்றிடுவீர் யெல்லையர சாண்டிடுவீர்
மாற்றானை வென்றிடுவீர் மண்டலத்தை யாண்டிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினார்
வாழ்ந்திருப்பீ ரென்று மனங்குளிர வாழ்த்தினார்
வாழ்த்தி விடைகொடுத்து மடிமேலே கொண்டிருத்தி
ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவும்
உம்மோடே கூடவிளை யாடுகிறா னென்றிருந்தேன்
பொன்னுலக நாட்டுக்கு எழுந்து நடந்துவிட்டான்
இவ்வுலகை விட்டு எழுந்து நடந்துவிட்டான்
பஞ்சவர்கள் என்மேல் பகைமுடித்தார் கண்டீரோ
பாரளந்தார் என்மேல் பகைமுடித்தார் கண்டீரோ
என்றுசொல்லி மங்கையரும் இருகண்ணால் முத்துதிர்த்தாள்
முத்துப்போல் கண்ணீரை முகமெல்லாஞ் சோரவிட்டாள்
பவளம்போல் கண்ணீரைப் பக்கமெல்லாஞ் சோரவிட்டாள்
போரஞ்சா மன்னர் புனந்திரரும் தான்பார்த்து
வந்துவிழுங் கண்ணீரை வெண்டுகிலால் தான்துடைத்து
மாதா வருந்துவது மன்னன்மனங் கொள்ளாமல்
இருக்கிறார் அபிமருஞ் செத்தார் புனந்திரரும்
உத்தரமே செய்வதற்கு உன்மகனா னிங்கேவந்தேன்
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சிநீர் ஆறிவிடும்
தேறிவிடும் தேறிவிடும் தேன்மொழியே தேறிவிடும்
என்ற-அப்போது சுபத்திரையாள் ஆரணங்கு ஏதுசொல்வாள்
ஐயோ புனந்திரரே அறிவுள்ள கண்மணியே
பொன்னு மணியே புனந்திர ராசாவே
கட்டி மணியே கலிங்கத்து ராசாவே
காலாளு மன்றியிலே கனகதண்டி யில்லாமல்

திருமேனிக் காவலனே சேவகனு மில்லாமல்
வாழ்விசையன் சீமானே வந்தவகை சொல்லுமென்றாள்
மைந்தர் புனந்திரரே வந்த வகையேது
வளநாடி புத்திரனே வந்தவகை சொல்லுமென்றாள்
அல்லியுட சீர்மகனே அறிய வுரையுமென்றாள்
அப்போது-போரஞ்சா மன்னர் புனந்திர ரேதுசொல்வார்
பெற்ற பெருமாளும் ஆழி யுசந்தாரும்
வேந்தர் பெருமாளும் விராடபுரம் வந்தமர்ந்து
என்னை வரவழைத்தார் என்னைப்பெற்ற ராஜாக்கள்
பேரப்பா ரப்பார் பெரியப்பார் தங்களுக்கு
விடையருள விட்டார்கள் வீரப் பெரும்புலிகள்
தோரண யானையாய் தூதுரைக்கப் போறேனென்றான்
சோரா வளநங்கை சுபத்திரையாள் தான்கேட்டு
கதும்பிக் கதும்பிக் கண்கள் எரிபறந்து
நீலவிழிக் கண்கள் நெருப்புத் தணலாகி
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
முன்னேயும் பூசல் முடிந்து மிருக்குதே
இப்போதும் பூசல் எழுப்புவார் பஞ்சவர்கள்
கொல்ல நினைப்பார்கள் குடியிருப்பார் பஞ்சவர்கள்
சும்மாடு கட்டிச் சுமப்பார்கள் பஞ்சவர்கள்
சுடலைக் கரைக்குத் தொடருவார் பஞ்சவர்கள்
ஆலோல மென்று அழுவார்கள் பஞ்சவர்கள்
இவருட சேதி யறியாளோ அல்லியரும்
அரசாண்ட நாயகியாள் அறிவழிந்தா ளானாளே
வையகத்தை யாண்டமெவள் மதிகுலைந்து போனாளே
இப்போதும் பிள்ளையைத்தான் பக்கல்வர விட்டாளே
மாற்றான் படைநடுவில் மைந்தரைப் போகவிட்டாள்
போபோ புனந்திரரே போகவிடேன் தூதுக்கென்றாள்
அப்போ புனந்திரரும் ஆச்சியர்க்கு ஏதுசொல்வார்
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
போகவிடை தந்தார்கள் போர்மன்ன ராசாக்கள்

நீரும்விடை தாருமென்றான் நித்திலநற் பூமுடியான்
சோரா வளநங்கை சுபத்திரையுந் தானெழுந்து

### சுபத்திரை புலந்திரனுக்கு பிரார்த்தனை செய்கிறது.

மண்ணளந்தான் பாதமது நோக்கி மனதிலெண்ணி
மஞ்சள் துணிநனைத்து மங்கையவள் தானெடுத்து
ஆயிரம் பொன்னெடுத்து அடைவுடனே தான்முடித்து
சோலை மலருடைய சொக்கரைத் தானினைத்து
ஆனை மலையுடைய அம்மனையுந் தானினைத்து
தொங்கலெனும் பூமுடியான் தூதுரைத்து மீண்டாக்கால்
தண்டிவரும் பொன்னையெல்லாம் சரிகைக் குடத்துடனே
கொண்டுவந்து கொட்டுவேன் கோபுர வாசலண்டை
மாற்றான் படைநடுவில் மைந்தர் புனந்திரரை
கண்ணுண்டாய்ப் பாருமென்று கர்த்தரைக் கைதொழுதாள்
மைந்தரைக் காருமென்று மங்கையரும் கைதொழுது
போய்வாரு மென்றுசொல்லிப் போக விடைகொடுத்தாள்
விடைபெற் றெழுந்திருந்தார் வேந்தர் பெருமாளும்

### புலந்திரன் துரோபதையைக் காணுகிறது.

தோரா வடிவழகி துரோபதையைத் தேடிவாரான்
தோரா வடிவழகி துரோபதையாள் தாதியவள்
ஓட்டம் பெருநடையாய் ஓடிவந்து உட்புகுந்து
தோரா வடிவழகி துரோபதையாள் முன்னேவந்தாள்
தோரா வடிவழகி துரோபதை நாயகியும்
ஆட்டமுங் கூத்தொளியும் ஆரணங்கு பார்த்திருந்தாள்
நட்டுமுட்டுச் சாலை நாட்டியங்கள் பார்த்திருந்தாள்
தாமக் குழலாளும் தாதிவந்து தெண்டனிட்டாள்
தோரா வடிவழகி துரோபதை நாயகியும்
இந்நாட்டா னல்லகாண் இத்திசையா னல்லகாண்
தென்னாடுஞ் சூழத் திசைவணங்க வந்தவன்காண்
வையை வளநாட்டாள் பெற்றெடுத்த புத்திரன்காண்
வாழ்பாண்டி நாட்டாள் பயந்தெடுத்த கண்மணிகாண்

போரஞ்சா மன்னர் புனந்திர வீரியரும்
பிள்ளை வருகுதென்று பின்னொருகால் தெண்டனிட்டாள்
மைந்தர் வருகுதென்று மறுத்தொருகால் தெண்டனிட்டாள்
தோரா வடிவழகி துரோபதையாள் தான்கேட்டு
மைந்தர் வருகுதென்று மாது மனங்குளிர்ந்து
பிள்ளை வருகுதென்று பூவை மனமகிழ்ந்து
ஆட்டமுங் கூத்துக்களும் அமருமென்று கையமர்த்தி
நட்டுமுட்டுச் சாலையை நாளையென்று கையமர்த்தி
அடிசிலம்பும் பாடகமும் ஆர்க்கக் குதித்திறங்கி
பூஞ்சிலம்பும் பாடகமும் பொங்கக் குதித்திறங்கி
கூடவே சோதிமின்னக் கொம்பே ரிடையாளும்
மற்றுமொரு வாதனத்தில் மாதரவர் வீற்றிருந்தார்
போரஞ்சா மன்னர் புனந்திர வீரியரும்
ஓடைமலர்க் கண்ணாளும் உட்கட்டிற் போய்ப்புகுந்து
தோரா வடிவழகி துரோபதையாள் தானிருக்கும்
ஆதனத்தின் முன்னேவந்தான் அல்லி திருமகனும்
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பாத மதுகழுவி பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
தோரா வடிவழகி துரோபதையுந் தான்பார்த்து
அப்பா மகனே அறிவுள்ள கண்மணியே
இப்பாரை யாளவே ஆனந்த வாழ்மார்பா
வருக வருகஎன் வள்ளலே வருகவென்றாள்
திருவருக பூவருக தேனே வருகவென்றாள்
குடிகாரர் கொத்தடிமை கொண்டு வருகவென்றாள்
அங்கத்துக் குள்ளே அமர்ந்திருக்கும் பாற்குடமே
சொக்கர்திரு வாசலுக்குத் தூண்டா மணிவிளக்கே
கப்பலுஞ் சோங்கும் கரைதுறையு முள்ளவனே

முத்துப் படுந்துறையும் முழுதிலுங் கொண்டவனே
பவளம் படுந்துறையும் பத்துலட்ச முள்ளவனே
வையை வளநாட்டை வாழ்விக்க வந்தவனே
வாழ்மதுரை ராச்சியத்தை ஆளவந்த ரத்தினமே
ஆயிரம் பாண்டியற்கு அழகான பேரமையே
ஆனந்த வாழ்மாரி அல்லி திருமகனே
மகுடதுரை அல்லியற்கு மனதான புத்திரனே
கண்ணான கண்மணியே கட்டழகன் சீர்மகனே
பொன்னான பொற்குடமே புலந்திர ராஜாவே
பொன்னுறமுஞ் சிற்றடியாய் பூவிரண்டும் கண்ணிலொற்றி
தங்கத்தாஞ் சிற்றடியைத் தார்குழலாள் கண்ணிலொற்றி
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்து
இந்திரரைத் தூக்கி எடுத்து மடியில்வைத்தாள்
அப்போ புலந்திரனும் ஆனந்த வாழ்மார்பன்
மடியைவிட்டுக் கீழ்குதித்து மாதாவின் முன்னேவந்து
மாதாவின் சீர்பாதம் வணங்கினான் மன்னவனும்
காண்கிறே னச்சியென்று கால்மேல் முடிசாய்த்தான்
தோரா வடிவழகி துரோபதையுந் தான்பார்த்து
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போலே விலங்கா தரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டஞ் சூட்டிடுவீர்
எதிரிகளைச் சங்கரித்து யெல்லைபர சாண்டிடுவீர்
மாற்றானைச் சங்கரித்து வையகத்தை யாண்டிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளை யீன்றிடுவீர்
பெண்களை மாலையிட்டுப் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்

மங்கைகளை மாலையிட்டு மைந்தர்களைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காண் என்று மனங்குளிர வாழ்த்தினாள்
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்து
புத்திரரைக் கொஞ்சி யெடுத்து மடியில்வைத்து
காலாறு மன்றியிலே கனகதண்டி யன்றியிலே
திருமேனிக் காவலனே சேவகனு மில்லாமல்
என்-வாழ்விசையன் சீர்மகனே வந்த வகையேது
என்-வளநாட்டுப் புத்திரனே வந்த வகையேது
ஏது வகையாக இங்கேவந்தீர் சொல்லுமென்றாள்
அப்போ புலந்திரரும் ஆச்சியருக் கேதுசொல்வான்
ஆச்சி நீர்கேளும் அடியேன் ஒருவார்த்தை
என்னாச்சி நீர்கேளும் இன்ன மொருவார்த்தை
பெற்ற பெருமாளும் பிரிய முடையவரும்
ஐவ ரரையரும் ஆழி யுயர்ந்தாரும்
பேரப்பா ரப்பார் பெரியப்பா தங்களுக்கும்
விடையருள விட்டார்கள் வீரப் பெரும்புலிகள்
தோரண யானையாய் தூதுரைக்கப் போறேனென்றான்
துங்கீலங் கண்ணனும் தூதுரைக்கப் போறேனென்றான்
தோரா வடிவழகி துரோபதையுந் தான்கேட்டு
மைந்தர் முகம்நோக்கி மாதாவும் ஏதுசொல்வாள்
மாபாவி வாசலுக்கு மன்னவரே போறீரோ
அரும்பாவி வாசலுக்கு ஐயாநீர் போறீரோ
பெரும்பாவி வாசலுக்குப் புத்திரரே போறீரோ
தூதுரைக்கப் போமிடத்தைச் சொல்லுகிறேன் கேளுமையா
பாசத் திளவரையர் படைகூட்டந் தன்னுடனே
யானையின்மேல் நீயேறி அவ்வீதி போம்போது
கச்சாயம் வேண்டிக் களையாகி வந்தாலும்
கச்சாயந் தீண்டாதே கண்ணிலான் மாளிகையில்
தண்ணீர்க் களையாகித் தாகமெடுத்தாலும்

தாகந் தணியாதே தனஞ்சயனார் மாளிகையில்
வெற்றிலை வேண்டி விருப்பமது கொண்டாலும்
வெற்றிலை கொள்ளாதே வேந்தர் கடைத்தெருவில்
சுண்ணும்பு கொள்ளாதே சூதுள்ள வாசலிலே
அடைகாயும் நஞ்சிடுவார் ஆனந்த மார்பனுக்கு
அடைகாய் தீண்டாதே ஆணழகன் அம்பலத்தில்
வாசனை கொண்டுவந்து வகையா யெடுக்கவென்பார்
வாசனைகள் தீண்டாதே வலுவாயன் அம்பலத்தில்
பொய்யா தனமிடுவார் பொற்கைவள பாண்டியரே
ஆதனஞ் சென்றேருதே ஆனந்த வாழ்மார்பா
கட்டுங் கயிறும் கயிறுக ளத்தனையும்
இந்தாரு மென்று எடுத்தவன் கைகொடுத்து
கண்ணிலான் பெற்றெடுத்த கபடன் திரியோதிரன்
கொலுமுக வாசலிலே கோடிபல வுரைப்பார்
உன்னைபவன் கண்டாலும் ஒருகோடி யெடுத்துரைப்பான்
சொல்லுக்குச் சொல்லுரையுஞ் சுந்திரப்பூ முடியாரே
தூதுக்குத் தூதுரையும் துந்நீலக் கண்ணரே
ஒன்றுக்குப் பத்து ஒருநூறுக் காயிரம்
சொல்லு வழுவாமல் சொற்செலவு சாயாமல்
நாவு தவருமல் நல்வார்த்தை குன்ருமல்
தூதுரைத்து மீளுமையா சுந்தரப்பூ முடியாரே
சிந்தை கவலையற்றுத் திரும்புமையா சுந்தரரே
மனதில் பயம்நீங்கி மன்னவரே போய்வாரும்
என்று மவளுரைத்தாள் ஏலப் பசுங்கிளியாள்
போரஞ்சா மன்னர் புலந்திரனர் தான்கேட்டு
அப்படிக்கே யாகுதென்று ஆச்சி சரணமென்ருர்
போய்வாறேன் ஆச்சியென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
தோரா வடிவழகி துரோபதையுந் தானெழுந்து
அமுதுண்ண வாருமையா என்று மவளெழுந்து
அமுதுண்ணு மண்டபத்தில் ஆரணங்கு முட்புகுந்து
செம்பொன் முக்கால்நிறுத்திச் செம்பொன் தளிகையிட்டாள்

புலிமுக்கால் தானிறுத்திப் பொன்னால் தடுக்குமிட்டாள்
வாழை யிலைபோட்டு மணிச்செம்பில் நீர்தெளித்து
தும்பை மலர்போலப் போசனமுந் தான்சொரிந்தாள்
தாளிதமும் பச்சடியுந் தன்னில் வகைக்கறியும்
கூட்டுக் கறியும் குழம்பு வகைக்கறியும்
பொரித்த பொரிக்கறியும் பொன்போல் சிறுபருப்பும்
ஆயிரத் தெட்டு அருங்கறியும் போசனமும்
சுத்திக் கறிபைவைத்துப் புத்துருக்கு நெய்வார்த்தாள்
வாருமையா சங்கமரே வந்தமுது கொள்ளுமென்றாள்
அப்போ புலந்திரரும் ஆச்சியருக் கேதுசொல்வார்
தம்பியை நான்கொடுத்துத் தற்சோர்ந்து நிற்கையிலே
உடற்பிறப்பை நான்கொடுத்து உற்றவுயிர் சோர்கையிலே
நெய்யமிர்த முண்டாலும் நிற்குமோ பொந்தியிலே
பாலடிசி லுண்டாலும் நிற்குமோ பொந்தியிலே
வேண்டாங்காண் ஆச்சியென்று வண்ணமுடி சாய்த்தான்
ஆழித் தடங்கையால் அழுத்தியவன் வீற்றிருந்தான்
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
தோரா வடிவழகி துரோபதையு மேதுசொல்வாள்
தூதுரைத்து மீளுமையா சுந்தரப்பூ முடியாரே
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்திருந்தார் வேந்தர் பெருமானும்
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி

## புலந்திரன் அல்லியரசாணியைக் காணுகிறது.

அவ்வீதி யாக அழகாகத் தானடந்தார்
பொன்னுமலை நாடாளும் அண்ணாவுந் தான்கூட
இருவரு மாக இசைந்து வழிநடந்தார்
குருக்ஷேத் திரபூமி குருபூமி தேசம்விட்டு
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
வாழ்மதுரை ராச்சியத்தில் வந்தா ரிருவருமாய்

பிறவா முடிதரித்த பெண்பெருமா ளண்டைவந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
மாதாவின் பாதம் மலர்தூவித் தெண்டனிட்டான்
தெண்டனிட்ட தன்மகனைக் கண்டந்த அல்லியரும்
வாழ்வாய் வளர்ந்திடுவாய் வர்த்திருப்பா யுத்திரிப்பாய்
நிற்பாய் நிலைதரிப்பாய் நீரசை யாண்டிடுவாய்
கற்பதித்த தூண்போலே கலங்கா தரசாள்வாய்
விற்பதித்த தூண்போலே வெகுநாளாய் வாழ்ந்திடுவாய்
என்னைப் பெறுவாய் எதிர்த்தார் முடிபெறுவாய்
பிள்ளை பெறுவாய் பெருமாள் பதம்பெறுவாய்
போருக்குப் போவாய் பொழுதோடே வென்றிடுவாய்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவாய்
மாற்றானைக் கொன்றிடுவாய் வையகத்தை யாண்டிடுவாய்
சினத்தவர்கள் பூமுடியைச் செண்டாட்ட மாட்டிடுவாய்
பகைத்தவர்கள் பூமுடியை பருந்தாட்ட மாட்டிடுவாய்
பிள்ளைகள் பெற்றிடுவாய் போதவே வாழ்ந்திடுவாய்
மைந்தர்களைப் பெற்று மகிழ்ச்சியாய் வாழ்ந்திடுவாய்
வாழ்வாய்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினாள்
வாழ்ந்திடுவா யென்று மனதார வாழ்த்தினாள்
வாயார வாழ்த்தி மனது மிகக்குளிர்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
உச்சி முகந்து உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கந் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
போய்வந்த காரியத்தைக் கேட்கலுற்று ளுத்தமியும்
அப்பா புனந்திரனே அழகுள்ள கண்மணியே
அருச்சுனனார் பெற்றெடுத்த ஆனந்த வாழ்மார்பா



புனந்திரனைத் தூதனுப்ப தருமர் சம்மதித்தது.

புண்ணியத்தால் வந்துதித்த பிள்ளை புனந்திரரே
சொக்க ரருளாலே துலங்கவந்த கண்மணியே
காலாளு மில்லாது கனகதண்டி யில்லாதே
திருமேனிக் காவலனே சேவகனு மில்லாதே
வாள்விசையன் சீர்மகனே வந்த வகைகளெல்லாம்
மைந்தன் புலந்திரனே வந்தவகை சொல்லுமென்ருள்
ஒன்றுங் குறையாமல் உத்தமனே சொல்லுமென்ருள்
போய்வந்த காரியத்தைப் புண்ணியனே சொல்லுமென்ருள்

## புலந்திரன் சேதி யுரைக்கிறது.

அப்போ புனந்திரனும் ஆச்சியற்கு ஏதுமெசால்வான்
மடியைவிட்டுக் கீழிறங்கி வந்து எதிரில்நின்று
கைகட்டி வாய்புதைத்துக் காளையுட புத்திரனும்
வளநாடி அல்லியற்கும் வாய்திறந்தங் கேதுசொல்வான்
ஆச்சி நீர்கேளும் அடியே னொருவார்த்தை
என்னுச்சி நீர்கேளும் என்னுடைய நல்வார்த்தை
பெற்ற பெருமாளும் பிரிய முடையவரும்
உடையாருங் கூடி உடனுன மண்டபத்தில்
ஐவ ரரையரும் ஆழி வுயர்ந்தாரும்
வேந்தர் பெருமாளும் மண்டபத்தில் வீற்றிருந்து
என்னை வரவழைத்து எனக்கிட்டார் கட்டளைகள்
பேரப்பா ரப்பா பெரியப்பார் தங்களுக்கு
விடையருள விட்டார்கள் வீரப் பெரும்புலிகள்
தோரண யானையாய் தூதுரைக்கப் போறேனென்ருன்
துங்கீலங் கண்ணனும் தூதுரைக்க போகவென்று
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தான்கேட்டு
கதித்துக் கனலாகிக் கண்க ளெரிபறந்து
நீலவிழிக் கண்கள் நெருப்புத் தணலாகி
பத்திய நாகம் பவ்ளம்போல் கண்சிவந்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து

சூரிய மண்டலத்தை எட்டிச் சுவாலயமாய்
குன்றிபோல் கண்சிவந்து கோப மதிகமதாய்
சீர்மதுரைக் குள்ளே திருவாயின் வாயிலுள்ளே
கட்டிவரும் பாற்குடங்கள் காவலனுர் வாசலிலே
எட்டி வரவிடுவார் எம்முடைய வாசலுக்கு
இத்தனையும் தள்ளிவிட்டு ஏனேநீ போறேனென்முய்
அப்பாநீ போனல் அடியேன் பொறுப்பேனே
மைந்தாநீ போனல் மனது தரிப்பேனே
உள்ளந் தரித்திடுமோ உத்தமனுர் புத்திரனே
அறிவா யறிவாய் அடியேன் குடிவிளங்க
அடியேன் குடிவிளங்க வந்துதித்த ஆணழகா
எங்கள் குடிவிளங்க வந்துதித்த ரத்தினமே
மன்னுவுன் பூமுடிக்கு வாட்டங்கள் வந்துதென்ருல்
தென்னுவுன் பூமுடிக்கு தீங்குகள் வந்துதானல்
ஆரு யிரவர் அணிதிரளாம் பாண்டியரும்
ஆரு யிரவரும் அடியவளும் நான்கூட
ஆளும் அரசும் அனலிலே பாய்ந்திடுவோம்
பொன்னுமலே நாடாளும் அண்ணவும் பாய்ந்திடுவார்
போகாதே போகாதே புண்ணியனுர் சீர்மகனே
என்று மவளுரைக்க ஏதுசொல்வா னிந்திரனும்
தோரா வடிவழகி துரோபதையா ளென்னுச்சி
சோரா வளநங்கை சுபத்திரையா ளென்னுச்சி
மஞ்சள் துணியெடுத்து மலராமர் தமைநினைந்து
சொக்கப்பொன்னைத் தானெடுத்து சுவாமியைத் தானினைந்து
முடிப்பெடுத்துக் கட்டினுர் மொய்குழலார் ஆச்சியர்கள்
போகவிடை தந்தார்கள் போர்விசையன் தேவியர்கள்
நீரும்விடை தாருமென்றுன் நித்திலநற் பூமுடியான்
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளேதுசொல்வாள்
சீறி எழுந்திருந்து சிங்கக்குட்டி போல்கதும்பி
வாளுருவிக் கைபிடித்து மாதுநல்லா ளல்லியரும்
சிம்மா தனத்தைவிட்டுத் திகழக் குதித்திறங்கி

எட்டடியு மோரடியாய் விட்டு மிகநடந்தாள்
பத்தடியு மோரடியாய் விட்டு மிகநடந்தாள்
வேகமாய்த் தானடந்தாள் வேல்பொருதுங் கண்ணாளும்
ஆங்காரந் தன்னுடனே அல்லியவள் ஓடிவந்து
இவருட காவலிலே ஆணழகி போய்ப்புகுந்து
காண்டா வனமெரித்த காளை யெதிரில்வந்து
அருச்சுனர்க்கு முன்பாக அல்லியவள் வந்திருந்து
வில்லாளி பார்த்தருக்கு மெல்லி யெடுத்துரைப்பாள்

## அல்லிக்கும் அருச்சுனர்க்கும் தர்க்கம்.

அறியா தறியுமோ ஆனந்த வாழ்மார்பா
முத்துசூழ் நன்னாடு முழுதிலும் அவனறியான்
மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
பொய்கை யறுகாதம் பூமதுரை முக்காதம்
வைகை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
ஐம்பத் தறுகாதம் ஆணழகர் ராச்சியந்தான்
முத்துப் படுந்துறைகள் மூன்றுலட்சங் கோடியுண்டு
பவளம் படுந்துறைகள் பத்துலட்சங் கோடியுண்டு
இத்தனையுந் தானிருக்க என்தனுட புத்திரன்காண்
என்று மறியானே வுன்தனுட புத்திரனும்
பட்டணத்தி லுள்ள படைமன்னர் தாமறியார்
கொத்தளத்தி லுள்ள குடிபடைகள் தாமறியார்
அறியா தறியுமோ ஆனந்த வாழ்மார்பா
சிறியவனுக் கேது தெரியவரும் ராசாவே
அவனை யனுப்புதற்கு நியாயமுண்டா கட்டழகா
உனக்கும் பெரியவர்க ளுண்டோதான் வையகத்தில்
அண்ட முலகளந்த ஆதிநா ராயணரும்
ஆதிநா ராயணரும் அவர்போனா லாகாதா
தக்க புகழுடைய தருமர்போனா லாகாதா
வெற்றி மதயானை வீமர்போனா லாகாதா
நித்திலநற் பூமுடியாய் நீர்போனா லாகாதா

இன்னஞ் சிறியவர்கள் இருவர்போனு லாகாதா
நகுல சகாதேவ ராஜர்போனு லாகாதா
அறியானை போகவிட நியாயமுண்டோ வுந்தனுக்குத்
தெரியாப் புலந்தரரை போகவிட லாகாது
போபோ புலந்தரரைப் போகவிடேன் தூதுக்கு
என்று மவள்சீறி எடுத்துரைத்தா ளல்லியரும்
காண்டா வனமெரித்த காளை யதுகேட்டு
வில்லாளி பார்த்தர் விஜய ரெடுத்துரைப்பார்
அல்லி முகம்பார்த்து அர்ச்சுன னு மேதுசொல்வார்
ஆளப் பிறந்த அபிமரைப் பெற்றுப்போல்
தாம முடியான் கடோர்க்கஜனைப் பெற்றுப்போல்
அந்தாலந் தீர்த்த அரவானைப் பெற்றுப்போல்
போரஞ்சா மன்னன் புலந்தரனைப் பெற்றேனே
மாலை முடியானை வழியில்கண் டெடுத்தேனே
அசலார்கள் பிள்ளையென்று தோணு தனுப்பினேனே
தூரத்தார் பிள்ளையென்று தோணு தனுப்பினேனே
என்பிள்ளை யாகையினுல் அனுப்பத் துணிந்தேனே
பெற்றபிள்ளை யாகையினுல் போக அனுப்பிவிட்டேன்
நான்பெற்ற பிள்ளையென்று தூதுக் கனுப்பிவிட்டேன்
என்பிள்ளை தூதென்றால் பின்னொருகால் வார்த்தைசொன்னுய்
மைந்தரைத் தூதென்றால் மறுத்தொருகால் வார்த்தைசொன்னுய்
என்றுமவர் கோபித்து ஏதுசொல்வா ரருச்சுனரும்
முத்து விரல்சுழற்றி மூக்கின்மேல் கையைவைத்தார்
பவள விரல்சுழற்றிப் பல்லின்மேல் கையைவைத்தார்
தங்க விரல்சுழற்றித் தாடையின்மேல் கையைவைத்தார்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் கோபங்கொண்டு
அருச்சுனரைத் தான்பார்த்து அல்லியவ ளேதுசொல்வாள்

**அல்லியரசாணி அருச்சுனன்மேல் கோபிக்கிறது-**

எடுத்தெடுத்துச் சொல்லுறதும் என்சொல் மறைக்கிறதும்
அத்தனைக்கும் வந்த கெருவ மடக்குதற்கு
எடுத்தா பெரியகத்தி யிருதுண்டாய் போட்டிடுவேன்

கத்தி யெடுத்துவா கடுகெனவே வெட்டிடுவேன்
என்று மவள்சீறி யெக்கலித்தப் பல்சீறி
மண்டியிட்டுச் சுற்றுகிருள் மாதுநல்லா ளல்லியரும்
தாமக் குழலாளும் தாதியவ ளோடிவந்து
அல்லிக்கு முன்னேவந்து அடிவணங்கித் தெண்டனிட்டாள்
அல்லி-கைத்தலத்தை தான்பிடித்துக் கட்டழகி யேதுசொல்வாள்
ஆனைகட்டி வாழ்ந்தாலும் ஆனந்த வாழ்மாரி
ஆளன் பெருமை வேணுமம்மா ஆரணங்கே
குதிரைகட்டி வாழ்ந்தாலும் கொத்தார் குழலியரே
கொண்டார் பெருமை வேணுமம்மா கொம்பனையே
தங்க மதிலேறித் தானடந்து வாழ்ந்தாலும்
தாலிப் பெருமை வேணுமம்மா தையலரே
மஞ்சட் பெருமையது வேணுமம்மா தையலரே
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சியரே ஆறிவிடும்
தேறிவிடும் தேறிவிடும் தேவியரே தேறிவிடும்
தணியுந் தணியுமம்மா தனஞ்செயனுர் தேவியரே
என்று மவளுரைத்தாள் ஏந்திழையார் தாதியரும்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் நாயகியும்
கொம்பனையாள் கோபங் குணப்படுத்திக் கொண்டவளும்
மங்கைநல்லாள் கோபம் வசப்படுத்திக் கொண்டவளும்
பிடித்த பிடியோடே பொன்மதுரை கொண்டுவந்தாள்
அணைத்த பிடியோடே அணிமதுரை கொண்டுவந்தாள்
வாழ்பாண்டி நாடாளும் வையைவள நாடுவந்தாள்
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
ஓடைமலர்க் கண்ணுள் உட்கட்டிற் போய்புகுந்தாள்
சிம்மா தனத்தருகே சென்ருளே அல்லியரும்
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் ஓடிவந்தார்

## அல்லியைப் புலந்தரன் காணுகிறது.

அல்லிக் கெதிர்வந்து அடிவணங்கித் தெண்டனிட்டு
போனதொரு காரியங்கள் புறத்தியிலே கேட்டிருந்தேன்

நீசென்ற காரியங்கள் நிண்ணயங்கள் நானறிவேன்
அருச்சுனரும் நீயும் அடுக்குமோ யுத்தஞ்செய்ய
நீ-கோபித்துக் கண்சிவந்து கொல்லத் துணிந்ததுவும்
எல்லா மறிவேன்காண் என்னுடைய ஆச்சியரே
போகவிடை தாருமென்று போரஞ்சாப் புத்திரனும்
அப்போது அல்லியரு மாரணங்கு ஏதுசொல்வாள்
மைந்தர் முகம்நோக்கி மாதா எடுத்துரைப்பாள்
வம்புகள் பேசி விகடங்கள் பண்ணுதற்கு
வீம்புகள் பேசி விகடங்கள் பண்ணுதற்கு
விகடங்கள் பண்ணுதற்கு விஜயன் மகனல்லோ
என்று மவளுரைத்து எழுந்து நடக்கலுற்றாள்

## சொக்கர் கோவிலுக்கு அல்லி போகிறது.

மண்ணளந்தான் பாதமது நோக்கி மனதிலெண்ணி
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
வையைக் கரையோரம் வந்தாளே அல்லியரும்
ஆடை களைந்து ஆபரணந் தான்களைந்து
பொய்கையில் ஸ்நானம்பண்ணிப் புனல்கங்கை நீராடி
ஈர மெடுத்து யிழைசேர்ந்த பட்டுடுத்தி
நனைந்த துகில்களைந்து நாகரிகப் பட்டுடுத்தி
சிவசிவா வென்று திருநீற்றுக் காப்பணிந்து
அரகரா வென்று அணிந்தாளே வெண்ணீறு
திக்கெங்கும் நோக்கித் திசையெங்கும் ஆதரித்து
ஆலால முண்ட அரனு ரடிபணிந்து
ஆதி சிவனை யடிவணங்கித் தெண்டனிட்டு
இந்திரரை நோக்கி யிரங்கியவள் தெண்டனிட்டு
ஐயனே மெய்யனே ஆயிரங்கண் ணிந்திரனே
பொய்சொல்வார்க் கெல்லாம் புறங்காக்கும் புண்ணியனே
மெய்சொல்வார்க் கெல்லாம் விளக்கொளியாய் நின்றவனே
நாற்பத்தெண் ணுயிரம் ரிஷிகளையுந் தெண்டனிட்டு

சுற்றி வளையவந்து செவியிலொரு பூச்சொருகி
வைய்க் கரையைவிட்டு வாருளே அல்லியரும்
சொக்கருட ஆலயத்தில் சுந்தரியும் போய்ப் புகுந்து
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டுச்
சுவாமிக்கும் அம்மனுக்கும் சடுதியிலே வந்துநின்று
சொக்கரைத் தான்பார்த்து தோகைநல்லா ளேதுசொல்வாள்
அம்மனைத் தான்பார்த்து அல்லியரு மேதுசொல்வாள்
தொங்கலெனும் பூமுடியான் தூதுரைத்து மீண்டாக்கால்
சிந்தனைக ளில்லாமல் சிறுவன்வந்து சேர்ந்தாக்கால்
அண்ணு மலையார்க்கு ஆடுகிற பெண்ணிடுவேன்
உண்ணு முலையார்க்கு உடைபோடப் பெண்ணிடுவேன்
தண்டிவரும் பொன்னையெல்லாம் சரிகைக் குடத்துடனே
கொண்டுவந்து கொட்டுவேன் கோபுர வாசலிலே
தூதுரைக்கப் போகுதற்குச் செலவருள வேண்டுமென்ருள்
உத்தரவு தாருமென்று சிற்றடிக்குத் தெண்டனிட்டாள்
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டாள்

## சொக்கர் அல்லிக்கு வரம்கொடுத்தது.

அப்போது சொக்கர் அம்மன் மனமகிழ்ந்து
போக விடைகொடுத்தார் புலந்திர ராசருக்கு
வாழ்த்தி விடைகொடுத்தார் வாளெடுத்துக் கைகொடுத்தார்
மாயத் திருநீற்றை அள்ளியிட்டார் மங்கையர்க்கு
வண்ணலட்சஞ் சேனைகளை வரவிடுவேன் பின்னுலே
சிந்தனைக ளில்லாமல் சிறுவனவன் வந்திடுவான்
மனக்கவலை யில்லாமல் மன்னனவன் வந்திடுவான்
போக அனுப்பிவிடும் புலந்தர ராசாவை
என்று விடைகொடுத்து இருந்தாரே சொக்கலிங்கம்
விடைபெற்று மீண்டாளே மேன்மையுட னல்லியரும்
ஆலயத்தை விட்டுமல்லோ ஆரணங்கு வாருளே
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி

சித்திர வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
ஓடைமலர்க் கண்ணுளும் உட்கட்டில் போய்ப்புகுந்து
போரஞ்சா மன்னர் புலந்தரரைத் தானழைத்து
சொக்கர் திருநீற்றைச் சுந்தரியும் அள்ளியிட்டு
சுவாமியார் தான்கொடுத்த திருநீற்றை அள்ளியிட்டு
வாழ்த்தி விடைகொடுத்து வாளெடுத்துக் கைகொடுத்து
போய்வாரு மென்று பொருந்தி விடைகொடுத்தாள்
விடைபெற் றெழுந்திருந்தார் வேந்தர் பெருமானும்
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
தெத்துத் தெருக்கடந்து தேரோடும் வீதிவிட்டு
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
பாட்ட னரண்மனையைத் தேடிவந்தா ரிந்திரரும்

## புலந்திரன் பாட்டன்மார் அரண்மனை வருகிறது.

ஆரு யிரவர் அணிதிரளார் முன்னேவந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருந் தான்வார்த்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
ஆரு யிரவர்க்கும் அடிவணங்கித் தெண்டனிட்டான்
தெண்டனிட்ட இந்திரனைக் கண்டந்தப் பாண்டியர்கள்
உள்ளங் குளிர்ந்து உடம்பெல்லாம் பூரித்து
தேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
மனது மகிழ்வாக மைந்தரை வாழ்த்தலுற்றார்
வாழ்வீர் வளர்வீர் வாழ்ந்திருப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போல கலங்கா தரசாள்வீர்

விற்பதித்த தூண்போலே விலங்கா தரசாள்வீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டஞ் சூட்டிடுவீர்
எதிரிகளைக் கொன்றிடுவீர் எல்லையர சாண்டிடுவீர்
மாற்றானைக் கொன்றிடுவீர் வையகத்தை யாண்டிடுவீர்
பகைத்தார்கள் பூமுடியைப் பருந்தாட்ட மாட்டிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளை யீன்றிடுவீர்
மங்கையரை மாலையிட்டு மைந்தரை யீன்றிடுவீர்.
பெண்களை மாலையிட்டுப் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
ஆலிலை போல்தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்ற முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்தா னென்று மனங்குளிர வாழ்த்தினார்
வருக வருகஎம் வள்ளல் வருகவென்றார்
திருவருக பொன்வருக தேவேந் திரன்வருக
அதிகார அச்சுதனே அப்பா வருகவென்றார்
குடிகார கொத்தடிமை கொண்டு வருகவென்றார்
அட்டத்துக் குள்ளே அமர்ந்திருக்கும் பாற்குடமே
சொக்கர்திரு வாசலுக்குத் தூண்டா மணிவிளக்கே
கப்பலுஞ் சோங்குங் கரைதுறையு முள்ளவனே
சங்கீன்ற முத்துஞ் சலாப முடையவனே
பவளம் படுந்துறையும் பத்துலட்ச முள்ளவனே
எங்க-ளாரு யிரவர்க்கும் அழகான கண்மணியே
அல்லியம்மாள் பெற்றெடுத்த அழகு புலந்திரனே
வாருமையா வென்று மடிமேலே கொண்டணைத்தார்
மைந்தர் புலந்திரரை மடிமேலே கொண்டணைத்தார்
பொன்னுறமுஞ் சிற்றடியை பூவான கண்ணிலொற்றி
தங்கத்தாஞ் சிற்றடியைத் தங்களிரு கண்ணிலொற்றி
ஐயா புலந்திரரே யானுரைக்க நீர்கேளும்
காலாளு மில்லாத கனகதண்டி யில்லாதே

திருமேனி காவலனே சேவகனு மன்றியிலே
வாழ்விஜையன் சீர்மகனே வந்த வகையேது
மைந்தா புலந்திரனே வந்த வகையேது
வளநாடி புத்திரனே வந்தவகை சொல்லுமென்றார்
போரஞ்சா மன்னர் புலந்திரரு மேதுசொல்வார்

## புலந்திரன் சேதியுரைக்கிறது.

ஐயாவே கேளும் அடியே னொருவார்த்தை
என்னையா நீர்கேளும் எந்த னிடவார்த்தை
ஐவ ரரையரும் ஆழியு சந்தாரும்
வேந்தர் பெருமாளும் ஆழியு சந்தாரும்
உடையாருங் கூட வுடனன மண்டபத்தில்
எல்லவரும் வந்திருந்து என்னை வரவழைத்தார்
என்னை வரவழைத்து எனக்கிட்டார் கட்டளைகள்
பேரப்பா ரப்பா பெரியப்பா தங்களுக்கு
விடையருள விட்டார் வீரப் பெரும்புலிகள்
தோரண யானையார் தூதுரைக்க யான்போறேன்
துன்னிலங் கண்ணுநான் தூதுரைத்து வாறேனையா
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
ஆரு யிரவர் அணிதிரளார் தாம்கேட்டு

## புலந்திரனைப்பற்றிப் பாண்டியர்கள் பரதவிக்கிறது.

சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
நாராசங் காய்ச்சி நடுச்செவியில் விட்டாற்போல்
போரஞ்சா மன்னர் புலந்திரற்கு ஏதுசொல்வார்
அறிவீர் தெரிவீர் அடியேன் குடிவணங்க
அடியேன் குடிவணங்க வந்துதித்த ஆணழகா
மன்னுவுன் பூமுடிக்கு வாட்டங்கள் வந்ததானல்
நாங்க ளனைவோரும் நாடாளுங் கன்னியரும்
ஆளும் அரசும் அனலிலே பாய்ந்திடுவோம்
போபோ புலந்திரனே போகாதே யென்றுரைத்தார்

அப்போ புலந்திரரும் அவ்வார்த்தைக் கேதுசொல்வார்
ஐவ ரீரையர்க்கும் ஆழியு சந்தார்க்கும்
அவர்க்கே தெரியாது வுமக்குத் தெரியுமோதான்
போக விடைதாரும் போய்வாறேன் தூதுக்கென்றான்
ஆரு யிரவர் அணிதிரளாம் பாண்டியர்கள்
மைந்தர் புலந்திரற்கு மறுவார்த்தை யேதுசொல்வார்
ஐவருந் தேவியரும் ஆரணியம் போனபின்பு
மன்னவருந் தேவியரும் வெண்கா டுறைந்தபின்பு
காவலருந் தேவியருங் காடுறைந்து போனபின்பு
உனக்-கென்னகுறை செய்துவைத்தோ மிந்திர ராசாவே
ஏதுகுறை செய்துவைத்தோம் எங்களிரு கண்மணியே
மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
பொய்கை யறுகாதம் பூமதுரை முக்காதம்
மதுரையைம்பத் தறுகாதம் ஆளவென்று பட்டங்கட்டி
முத்துசூழ் நன்னாடு முழுதிலும் உன்னதென்று
பட்டணத்தி லுண்டான படைமன்னர் உன்னதென்று
பாசத் திளவரையார் பறைகொண்டு சாற்றுவித்தோம்
பாசத் திளவரையர் பட்டந் தரிப்பித்தோம்
என்ன குறையாகப் போறீர்கா ணிந்திரரே
ஏது குறையாகப் போறீர்கா ணிந்திரரே
என்று மவருரைக்கக் கேட்டார் புலந்திரரும்
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
சிற்றுடம்பு வேர்த்து சிறுகண் சிவப்பேறி
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குண்ணுபோல் கண்சிவந்து கோப மதிகரித்து
மடியைவிட்டுக் கீழ்குதித்து வந்துமுன்னே யேதுசொல்வான்
எங்கள்-ஐவருந் தேவியரும் ஆரணியம் உற்றபின்பு
மன்னவருந் தேவியரும் வெண்கா டுறைந்தபின்பு
காவலருந் தேவியருங் காடுறைந்து போனபின்பு
எத்தால் குறைச்சலென்று என்னையிங்கே விட்டுவிட்டார்
என்னையட மானமிட்டு அடகிட்டுக் கொண்டாரோ

ஒற்றியிட்டு பஞ்சவர்கள் ஓலையிட்டுக் கொண்டாரோ
கண்ணோட்டம் பஞ்சவரைக் கைவிலக்கிக் கொண்டீரோ
கொண்டாட்ட மெல்லாங் கொழுப்பின் மகிமையல்லோ
பணமுந் தனமும் பறையன் படைக்கிலையோ
பண்ணை கலவை பரட்டை புளிக்கரணை
தும்பை புளிகரணை தூதுவளை முள்கீரை
முன்னை முசுட்டை மூதாரிக் கீரையுடன்
உங்கள்-பாட்டனார் தேடும் பழம்பொருளைக் கண்டீரோ
உங்கள்-ஐயன்மார் தேடும் ஆஸ்தியென் றெண்ணிலையோ
எனக்குவிடை தாருமென்று இணையடிக்குத் தெண்டனிட்டான்
ஆரு யிரவர் அணிதிரளார் தான்கேட்டு
மௌனமாய்த் தானிருந்தார் மன்னர்துரை ராசாக்கள்
பொன்னுமலை நாடாளும் அண்ணாவு மேதுசொல்வார்

## பொன்னுமலைநாடான் புலந்திரனுக்கு உத்தரவு வாங்கிக் கொடுக்கிறது.

போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவை
ஆனந்த மார்பனை அனுப்ப விடைகொடுத்தால்
தாமன் முடியான் தனிச்சண்டை போடானே
போக விடைகொடுத்து அனுப்புங்கள் புண்ணியனை
என்ன-ஆரு யிரவர் அணிதிரளார் தான்கேட்டு
ஐயா புலந்திரரே அழகுள்ள கண்மணியே
போக விடைதருவேன் போரஞ்சா ராசாவே
மனம்பொறுத்து நில்லுமென்று மகுடமுடி ராசாக்கள்
கொடுத்தான் குமாரனுக்கு கூட வளநாடு
கொல்லுங் குதிரைகளாம் கூர்வளமாம் அம்புகளாம்
வெற்றிலைப் பெண்களிலே வேணநூ றாயிரமாம்
பச்சோலைப் பெண்களிலே பத்துநூ றாயிரமாம்
அத்தனையுந் தான்கொடுத்தார் ஆனந்த மார்பனுக்கு
பொன்னுமலை நாடாளு மண்ணாவுக் கேதுசொல்வார்
பெண்பெருமாள் பெற்றெடுத்த பிள்ளை புலந்திரனார்

தாம முடியார் தனித்தூது போகாதே
ஆளும் அரசு அடங்கலுந் தான்கூட்டி
கூடவே நீர்போய் குணப்படுத்தி வாருமென்றார்
மைந்தர் புலந்திரரை வரவழைத்து வாருமென்றார்
கோசவள நாட்டாரைக் கூட்டிவந்து சேருமென்றார்
பொன்னுமலை நாடாளும் அண்ணவுந் தான்கேட்டு
அருளருளு மென்னையா அப்படிக்கே யாகுதென்று
சொல்லப்பெற்றே னென்று சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றே மென்றுசொல்லிக் கும்பிட் டெழுந்திருந்தார்

## புலந்திரன் விடைபெற்றுக்கொண்டு போகிறது.

பேரஞ்சா மன்னர் புலந்திர ராசருக்கு
போக விடைகொடுத்தார் போர்விசைய பாண்டியர்கள்
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்திருந்தார் வேந்தர் பெருமானும்
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
தெத்துத் தெருத்தாண்டி தேரோடும் வீதிவிட்டு
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
கோசவள நாட்டான் கொலுக்கூடம் வந்தமர்ந்தான்
இவன்-இப்படி யாக யிருக்கின்ற வேளையிலே
பொன்னுமலை நாடாளும் அண்ண வெழுந்திருந்து
மதுரைப் பெருந்தெருவில் மண்டபத்தில் வந்திறங்கி
அங்குமொரு தூதுவரை ஆணழகர் தானழைத்தார்
தூதுவரும் வந்து தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு
தெண்டனிட்ட மன்னன் திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுது
என்னை யழைத்தபணி யேதுபணி சொல்லுமென்றார்
உன்னை யழைத்தது ஒன்றுங் குறைவுமில்லை
பறையறையு மன்னவனைச் சாம்பவனைக் கூப்பிடென்றார்
தோட்டியைத் தானழைத்து வாருமென்றார் மன்னவனும்

அருளருளு மென்னையா அப்படிக்கே யாகுதென்று
சொல்லப்பெற்றே னென்று சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றே னென்றுசொல்லிக் கும்பிட் டெழுந்திருந்து
எட்டடியு மோரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியு மோரடியாய்ப் பற்றி யவனடந்து
தோட்டி யருகில்வந்து தூதுவனு மேதுசொல்வான்
பொன்னுமலை நாடாளும் அண்ணவுந் தானழைத்தார்
அரைநாழிப் போதையிலே யழைத்துவா வென்றுசொன்னர்
வந்தாலே யாச்சுது வாராமல் நீயிருந்தால்
வாராமல் நீயிருந்தால் வல்லுயிரை வாங்கிடுவோம்
நிமிஷமரை நாழிகைக்குள் நீவருக வென்றுசொன்னர்
பறையறையு மன்னவனும் சாம்புவனும் தான்கேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மன்னன் மனநடுங்கி வார்த்தைக ளேதுசொல்வான்
என்னலே யேதுகுற்ற மெனக்கறியச் சொல்லுமென்றான்
சொல்லுமையா சுவாமியென்று தூதுவனைத் தெண்டனிட்டான்
அப்போது தூதுவனும் ஆணழக னேதுசொல்வான்
ராசாக்கள் காரியங்கள் நமக்கு வெளிப்படுமோ
க்ஷத்திரியர் காரியங்கள் நமக்கு வெளிப்படுமோ
மந்திரிகள் காரியங்கள் மருமம் வெளிப்படுமோ
தொடர்ந்துநீ வாடாவென்று எழுந்து நடக்கலுற்றார்
தூதுவனும் சாம்புவனும் துரிதமுட னேடிவந்தார்
பொன்னுமலை நாடாளும் அண்ணர்க் கெதிரில்வந்து
பறையனும் சாம்புவனும் பார்மன்ன னேதுசெய்தான்
தூர விருந்து தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு
தெண்டனிட்ட மன்னன் திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதான்
என்னை யழைத்தபணி யேதுபணி சொல்லுமென்றான்
பொன்னுமலை நாடாளும் அண்ணவு மேதுசொல்வார்

## சாம்புவனை பறையறையும்படி உத்தரவு கொடுத்தது.

பெண்பெற் றெடுத்த பிள்ளை புலந்திரனார்
தாம முடியான் தனித்தூது போகாதே
ஆளும் அரசும் அடங்கலும் பயணமென்று
சேனைப் படைத்தலைவர் திரள்வேந்தர் பயணமென்று
ஆனைப் படைத்தலைவர் அடங்கலும் வருகவென்று
குதிரைப் படைத்தலைவர் கொற்றவர் வருகவென்று
வருகவென்று சொல்லித் தெரியப் பறையறையும்
வாராம லேயவர்க ளிருந்துவிட்டா ராமானால்
ஊருக்கு மேற்கே உயிர்க்கழுவில் போட்டிடுவோம்
நாம மணிகட்டி நறுக்கிடுவோம் பூமுடியை
நாக்கோடே நாக்கரிந்து நகரிவிட்டு ஓட்டிடுவோம்
மூக்கோடே நாக்கரிந்து முன்முடியைச் சங்கரிப்போம்
அப்படிக்கே சொல்லி யறையும் பறையோசை
என்று மவருரைக்க ஏதுசொல்வான் சாம்புவனும்
அருளருளு மென்னையா அப்படிக்கே யாகுதென்று
சொல்லப்பெற்றே னென்று சுறுக்கா வெழுந்திருந்து
கூறப்பெற் றேனென்று கும்பிட் டெழுந்திருந்து
பொன்னுமலை நாடாளும் அண்ண எழுந்திருந்து
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
மாநகர மாளும் மகராசன் மாளிசென்று
கோசவள நாட்டான் கொலுவந்து வீற்றிருந்தார்
இப்படி யாக இவனிருக்கும் வேளையிலே

## சாம்புவன் பறையறைகின்றது.

பறையறையு மன்னவர்கள் பார்மன்ன ரோடிவந்து
வெள்ளியால் பறைகொண்டு வெங்கலத்தால் கோலுாணி
முத்தாலே பறைகொண்டு முழுவயிரக் கோலுாணி
ஆனைமே லேவைத்து அலர்தாரன் போடலுற்றான்
மதுரைப் பெருந்தெருவில் நடுவீதி வந்துசென்று

அடித்தார் பறையோசை அண்டங் கிடுகிடென்ன
வெள்ளியால் பேரிகை விருது முழக்கிவிட்டார்
தங்கத்தால் பேரிகை தானே முழக்கிவிட்டார்
என்னவென்று சொல்லி யறையலுற்ருர் பேரிகை
பெண்பெருமாள் பெற்றெடுத்த பிள்ளை புலந்திரனைத்
தாம முடியான் தனித்தூது போகாதே
ஆளும் அரசும் அடங்கலும் வாருமென்று
ஆனை பரிசேனை யடங்கலும் வாருமென்று
குதிரைப் படைத்தலைவர் கொற்றவர் வருகவென்று
சேனை படைத்தலைவர் சேர்ந்து வருகவென்று
வரவேண்டு மென்று விருது பறையறைந்தான்
வாராமல் நீங்கள் இருந்தீர்க ளாமானுல்
பிறவா முடி தரித்த பெண்பெருமா ளுத்திரவு
ஊருக்கு மேற்கே உயிர்க்கழுவில் போட்டிடுவோம்
தாம முடிகழற்றித் தறித்திடுவோம் பூமுடியை
மூக்கோடே நாக்கரிந்து முன்முடியைச் சங்கரிப்போம்
அப்படிக்கே யென்று அறைந்தார் பறையோசை
அறைந்த பறையோசை அந்நகரில் தான்கேட்டு

## சேனைகளெல்லாம் பயணப்பட்டு புலந்திரனிடம் சேருகிறது.

சிலமன்ன ரெல்லாம் திடுக்கிட் டெழுந்திருந்து
பலமன்ன ரெல்லாம் பயந்து எழுந்திருந்து
குலமன்ன ரெல்லாம் குலைநடுங்க ஓடிவந்து
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மனது கலங்கி மறுவார்த்தை சொல்லாமல்
முன்னே முரசெடுத்து முன்னணை மேற்போட்டார்
பின்னே முரசெடுத்து பின்னணை மேற்போட்டார்
சிலமன்ன ரெல்லோரும் சிவிகையின்மே லேறிஞர்
குலமன்ன ரெல்லோரும் குதிரையின்மே லேறிஞர்
பலமன்ன ரெல்லோரும் பல்லக்கி லேறிஞர்

ஆனதொரு மந்திரிக ளானையின்மே லேறினர்
பட்டர் புலவர் பதினெட்டு மந்திரிகள்
தூரத்து ராசாக்கள் துடர்ந்துவந்த மந்திரிகள்
காதத்து ராசாக்கள் கடந்துவந்த மந்திரிகள்
சிங்கம் கரடிபுலி சேர முழங்கிவர
யாளி கரடிபுலி யருகில் முழங்கிவர
சின்னத் தொனிமுழங்கச் சிலமன்னர் வாருர்கள்
முத்துக் குடைகவிய முடிமன்னர் வாருர்கள்
பவளக் குடைகவிய பலமன்னர் வாருர்கள்
தங்கக் குடைகவியத் தானடந்து வாருர்கள்
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருக்களெல்லாந் தான்தாண்டி
புலிமுக வாசலிலே வந்துமிக நின்ருர்கள்
அங்கு மொருதூதர் அருகாக வந்துநின்று
கோசவள நாட்டான் கொலுவுக்கு முன்னேவந்து
போரஞ்சா மன்னர் புலந்திரர்க்கு ஏதுசொல்வான்

## சேனைவந்த சமாசாரம் தூதன் சொல்லுதல்.

சேனையும் வந்ததென்று திசைநோக்கித் தெண்டனிட்டான்
படைமன்னர் வந்தாரென்று பார்நோக்கித் தெண்டனிட்டான்
போரஞ்சா மன்னன் புலந்திரனும் தான்கேட்டு
மகுட முடியசைக்கி மன்னவனும் தான்பார்த்து
யானைப் பணிக்கர்களை ஓடி யழையுமென்ருன்
அருளருளு மென்னையா அப்படிக்கே யாகுதென்று
ஓடி யழைத்தான் ஒருநொடியில் தூதுவனும்
யானைப் பணிக்கர்களில் ஆறுநூ ருயிரம்பேர்
யானைப் பணிக்கர்களில் அதிகாரி தானெழுந்து
ஏதுக் கழைத்தார்காண் என்னுடைய ராசாவும்
தூதுவனு மப்போது துரிதமுட னேதுசொல்வான்
ராசாக்கள் காரியங்கள் நமக்கு வெளிப்படுமோ

கத்திரியர் காரியங்கள் கலக்கம் வெளிப்படுமோ
மந்திரிகள் காரியங்கள் மருமம் வெளிப்படுமோ
என்னமோ ஏதோ எனக்கொன்றுந் தெரியாது
தொடர்ந்து வருகவென்று எழுந்து நடக்கலுற்றான்

## யானைப்பணிக்கர் இந்திரனைக் காணுகிறது.

யானைப் பணிக்கர்கள் ஆறுநூ றாயிரம்பேர்
அத்தனை பேர்களும் அவனருகி லோடிவந்தார்
தூதனுடன் கூடத் தொடர்ந்து வழிநடந்தார்
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
கோசவள நாட்டான் கொலுவுக்கு முன்னேவந்து
போரஞ்சா மன்னர் புலந்திர ராசருக்கு
யானைப் பணிக்கரெல்லாம் அடிவணங்கித் தெண்டனிட்டார்
தெண்டனிட்ட மன்னர் திரும்பி யெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதார்
கைதொழுது ராசருக்குக் கட்டழக ரேதுசொல்வார்
எங்களை யழைத்தபணி யேது கருமமென்றார்
உங்களை யழைத்தது வொன்றுங் குறைவுமில்லை
அத்தி புரம்போக யானைகொண்டு வாருமென்றார்
யானைப் பணிக்கர் அடங்கலு மேதுசொல்வார்
எவ்வானை கொண்டுவர வெங்க ளிளவரசே
மேகனோ மின்னனோ வெளிநாடங் கொண்டவனோ
கொம்பில் பெரியவனோ கொளம்புவிசை யுள்ளவனோ
தில்லைப் பதியோ சிவகாம சுந்தரனோ
கற்பக வல்லி கதித்த மதகளிறோ
பொற்புள்ள கொம்பு நிகள முடையவனோ
எவ்வானை கொண்டுவர எங்க ளிளவரசே
போரஞ்சா மன்னர் புலந்திரனு ரேதுசொல்வார்
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தனுட பேரமைந்த

ஆணு லழகுமன்னன் அருச்சுனனூர் பேரமைந்த
வில்லாளி பார்த்தன் விஜயனுட பேரமைந்த
அவ்வானை யெந்தனுக்குக் கொண்டுவர வேண்டுமென்றூர்
யானைப் பணிக்கர் அடங்கலுந் தான்கேட்டு
ஐயாவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
என்னையா நீர்கேளும் என்னுடைய நல்வார்த்தை
ஆளப் பிறந்த அபிமரைப் பாடிழந்து
முத்து முடிதரித்த ராஜாவுந் தானெழுந்து
ஆறெல்லா மண்டி அனலண்டித் தீயண்டி
கத்தி யலமழ்ந்து காட்டகத்தே போயிருந்து
பிள்ளை பகையாலே பெருங்கோபங் கொண்டதுவும்
தன்னிழலைத் தான்பார்த்து தவித்துப் புலம்புறதும்
ஆள்வரத்தைக் கண்டாலே அந்த மதயானை
தும்பிக்கை யைத்தூக்கிச் சுழட்டி யெறிந்துவிடும்
அவ்வானை முன்பாக அஞ்சுவோம் நாங்களையா
குலவானை முன்போகக் கூசுவோம் நாங்களையா
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்கேட்டு
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
அடங்காத கோபமுடன் ஆணழக னேதுசொல்வான்
அடுத்தடுத்து சொல்லுறதும் என்சொல் மறைக்கிறதும்
அத்தனைக்கும் வந்த கெருவம் அடக்கிடுவேன்
அஞ்சுவது மென்னை யதுவே வருகவென்றுன்
கூசுவதும் எண்ணுதே கொண்டு வருகவென்றுன்
அவ்வார்த்தை தான்கேட்டு ஆணழக ரேதுசொல்வார்
ஐயாவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
என்னையா நீர்கேளும் எங்களுட நல்வார்த்தை
அவ்வானை தான்பிடிக்க அவ்வனத்தே போனாலே
எங்களைக் கண்டாலே யெழும்பியது மேல்விழுந்து
தும்பிக்கை யைச்சுற்றி சுழற்றி யடித்துவிடும்
போன ஜெனங்களெல்லாம் பின்னேவரப் போறதில்லை

சென்ற ஜெனங்களெல்லாம் திரும்பிவந்து சேர்வதில்லை
பெண்டுகள் பிள்ளைகள் முகத்தில் விழிப்பதில்லை
மாளுவது நிச்சயங்காண் மதயானை தன்னாலே
உங்க ளடையாளம் ஏதாகிலுங் கொடுத்தால்
அடையாளந் தந்தாலே யானை பிடித்திடுவோம்
ஆனை பிடித்திடுவோம் அணிமதுரை சேர்ந்திடுவோம்
மத்தகந் தான்பிடித்து மதுரைவந்து சேர்ந்திடுவோம்
என்று மவருரைத்து இறைஞ்சியவர் தெண்டனிட்டார்
போரஞ்சா மன்னர் புலந்தரருந் தான்கேட்டு

## புலந்திரன் மோதிரங்கொடுத்து அருச்சுனன்பேர் கொண்ட யானையைக் கொண்டுவரச் சொன்னது.

கணையாழி மோதிரத்தைக் கழற்றியவன் முன்போட்டு
அடையாளங் கைகொடுத்து ஆனைகொண்டு வாருமென்றான்
போய்வாருமென்று பொருந்த விடைகொடுத்தான்
விடைபெற்ற மன்னர்களாம் வேந்தரெழுந்திருந்து
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு மெய்மறந்து
ஒருவர்க் கொருவர் உவமைகள் சொல்லிடுவார்
மூர்க்கன்சோ றுண்டகனை முடிந்தது இன்றோடே
அவிதின்சோ றுண்டகனை அற்றது இன்றோடே
போதுமையா சாமியென்று ஏகி வழிநடந்தார்
அவ்வீதி வீதி நடந்தார் அழகாக
தேரோடும் வீதி நடந்தார் அழகாக
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
தங்கள்தங்கள் மாளிகையில் தார்வேந்தர் போய்ப்புகுந்தார்

## தூதர் காட்டில் யானைக்குப் பயந்து இறந்து போவோமென்று நினைத்து தங்கள் பிள்ளைகள் பெண்ணுக்குக் கலியாணஞ் செய்கிறது.

வன்னி மரம்பிளந்து வாசலெல்லாம் பந்தலிட்டார்
ஈர்க்குப் பிளந்து இருகாதம் பந்தலிட்டார்

முத்துப் பிளந்து முக்காதம் பந்தலிட்டார்
பவளத்தால் கால்நிறுத்தி பதின்காதம் பந்தலிட்டார்
கன்னியர்க்குங் காளையர்க்குங் கலியாணஞ் செய்துவிட்டார்
விருந்துகள் தான்சமைத்து வேடிக்கை பார்த்தார்கள்
அப்போது மன்னவர்கள் ஆலோசனை செய்தார்கள்
மத-யானையைத் தான்பிடிக்க வனம்போய்த் திரும்புவோமோ
போய்த்திரும்பு வோமோ பிள்ளைமுகம் பார்ப்போமோ
மறித்துத் திரும்புவோமோ மைந்தர்முகம் பார்ப்போமோ
சாவோமோ பிழைப்போமோ வென்று மனதிலெண்ணி
தங்கள்தங்கள் பெண்டுகளைத் தார்வேந்தர் தானழைத்து
கொற்றப்போர் மன்னரெல்லாம் கோடிப் புடவையிட்டு
மற்றப்போர் மன்னரெல்லாம் கோடிப் புடவையிட்டு
வாய்க்கரிசி கைப்பிடித்து வாறூர்கள் மன்னரெல்லாம்
போகவிடை பெற்றுப் புறப்பட்டார் வீரரெல்லாம்
யானைப் பணிக்கர்களில் அதிகாரி முன்னடந்து
குதிரைப் பணிக்கர்களில் கொற்றவர்கள் பின்னடக்க
சேனைப் படைத்தலைவர் சிலவீரர் பின்னேவர
தெத்துத் தெருதாண்டித் தேரோடும் வீதிவிட்டு
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
அரண்மனை வீதிவிட்டு அங்காடி தான்தாண்டி
கடையும் கடைத்தெருவுங் கருமார வீதிவிட்டு
தெருவும் பலதிசையும் தேரோடும் வீதிவிட்டு
மாலை முடியார்கள் மதுரைக்குப் பின்னுறைந்தார்
காடு கடந்து கரிய மலைதாண்டி
ஆறு சுனைதாண்டி அதிக வனந்தாண்டி
ஓங்கி வளர்ந்ததொரு மூங்கில் வனந்தாண்டி
சிங்கம் உலாகொடுக்கும் செந்நாய் வனந்தாண்டி
கரடி புலாகொடுக்கும் கரடி வனந்தாண்டி
கணையாழி கைப்பிடித்து கட்டழகர் வாறூர்கள்

வாயுவேக மாகவே வாரூர்கள் தூதுவர்கள்
யானைப் பிடிப்பதற்கு வாரூர்கள் தூதுவர்கள்

## தூதர் காட்டில் யானையைத் தேடுகிறது.

யானை யிருக்கிற அடர்ந்தவனம் வந்துவிட்டார்
யானையைத் தேடுகிறூர் அப்பெரிய தூதுவர்
எந்த மலைமேலே யிருக்குமோ அவ்வானை
எந்தச் சுனையருகில் இருக்குமென்று நாமறிவோம்
என்று மவர்பேசி யேறினூர் பூமரத்தில்
தாழ்ந்த மரத்தைவிட்டு வுயர்ந்த மரமேறி
மலையேறிப் பார்த்தார்கள் மதயானை யிருப்பிடத்தை
யானை யிருப்பிடத்தைத் தேடுகிறூர் மன்னவர்கள்
அப்போ மதயானை அக்கா டெலாந்திரிந்து
காடெல்லாம் தான்திரிந்து கண்தழை யைப்பிடித்து
கர்வமெடுத் தவ்வானை கானமெல்லாஞ் சுற்றிடுமாம்

## தூதர் யானையைக்கண்டது.

தழைந்த மரந்தேடி தான்வந்து பள்ளிகொள்ளும்
ஆல மரத்தடியில் ஆனைவந்து பள்ளிகொள்ளும்
பள்ளிக்கொண்ட பாவனையைப் பார்த்தந்த தூதுவர்கள்
யானை திரும்புதற்கு அவ்வீர ரேதுசெய்தார்
அவர்-என்னவென்று சொல்லியப்போ ஊதுகிறூர் சின்னத்தொனி
மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
பொய்கை யறுகாதம் பூமதுரை முக்காதம்
ஐம்பத் தறுகாதம் ஆளுகிறூர் பாண்டியர்கள்
மைந்தனு மில்லையென்று மலைமேற் றவமிருந்தார்
மாளுகிரூ மென்று மலைமேற் றவமிருந்தார்
மாளாதே யென்று மலரி லவதரித்தாள்
நீங்கள் தவசுசெய்து பெற்றெடுத்த அல்லிநல்லாள்
மன்னன் விஜையன் மடலூர்ந்த கட்டழகி
காளை விஜையன் கடலூர்ந்த கட்டழகி

'ஏழு பிராயத்திலே யெதிர்த்துவந்தான் நீன்முகனும்
அந்-நீன்முகனைச் சங்கரித்து நீலிபட்ட மாண்டவள்காண்
அப்படிக் கொத்ததொரு ஆரணங்கு பெற்றபிள்ளை
அல்லியம்மாள் பெற்றெடுத்த அழகு புலந்திரனர்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
பெண்பெருமாள் பெற்றெடுத்த பிள்ளை புலந்திரனர்
பேரப்பா ரப்பா பெரியப்பா மாளிகைக்கு
தாம முடியான் தனித்தூது போகாதே
காண்டா வனமெரித்த காளை வருகவென்று
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தர் வருகவென்று
வில்லாளி பார்த்தர் விஜயர் வருகவென்று
கணையாழி மோதிரத்தை கழற்றியவர் கைகொடுத்து
உம்மை யழைத்துவர எங்களை யனுப்பிவைத்தார்
ஐயா வருகவென்று ஊதினர் துத்தாதிசின்னம்
ஊதினர் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினர் காளம் ஏழுலகுந் தானதிர
செம்பொன்னாற் காளந் திசைவிளங்க ஊதினர்
அம்பொன்னாற் காளம் பொருந்தநின் றூதினர்
பொன்னினாற் காளம் பொருந்தநின் றூதினர்
வருக வருகவென்று ஊதினர் தாரைசின்னம்
ஊதின சின்னத்தொனி கேட்டது அவ்வானை
மகுட முடியசைக்கி மரத்தின்கீழ்ப் பள்ளிகொண்டு
ஆலோசனை செய்கிறது அந்த மதவானை
அப்போது தூதுவர்கள் ஆணு லழகரெல்லாம்
மரத்தைவிட்டுக் கீழிறங்கி மன்னவர் ஓடிவந்து
பொன்னின் செம்பிலே பன்னீருந் தானெடுத்து
கணையாழி மோதிரத்தைக் கட்டழகர் கைப்பிடித்து
யானையின் முன்னம்வந்தார் அழகான தூதுவர்கள்
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
கணையாழி மோதிரத்தைக் காலுக்கு முன்னேவைத்து

முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டார்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டார்
யானையின் பாதம் அடிவணங்கித் தெண்டனிட்டார்
தெண்டனிட்ட மன்னவர்கள் திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுது
பெண்பெருமாள் பெற்றெடுத்த பிள்ளை புலந்திரனார்
தூதுரைக்கப் போறூர்காண் சுந்தரப் பூமுடியார்
தாம முடியார் தனித்தூது போகாதீர்
ஐயா வருகவென்று அடிவணங்கித் தெண்டனிட்டார்
தாங்கள் வருகவென்று தார்வேந்தர் தெண்டனிட்டார்

## யானை மதுரைக்கு வருகிறது.

அப்போ மதயானை அவர்களுக்கு எதுசொல்லும்
போவோம் மதிலிடிப்போம் பெண்சேனை யும்பிடிப்போம்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியர்
நூற்றொருவர் பூமுடியை நொறுங்க அடித்திடுவோம்
சாயாம்பு மேனி சகுனி தலைபுடைப்போம்
தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடியன்
தறுதலையன் பூமுடியைத் தடியா லடித்திடுவோம்
காஞ்சிநா டாளுங் கருணரும் பூமுடியர்
கருணருட பூமுடியைக் கண்டதுண்ட மாக்கிடுவோம்
என்று மதயானை யெழுந்து நடந்தது
நதியிலே போயிறங்கி மஞ்சநீர் தானுடி
அசைந்து நடந்தது அப்பெரிய காட்டகத்தில்
சாய்ந்து நடந்தது சாயாப் பெருவானை
கானகத்தைத் தாண்டி வருகிறது தென்மதுரை
இருண்ட வனந்தாண்டி எலுமிச்சந் தோப்புவிட்டு
கறுத்த வனந்தாண்டி கானகமுந் தான்தாண்டி
ஓங்கி வளர்ந்ததொரு மூங்கில் வனந்தாண்டி
சிங்கம் உலாகொடுக்கும் செந்நாய் வனந்தாண்டி
கரடி வுலாகொடுக்கும் கருநாய் வனந்தாண்டி

வாழ்மதுரை ராச்சியத்தில் வருகிறது அவ்வானை
தூதுவர்கள் முன்னும்பின்னுந் தொடர்ந்து வருகிறார்
மதுரைப் பெருந்தெருவில் வீதியில் வருகையிலே

**மதுரையில் ராசாக்கள் யானையைக்கண்டு திகில்படுகிறது.**

மதுரையில் வாழுகின்ற மன்னவர்கள் கண்டார்கள்
சிலமன்ன ரெல்லோரும் திடுக்கிட் டெழுந்திருந்து
பலமன்ன ரெல்லோரும் பதைபதைத்துத் தானழுது
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு பூமுடியார்
ஒருவர்க் கொருவர் உண்மையாய் சொல்லிக்கொள்வார்
ஆளப் பிறந்த அபிமரைப் பாடிழந்து
ஆறெல்லா மண்டி யனலண்டித் தீயண்டி
கத்தி யலமந்து கானகத்தில் போயமர்ந்து
மனங்கொள்ளாக் கோபமுடன் இருக்கும் மதயானை
அந்த மதயானை யிந்தத் தெருவில்வந்தால்
ஆரார் பூமுடிக்கு அழும்புவந்து நேர்ந்திடுமோ
என்று மனதிலெண்ணி யெல்லவரு மோடிவந்து
கோட்டை யடைத்திடுவார் கொத்தளங்கள் சார்த்திடுவார்
மாளி யடைத்திடுவார் மண்டபங்கள் சார்த்திடுவார்
ஏக்கம் பிடித்து இருப்பார் சிலபேர்கள்
மனது பயமெடுத்து மன்ன ரிருந்திடுவார்
இப்படி யாக விருக்கின்ற வேளையிலே
அப்போது யானை அசைந்து நடைநடந்து
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
கடையுங் கடைத்தெருவுங் கருமார வீதிவிட்டு
புலிமுக வாசல்வந்து புகுந்துநின்ற தவ்வானை
அரண்மனை வாசலிலே நின்றது அவ்வானை
அங்கு மொருதூதன் ஆணழக னோடிவந்து
போரஞ்சா மன்னர் புலந்திரர்க்கு முன்னேவந்து

## புலந்திரற்குச் சேதி யுரைக்கிறது.

கணையாழி மோதிரத்தைக் கழற்றியவர் முன்னேவைத்து
யானை பிடிக்க அடர்ந்தவனம் போனதுவும்
போனதுவும் வந்ததுவும் புதுமைக ளுள்ளவெல்லாம்
ஆனையைக் கண்டு அழைத்தோடி வந்ததுவும்
அத்தனையுஞ் சொல்லி யடிவணங்கித் தெண்டனிட்டார்
யானையும் வந்ததென்று அடிவணங்கித் தெண்டனிட்டார்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
துள்ளி யெழுந்தான் துவண்ட மலரெடுத்தான்
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
அத்தனையுங் கொண்டுமல்லோ ஆணழக னோடிவந்து
யானையின் முன்னேவந்து ஆணழக னிந்திரனும்
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டு
யானையின் பாத மடிவணங்கித் தெண்டனிட்டான்
அப்போது யானையது ஆணழகர்க் கேதுசொல்லும்
உந்தனுக்கோ துக்கமப்பா உத்தமனே வீரியனே
எந்தனுக்குத் துக்கம் இருக்குதெழுந்திரென்று
துக்கமாய்த் தானிருந்து தும்பிக்கை தானெடுத்து
இந்திர ராசாவை யெடுத்து நிறுத்தியது

## யானை புலந்திரற்குத் தேறுதல் சொல்லுகிறது.

போரஞ்சா மன்னர் புலந்திரரும் தாம்பார்த்து
அங்குமொரு தூதுவனே ஆணழகர் தாமழைத்து
செங்நெல் பயறு சிறுபயறு தேங்காயும்
கொள்ளும் உளுந்துகளும் கொப்பரைத் தேங்காய்களும்
கூட்டிக் கவாளம் கொடுமென்றான் யானைக்கு
அப்போது யானை ஆணழகர்க் கேதுரைக்கும்
ஆளப் பிறந்த அபிம ருயிர்வாங்கி

கொன்று பழிசெய்து கொலைசெய்து போட்டவரை
அவனைக்-கொன்று பழிவாங்கிக் குடல்பிடுங்கித் தோள்போட்டு
அத்தி புரமுழுதும் அடங்கலும் தானிடித்து
நமது சபதம் முடிந்ததின் பிற்பாடு
அன்று கவாளம் எடுப்பேன்கா ணழகா

## யானை சபதமிடவும் புலந்திரன் அத்திபுரத்திற்குத் தூது செல்லுகிறது.

என்று மெடுத்துரைத்து இருந்தது அவ்வானை
அப்போது இந்திரரும் ஆணழகர் தாம்கேட்டு
படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பம் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
மத்தகம் தட்டி மதயானை யேறினான்
அம்மானும் தானும் அழகானை யேறினார்
மாமாவுந் தானும் மதவானை யேறினார்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனங்க ளேறுமென்றார்
கரியானை யேறினார் தன்னொத்த ராசாக்கள்
பக்கானை யேறினார் பத்துலட்சம் ராசாக்கள்
அருகானை யேறினார் அஞ்சுலட்சம் ராசாக்கள்
முன்னானை யேறினார் மூன்றுலட்சம் ராசாக்கள்
இன்னஞ்சில மன்னவர்க ளெழுந்தார்கள் துரிசாக
முன்னை முரசெடுத்து முன்னானை மேல்போட்டார்
பின்னை முரசெடுத்துப் பின்னானை மேல்போட்டார்
சிலமன்ன ரெல்லோரும் தேரின்மே லேறினார்
பலமன்ன ரெல்லோரும் பல்லக்கி லேறினார்
குலமன்ன ரெல்லோரும் குதிரைமே லேறினார்
அழகான மன்னரெல்லாம் ஆனையின்மே லேறினார்
உத்தமனார் வீரியர்கள் ஒட்டையின்மே லேறினார்
பட்டர் புலவர் பதினெட்டு மந்திரிகள்
சித்தர்சுக சாரணர் சேனைபேர் மந்திரிகள்
இன்னஞ்சில மன்னவர்க ளெங்கும் நிறைந்தார்கள்

சிங்கங் காடிபுலி சேர்ந்து முழங்கிவர
யாளி காடிபுலி யருகில் முழங்கிவர
இப்படியாய்ச் சேனைக ளேறினர் வாகனத்தில்
ஏறின போதே யெடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடைகள் முழுமாணிக்கப் பொற்குடைகள்
தங்கக் குடையாம் தவள நெடுங்குடையாம்
பச்சைக் குடையாம் பவள நெடுங்குடையாம்
வச்சிரக் குடையாம் வைடூரிய நற்குடையாம்
எங்கும் நிறைத்தார்க ளெண்ணு யிரங்குடைகள்
சுற்றி நிறைத்தார்கள் சூரியனைக் காணமல்
பக்கம் நிறைத்தார்கள பகவானைக் கண்மறைக்க
பச்சைக் குடைகவிய பார்மன்னர் தேர்நடக்க
முத்துக் குடைகவிய முடிமன்னர் தேர்நடக்க
தங்கக் குடைகவிய தார்வேந்தர் தேர்நடக்க
வச்சிரக் குடைகவிய மன்னர்கள் தேர்நடக்க
ரத்தினக் குடைகவிய ராஜாக்கள் தேர்நடக்க
பொன்னின் குடைகவியப் பூபாலர் தேர்நடக்க
ஒற்றைக் குடைநடுவில் உத்தமனர் வாருரே
பூச்சக்கிரக் குடைநடுவில் புலந்திரனர் வாருரே
யானை யசைந்துவர அடல்வீரர் கொக்கரிக்க
சேனை யசைந்துவரத் திரள்மன்னர் கொக்கரிக்க
குதிரை யனுமானிக்கக் கோடிமன்னர் சத்தமிட
யானையும் சேனைகளும் அசைந்து வழிநடந்தார்
அவ்வீதி தன்னில் நடந்தா ரழகாக
அவ்வீதி தாண்டி மறுவீதி போம்போது

## புலந்திரன் அல்லிவீதி போகிறது.

அல்லியம்மாள் வீதியிலே யானை வருகிறது
வருகிற வேளையிலே வாத்தியங்கள் ஊதுகிருர்
ஊதினர் சின்னம் உலகேழுந் தானதிர
செம்பொன்னுற் காளந் திசைவிளங்க ஊதினர்

பொன்னினுற் காளம் பொருந்தநின் றூதினர்
ஊதின் சின்னத்தொனி வுத்தமியாள் தான்கேட்டு
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளேதுசொல்வாள்
தனக்குக் கவரியிடும் தாதியர்க்கு ஏதுசொல்வாள்
மாற்ருன் படையோ மறுமன்னர் தம்படையோ
எதிராளி தன்படையோ யிவ்வீதி வாருர்கள்
சரியொத்த ராசாக்கள் சண்டைக்கு வாருர்கள்
என்னைக் கெலிக்கவென்று வாருரோ நானறியேன்
மதுரை கெலிக்கவென்று வழக்காட வாருரோ
யார்வரவு தாதி அறிந்தோடி வாருமென்ருள்

## அல்லி தாதிகளைவிட்டுப் பார்க்கச்சொல்லுகிறது.

தனக்குக் கவரியிடும் தாதி யெழுந்திருந்து
திடுக்கென் றெழுந்திருந்து திமிதிமியென் ருேடலுற்ருர்
வாசற் படியில்வந்து மங்கையரும் பார்க்கலுற்ருர்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
புலந்திர ராசாவும் போர்வழுதி யண்ணுவும்
மதுரைக் குடிபடைகள் மண்டலத்து ராசர்களும்
தென்மதுரைக் குடிபடைகள் சேனைபேர் மந்திரியும்
கண்டாளே தாதியவள் கடுகெனவே வோடிவந்து
அல்லிப் பெருமாட்கு அடிவணங்கித் தெண்டனிட்டு

## தாதி அல்லிக்குச் சேதி சொல்லுகிறது.

போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
பொன்னுமலை நாடாளும் அண்ணு வுடனுக
மைந்தர் படையெடுத்து வருகிரு ரிவ்வீதி
தூதுரைக்க வாருர்கள் சுந்தரப் பூமுடியாள்
பிள்ளை படையெடுத்து வருகிரு னென்றுசொன்னுள்
பிள்ளையென்று சொல்லலுமே பெண்பெருமாள் தான்கேட்டு
பூரித் திருதோளும் பொன்னு பரணமின்ன
திரேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து

## அல்லி பிள்ளையைக்காண உப்பரிகையில் ஏறிப் பார்க்கிறது.

மைந்தரைக் காணவென்று மாதா எழுந்திருந்து
ஏழு நிலையும் பெழுநிலையும் மேலேறி
மேலாந் தளத்தில் விடுகதவைத் தாள்திறந்து
பலகேணி வாசல் திறந்தந்தப் பத்தினியும்
காசிப் படியைக் கனக்க மிதித்தேறி
பவளப் படிமிதித்துப் பத்தினியாள் பார்க்கலுற்றாள்
போரஞ்சா மன்னர் புலந்திரனார் சீர்வடிவை
கண்டாளே புலந்திரரைக் கட்டழகி அல்லியரும்
அருகிருக்குந் தாதியர்க்கு அல்லியவ ளேதுசொல்வாள்
அரையில் சொருகழகும் அம்பொன்னாற் சீராவும்
கத்திச் சொருகழகும் கத்திகட்டு வுள்மருங்கும்
கச்சுகட்டும் உள்மருங்கும் கனிவாயின் பேரழகும்
தக்க புகழுடைய தருமருடை பேரழகும்
வெற்றி மதயானை வீமருடை கால்நடையும்
காண்டா வனமெரித்த காளையுடை கைவீச்சும்
நாம முடியான் நகுல நடையழகும்
தாம முடியான் சகாதேவன் கைவீச்சும்
காஞ்சிநா டாளும் கருணரிட பேரொளியும்
ஆறுபேர் தன்னழகை பெற்றுவந்தா னணழகன்
கண்ணெச்சில் கண்ணெச்சில் காண்டீபர் புத்திரற்கு

## புலந்திரற்கு ஆலாத்தி காட்டுகிறது.

அருச்சுனன் புத்திரற்கு ஆலாத்தி காட்டுமென்றார்
தேர்விஜயன் புத்திரற்கு திருஷ்டியைக் காட்டுமென்றார்
அங்கு மொருதாதி அறிவுடையா ளோடிவந்து
இன்றுமுறை யென்னமென்று எழுந்தாளே தாதியவள்
முத்தினா லாலாத்தி முப்பதுநூ றாயிரமாம்
பவளத்தா லாலாத்தி பத்துநூ றாயிரமாம்
கற்பூர ஆலாத்திக் காட்டினா ராயிரம்பேர்

திர்ஷ்டி சுழற்றித் தெருவெங்கும் விட்டெறிந்து
ஆலாத்தி காட்டி அணியிழைமார் வீற்றிருந்தார்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
அவ்வீதி தன்னில் நடந்தா ரழகாக
மற்றுமொரு வீதியிலே வாருரே யிந்திரரும்

## புலந்திரன் பாண்டியர்கள் வீதிவருகிறது.

ஆரு யிரவர் அணிதிரளார் தான்கேட்டு
ஆரப் பதக்கமும் அணிப்பதக்கந் தன்னுடனே
பாரப் பதக்கம் பருத்தமுத்துத் தாவடமும்
ஏலம் லவுங்கமும் இன்பக் களிப்பாக்கும்
காச்சாக் களிப்பாக்கும் கம்மாறு வெற்றிலையும்
ஆரங்கிப் பாக்குகளும் மோரங்கி வெற்றிலையும்
சாதிப் பெருங்கடலுட் சங்குசுட்ட சுண்ணும்பும்
வச்சிரத் தட்டுகளில் வகைவகையாய்த் தானெடுத்து
ஆரு யிரவர்களும் அங்கெனவே யோடிவந்து
போரஞ்சா மன்னர் புலந்திரற்கு முன்னேவந்து
இந்தாரு மென்று எடுத்துமவர் கைகொடுத்தார்
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்பார்த்து
மகுட முடியசக்கி மன்னவனு மேதுசொல்வான்
ஆழிதடங் கையமர்த்தி ஆணழகன் போய்நடந்தான்
மாலை முடியானும் மதுரைக்குப் பின்னுறைந்தான்
காடுசெடி தாண்டி கரியமலை தான்தாண்டி
ஆறு சுனைதாண்டி அதிகவனந் தான்தாண்டி
சில்லென்ற காடுஞ் செடியும் வனந்தாண்டி
ஓங்கி வளர்ந்ததொரு மூங்கில் வனந்தாண்டி
அங்குமொரு பூங்காவைக் கண்டுமந்த வாணழகன்
ஆச்சாவுந் தேக்கும் அழலோங்கும் பாதிரியும்
சண்பக முல்லைகளும் சோந்ததொரு பாதிரியும்
பாதிரி முல்லை பருத்ததொரு சண்பகமும்
சிறுமல்லி குடமல்லி சேர்ந்ததொரு சண்பகமும்
கஸ்தூரி முல்லை கமழ்ந்ததொரு சண்பகமும்

மல்லிகை முல்லை மருக்கொழுந்து சண்பகமும்
இத்தனையும் பூத்துச் சொரியும் அழகாக
மரத்தில் புறுவும் மயிலும் விளையாடும்
கோவில் புறுவும் குயிலும் விளையாடும்
அன்னமுந் தாராவும் அசைந்து நிழல்காட்டும்
சாரையும் சர்ப்பமும் சற்றே யிளைந்துவிடும்
புலியும் பசுவும் ஒருதுறையில் நீர்குடிக்கும்
அதைப்-போரஞ்சா மன்னன் புலந்திரனும் தான்பார்த்து
யாருடைய காவிதென்றான் அல்லி திருமகனும்
அங்கிருந்த தூதுவர்கள் ஆணழகர்க் கேதுசொல்வார்
தக்கப் புகழுடைய தருமருட பூங்காவு

## தருமர் பூங்காவை இந்திரன் காணுகிறது.

பருவ மதயானை பஞ்சவர்க ளைவரது
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆளுகிற பூங்காவு
போரஞ்சா மன்னன் புலந்திரனும் தான்பார்த்து
பேர்பெரிய காவும் எழில்பெரிய வாதனமும்
இப்பெரிய காவும் தோள்பெரிய மண்டபமும்
இத்தனையு மிங்கிருக்க ஏன்போனார் பஞ்சவர்கள்
மண்டபங்க ளிங்கிருக்க மன்னர்கள் காடுறைந்தார்
என்று மனங்கலங்கி ஏங்கி மனந்தளர்ந்து
இத்தித்து மன்னன் இருகண்ணில் முத்துதிர்த்தான்
பொன்னுமலை நாடாளும் அண்ணவு மேதுசொல்வார்
ஏன்காணு மன்னா இந்தமதி யுந்தனுக்கு
வந்த கருமம் முடியுங்காண் மன்னவனே
என்று மனந்தேற்றி யிருக்கின்ற வேளையிலே
போரஞ்சா மன்னன் புலந்திரனு மேதுசொல்வான்
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனங்கள் விட்டிறங்கி
இன்றைக்கு மத்தியானம் இங்கே விடுமென்றான்
பொன்னினாற் கூடாரம் போட்டான் புலந்திரனும்

வண்ணவண்ணக் கூடாரம் மன்னவர்க்குப் போட்டார்கள்
ஆதனங்கள் போட்டார்கள் வந்தவந்த மன்னருக்கு
ஆதனத்தின் மேலேறி ஆணழகன் வீற்றிருந்தான்
பட்டர் புலவர் பதினெட்டு மந்திரிகள்
கூடக் கொலுவிருந்தார் கொற்றப்பூ வீரியர்கள்
சரியாய்க் கொலுவிருந்தார் தன்னொத்த ராசாக்கள்
பட்டப் புலவர்கள் பாடத் தொடங்கினர்
தருமர் வளம்பாடித் தம்பிமார் சீர்பாடி
வீமர் வளம்பாடி விஜயனுர் சீர்பாடி
காண்டா வனமெரித்த காளை புகழ்பாடி
நாம முடியான் நகுலனது பேர்பாடி
தாம முடியான் சகாதேவன் சீர்பாடி
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் பேர்பாடி
வந்தவந்த பேர்களின்மேல் பாடினர் மன்னவர்கள்
அப்போது இந்திரனுர் ஆணழகர் தாம்பார்த்து
பட்டர் புலவர் பாடின பேருக்கும்
ஆடையும் பொன்னும் அளித்து அலைதாரர்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனங்க ளேறுமென்றூர்
படிபடி யென்றூர் படிந்தது அவ்வானை
முக்கம்பம் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
மத்தகத்தைத் தட்டி மதவானை யேறினர்
அம்மானும் தானும் அழகானை யேறினர்
மாமாவும் தானும் மதயானை யேறினர்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனஞ்சென் றேறினர்
அக்காவும் காவும் நடந்தா ரழகாக
மற்றுமொரு பூங்காவும் வாறூர்கள் மன்னவர்கள்
அக்காவின் தன்புதுமை ஆணழகன் கண்டானே

## திரியோதிரன் பூங்காவைப் புலந்திரன் கண்டழிக்கிறது.

ஆச்சாவுந் தேக்கும் அனலோங்கும் பாதிரியும்
பாதிரி முல்லை பருத்த இருவாட்சி

இருவாட்சி சண்பகமு மிருபுறமும் கஸ்தூரி
மல்லிகை முல்லை மருக்கொழுந்து இருவாட்சி
சண்பகமும் முல்லைகளும் சேர்ந்த இருவாட்சி
எங்கு நிறைந்திருக்கும் இருவாட்சி சண்பகமும்
மருவும் மருக்கொழுந்தும் வனமெல்லாம் பூத்திருக்கும்
வேம்பும் அரசுமங்கே விஸ்தாரம் பூத்திருக்கும்
போரஞ்சா மன்னர் புலந்திரரும் தான்பார்த்து
ஆரது பூங்காவென்றார் அல்லி திருமகரும்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
கேட்ட புலந்திரற்குக் கேள்விசொல்ல மாட்டாதே
நின்ற புலந்திரற்கு நீதிசொல்ல மாட்டாதே
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கும் பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
தேசத்தை யாளும் திரியோதிரன் காவிதென்றார்
உங்கள்-பெரியப்பா பூங்காவே என்றார்கள் மன்னவர்கள்
ஐயருட காவிதென்ன ஆணழகர் தான்கேட்டு
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பர்
பூமரத்தைச் சார்ந்துகொண்டு நின்றார் புலந்திரரும்
அங்கிருக்குந் தூதுவரை ஆணழகர் தாமழைத்து
ஆச்சாவுந் தேக்கும் அழலோங்கும் பாதிரியும்
வேம்பு மரசுமங்கே வெட்டிப்போ ராக்குமென்றார்
பூமரத்தை வேர்பிடுங்கிப் போடுமென்றார் ஓர்புறமாய்
மாமரத்தை வேர்பிடுங்கி மரத்தோடே சாடுமென்றார்
அப்போதே தூதுவர்கள் ஆணழகர் தாமெழுந்து
அவ்வளவு போதுமென்று ஆணழகர் தூதரெல்லாம்
வேம்பு மரசுமங்கே வெட்டிப்போ ரிட்டார்கள்
பூமரத்தை வேர்பிடுங்கிச் சாடினார் புண்ணியர்கள்

மாமரத்தை வேர்பிடுங்கி மடித்தார் ஒருபுறமாய்
பத்துப் பனைமரத்தை யொன்ருய்ப் பிடுங்கிடுவார்
எட்டுப் பனைமரத்தை யிருதுண்டாய்ப் போட்டிடுவார்
தென்ன மரங்களெல்லாந் திருகி யெறிந்திடுவார்
இப்படி யாக அழித்தார் வனங்களெல்லாம்
போரஞ்சா மன்னர் புலந்திருந் தான்பார்த்து
போரஞ் சாமன்னர் புலந்திரு மேதுசொல்வார்
தேனல்ல தாரான் திரையெடுத்து தான்முந்து
சாயம்பு மேனியனுஞ் சாத்திரங்கள் தான்பார்த்து
மேக மலைபோல மெள்ள நடந்தசைந்து
பணிபணி யென்ருன் பணிந்தது அவ்வானை
முக்கம்பம் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
மத்தகத்தைத் தட்டி மதவானை யேறிஞர்
அம்மானுந் தானும் அழகானை யேறிஞர்
மாமாவுந் தானும் மதவானை யேறிஞர்
வந்தவந்த பேர்களெல்லாம் மதவானை யேறிஞர்
அக்காவுங் காவும் நடந்தார் அழகாக

## கர்ணன் பூங்காவை இந்திரன் கண்டழிக்கிறது.

மற்றுமொரு பூங்காவும் வாருர்கள் மன்னவர்கள்
அந்தவொரு பூங்காவின் அதிசயத்தைப் பார்த்தார்கள்
சந்தன விருட்சங்களும் சாலைகளும் சோலைகளும்
தேவர் ரிஷிமலையும் திகழான சோலைகளும்
எங்கெங்கும் சோலைகளும் எத்திசையும் சாலைகளும்
மாடப் புருவும் மயிலும் விளையாடும்
கோயில் புருவும் குயிலும் விளையாடும்
அன்னமுந் தாராவும் அசைந்து விளையாடும்
சாரையுஞ் சர்ப்பமும் சற்றே யிழைந்துவிடும்
புலியும் பசுவும் ஒருதுறையில் நீர்குடிக்கும்
காஞ்சிநா டாளும் கருணரிட மாளிகையும்
வில்பிடித் துலாவுகிற வேந்தனது மண்டபமும்

சனியெண்ணை யாடுகிற சமர்த்தனது மண்டபமும்
தாம முடியான் சதுரங்க மண்டபமும்
சித்திரப் பூமுடியான் சொக்கட்டான் மண்டபமும்
அத்தனையுங் கண்டானே ஆனந்த வாழ்மார்பன்
ஆரது பூங்காவென்றான் அல்லி திருமகனும்
அங்கிருக்கு மன்னவர்கள் அரையர் துரையரெல்லாம்
கேட்ட புலந்திரற்கு கேள்விசொல்ல மாட்டாமல்
நின்ற புலந்திரற்கு நீதிசொல்ல மாட்டாமல்
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
காஞ்சிநா டாளும் கருணருட காவிதென்றார்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
பிள்ளையைக் கொன்ற பெரும்பாவி காவிதுகாண்
மைந்தரைக் கொன்ற மாபாவி பூங்காவோ
வேறுவழி யில்லையோ வேந்தர் பெருமானே
மற்றும் வழியில்லையோ மைந்தர் பெருமானே
அயிரா வதம்போல் யானையைத் தானழைத்து
இடித்து நகர்த்தி யெமபுரஞ் சேருமென்றான்
குத்திக் கிளறிக் கோளாறு செய்யுமென்றான்
மதிலின் சுவரிடித்து மண்டபங்கள் தாமிடித்து
ஆலயங்கள் கோபுரங்கள் அடங்கலுந் தானிடித்து
அரைநாழிக் குள்ளே அதம்பண்ணி வாருமென்றான்
யானையது கேட்டு அப்படிக்கே நல்லதென்று
வெங்கண் சிவந்து வெளியால் மிகமுறுத்தி
கொம்பை யசைத்துக் குளம்பால் நிலங்கீறி
தும்பிக்கை யாலே சுழற்றி யிடும்யானை
மதிலே மதிலிடித்து மண்டபத்தை வேர்பிடுங்கிக்
கோபுர சிகரங்களைக் குத்திக் கிளப்பிவிடும்

இடித்து நகர்த்தி யெமபுரஞ் சேர்த்துவிடும்
குத்திக் கிளப்பியது கோளாறு பண்ணிவிடும்
இந்திரனார் தன்னருகில் வந்தது அவ்வானை
பணிபணி யென்றான் பணிந்தது அவ்வானை
முக்கம்பந் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
மத்தகந் தட்டி மதயானை யேறினான்
அம்மானுந் தானும் அழகானை யேறினான்
மாமாவுந் தானும் மதயானை யேறினான்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனஞ்சென் றேறினார்
ஏறின போதே யெடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடைகவிய முடிமன்னர் தேரசைய
பவளக் குடைகவியப் பார்மன்னர் தேர்நடக்க
ரத்தினக் குடைகவிய ராசாக்கள் தேர்நடக்க
அக்காவுங் காவும் நடந்தா ரழகாக
இஞ்சி வனந்தாண்டி யெலுமிச்சந் தோப்புவிட்டு
மஞ்சள் வனந்தாண்டி மாதளம்பூச் சோலைவிட்டு
ஓங்கி வளர்ந்ததொரு மூங்கில் வனந்தாண்டி
எல்லை யிளந்தோப்புத் தாண்டி யிளவிசையர்
அத்தி புரத்தைவந்து சேர்ந்தார்கள் ஆணழகர்
இது-யாருடைய வீதியென்றான் அல்லி திருமகனும்
அங்கிருக்கு மன்னவர் அரையர் துரைகளெல்லாம்
தாம முடியான் தைலாட்டான் வீதியென்றார்

## புலந்திரன் திருதராட்டிரன் வீதிவருகுதல்.

கண்ணில்லான் வீதியென்று காவலர்கள் சொன்னார்கள்
குருடனுடை வீதியென்றார் கொற்றப்பூ தூதுவர்கள்
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்கேட்டு
ஊதினான் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினான் காளம் உலகு தலைதுமுக்க
செம்பொன்னாற் காளம் திசைவிளங்க ஊதினான்
வெள்ளியினாற் காளம் விளங்க ஊதினான்
வைகைவள நாட்டான் வந்தேனென் றூதினான்

வாழ்மதுரைப் பாண்டியனூர் வந்தேனென் றூதினன்
தாம முடியான் தைலாட்டான் பூமுடியும்
தேசத்தை யாளும் திரியோதிரன் பூமுடியும்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியும்
காஞ்சிநா டாளுங் கருணரிட பூமுடியும்
தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடியும்
சாமத் துரோகி சகுனியுட பூமுடியும்
அம்மான் சகுனி யவனுடைய பூமுடியும்
அத்தனைபேர் பூமுடியும் அரிவேன் அரிவேனென்றான்
அரிவேன் அரிவேனென்று ஊதினன் தாரைசின்னம்
தப்பாது நானறிவேன் என்றுமவ னூதினன்
தைலாட்டா னென்றுசொல்லித் தாரைசின்ன மூதினன்
திரியோ திரனுக்கென்று சங்கெடுத்து ஊதினன்
ஊதினன் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினன் காளம் உலகேழுந் தானதிர
செம்பொன்னாற் காளம் திசைவிளங்க ஊதினன்
பொன்னினாற் காளம் பொருந்தநின் றூதினன்
இப்படியா யூதுகிறான் எங்கெங்கும் இந்திரனும்
அந்தத் தெருவிருக்கும் அணியிழைமா ரெல்லோரும்
ஒருவருக் கொருவரல்லோ வுவமைசொல்லிக் கொள்வார்கள்
பாண்டியர்கள் பேரமைதான் பஞ்சவர்கள் புத்திரன்தான்
ஆரு யிரவருக்கும் அழகான பேரமையோ
அல்லியம்மாள் பெற்றெடுத்த அழகு புலந்திரனூர்
மாயன் மருமகன்காண் வளநாடி புத்திரன்காண்
இப்படிக்கே சொல்லி யிருக்கின்ற வேளையிலே
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
அவ்வீதி விட்டு நடந்தார் அழகாக
மற்றுமொரு வீதியிலே நடந்தாரே மன்னவரும்

## புலந்திரன் கர்ணர்வீதி காணுகிறது.

அந்தவொரு வீதியிலே அதிசயங்கள் மெத்தவுண்டு
மாடப் புறாவும் மயிலும் விளையாடும்

கோவில் புறவும் குபிலும் விளையாடும்
எங்கும் மணிவிளக்கும் எத்திசையும் பூவிளக்கும்
மாவிலை தோரணமும் மகுடநல்ல தோரணமும்
அந்தநெடும் வீதிதன்னைக் கண்டானே ஆணழகன்
ஆரது வீதியென்றான் அல்லி திருமகனும்
அங்கிருக்கும் மன்னர் அரையர் துரையரெல்லாம்
கேட்ட புலந்திரற்குக் கேள்விசொல்ல மாட்டாதே
நின்ற புலந்திரற்கு நீதிசொல்ல மாட்டாதே
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கும் பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
காஞ்சிநா டாளுங் கருணருட வீதியென்றார்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
கருணரிட வீதியென்ன கண்கள் மிகச்சிவந்து
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
பிள்ளைபைக் கொன்ற பெரும்பாவி தன்தெருவோ
மைந்தரைக் கொன்றதொரு மாபாவி தன்தெருவோ
வேறுவழி யில்லையோ வேந்தர் பெருமானே

## கர்ணனை இந்திரன் கோல்வேனென்று சபதமிட்டது.

மற்றும்வழி யில்லையோ மன்னர் பெருமானே
காஞ்சிநா டாளும் கர்ணனர் பூமுடியை
சாமத்துக் குள்ளே தரங்கொள்வே னென்றுசொல்லி
ஊதினர் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினன் காள முலகு தலைதுமுக்க
செம்பொன்னற் காளம் திசைவணங்க ஊதினன்
இப்படிக் காக இவனிருக்கும் வேளையிலே

## பொன்னுருவிக்குத் தாதி சொல்லுகிறது.

போதே பொருந்தடங்கண் பொன்னுருவி தாதியவள்
போதே பொருந்தடங்கண் பொன்னுருவி முன்னேவந்து

அடிகள் முடிசாய்த்து ஆரணங்கு மேதுசொல்வாள்
ஆச்சி நீர்கேளும் அடியே ஞெருவார்த்தை
என்னுச்சி நீர்கேளும் இன்ன மொருவார்த்தை
பார்த்தால் பிராயம் பதினாறுங் காணவில்லை
எண்ணுப் பிராயம் இருபதுங் காணவில்லை
துடுக்கென்ற மீசையுஞ் சூரைக் கருங்குழலும்
சோலைக் கெதிராக மாந்தளிரோ சூரியனே
தக்க புகழுடைய தருமருட மேனியுமாய்
வெற்றி மதயானை வீமருட கால்நடையும்
காண்டா வனமெரித்த காளையுட கைவீச்சும்
நாம முடியான் நகுல னிடையழகும்
தாம முடியான் சகாதேவன் பேரழகும்
காஞ்சிநா டாளும் கருணருக்கு ஒப்பிடலாம்
காஞ்சிநா டாளுங் கருணரென்றே சொல்லிடலாம்
காஞ்சிநா டாளும் கருணரிட பூமுடியை
சாமத்துக் குள்ளே தரங்கொள்வே னென்றுசொல்லி
ஊதினான் சின்னம் உலகே முந்தானதிர
ஊதினான் சின்னந்தொனி கேட்டுவந் தேனென்றாள்
போதே பொருந்தடங்கண் பொன்னுருவி தான்கேட்டுச்
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மாது மனஞ்சலித்து மண்டபஞ்சென் றேறினாள்
ஏழா நிலையும் எழுநிலையு மேலேறி

## பொன்னுருவி உப்பரிகையேறிப் பார்க்கிறது.

மேலாந் தளத்தில் விடுகதவைத் தான்திறந்து
பலகணி வாசல் திறந்தந்தப் பைங்கிளியும்
பவளப் படிமிதித்துப் பார்க்கலுற்றாள் பத்தினியும்
காசிப் படியேறிக் கட்டழகி தான்பார்த்து
அரையில் சொருகழகும் ஐம்பொன்னாற் சீராவும்
கத்திச் சொருகழகுங் கச்சைகட்டு உள்மருங்கும்
கச்சைகட்டு உள்மருங்கும் கனிவாயுங் கண்மலரும்

தக்க புகழுடைய தருமருட மேனியுமாய்
வெற்றி மதயானை வீமருட கால்நடையும்
காண்டா வனமெரித்த காளையுட கைவீச்சும்
நாம முடியான் நகுல னிடையழகும்
தாம முடியான் சகாதேவன் பேரழகும்
காஞ்சிநா டாளுங் கருணனென்றே சொல்லிடலாம்
காஞ்சிநா டாளுங் கருணரிட பூமுடியை
சாமத்துக் குள்ளே தரங்கொள்வே னென்றுசொல்லி
ஊதினான் சின்னந் தொனியேது நானறியேன்
நானுமுற வுண்டோடா நாயகனே உங்களுக்கு
முடிச்சோடே மங்கிலியம் கட்ட விதித்திருந்தான்
இழிகுலத்தா னென்றுசொல்லி எண்ணியே நானிருந்தேன்
தேர்ப்பாக னென்றுசொல்லித் தீண்டாமல் நானிருந்தேன்
சாதிகெட்டா னென்றுசொல்லித் தீண்டாமல் நானிருந்தேன்
தாலிக் கயிற்றுத் தரவுவர நாளாச்சோ
மங்கிலிய மற்றுவிழ நாளாச்சோ மன்னவனே
பாஞ்சாலி பட்டுரியப் பஞ்சவர்கள் காடுறைய
பஞ்சவர்கள் காடுறைய பாழுஞ் சிறையிருக்க
மன்னவர்கள் காடுறைய மாது சிறையிருக்க
ஐவருங் காடுறைய நாங்கள் சிறையிருக்க
நாங்கள் சிறையிருக்க நாளாச்சு மன்னவனே
என்று மனங்கலங்கி யேங்கி மனந்தளர்ந்து
மோதிரக் கையை முகத்தி லறைந்துகொண்டாள்
அடித்துப் புரண்டழுதாள் ஆனந்த வாழ்மாரி
அங்கு மொருதாதி அறிவுடையா ளோடிவந்து
பூணுருந் திரேகத்தைப் புழுதி பலதுடைத்து
பட்டுத் துகிலாடை தொட்டு மிகவுடுத்தி
வந்துவிழுங் கண்ணீரை வெண்துகி லால்துடைத்து
தேசத்தை யாளுந் திரியோ திரற்குச்சொல்வோம்-
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சியரே ஆறிவிடும்
தேறிவிடும் தேறிவிடும் திருவினையே தேறிவிடும்

என்று மிகத்தேற்றி யெழுந்திருந்தாள் தாதியவள்
பட்டெடுத்துக் கட்டிப் பலவீரியர் தங்களைப்போல்
ஒட்டெடுத்துக் கட்டியங்கே ஓடிவாருள் தாதியவ்ள்
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
தேசத்தை யாளுகிற திரியோதிரன் மாளிவந்தாள்
மாநகர மாளும் மகாராச னம்பலத்தில்

## தாதி திரியோதிரன் அம்பலங் காணுகிறது.

தாம முடியான் தைலாட்டா னருகிருந்தான்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவ ரங்கிருந்தார்
காஞ்சிநா டாளுங் கருணரு மங்கிருந்தார்
தங்கை மணவாளன் தறுதலைய னங்கிருந்தான்
சாமத் துரோகி சகுனியு மங்கிருந்தான்
அத்தனையு நீக்கி நடந்தாள் அவள்தாதி
தேசத்தை யாளுந் திரியோதிரன் முன்னேவந்தாள்
தேசத்தை யாளுந் திரியோ திரனுற்கு
சிம்மா தனத்துக்கு முன்பாகத் தெண்டனிட்டாள்
தெண்டனிட்ட தாதி திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதாள்
தேசத்தை யாளுந் திரியோதிரன் தான்பார்த்து
நீ-யார்பெண்ணே தாதி அறிய வுரையுமென்றான்
ஆர்பணியு மல்ல அடியேன் திருப்பணிதான்
பேர்பெற் றுடைய பெருமா ளுடன்பணிதான்
ஒருவர் பணியுமல்ல உம்முடைய நற்பணிதான்
போதே பொருந்தடங்கண் பொன்னுருவி தாதியென்றாள்
நீயிங்கே வந்த தெனக்கறியக் கூறுமென்றான்
பார்த்தால் பிராயம் பதினாறுந் தோன்றவில்லை
எண்ணப் பிராயம் இருபதுங் காணவில்லை
துடிக்கென்ற மீசையுஞ் சூரக் கருங்குழலும்
சோலைமலை மேலே தோற்றுகின்ற சூரியனும்
அரையில் சொருகழகும் ஐம்பொன்னுற் சீராவும்

கத்திச் சொருகழகும் கச்சைகட்டு வுள்மருங்கும்
கச்சைகட்டு வுள்மருங்குங் கனிவாயுங் கண்மலரும்
தக்கப் புகழுடைய தருமருட மேனியுமாய்
வெற்றி மதயானை வீமருட கால்நடையும்
காண்டா வனமெரித்த காளையுட கைவீச்சும்
நாம முடியான் நகுல னிடையழகும்
தாம முடியான் சகாதேவன் பேரழகும்
காஞ்சிநா டாளும் கருணருட பேரழகும்
காஞ்சிநா டாளும் கருணருக்கு மொப்பிடலாம்
காஞ்சிநா டாளும் கருணருட பூமுடியைச்
சாமத்துக் குள்ளே தரங்கொள்வே னென்றுசொல்லி
ஊதினான் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினான் சின்னந் தொனிகேட்டா ளுத்தமியும்
போதே பொருந்தடங்கண் பொன்னுருவி தான்கேட்டு
மாலை முடியாளும் மண்மேல் விழுந்தழுதாள்
ஆனந்த மாரி அடித்துப் புரண்டழுதாள்
அந்த விசேஷமது சொல்லவந் தேனென்றாள்
தேசத்தை யாளும் திரியோ திரன்கேட்டு

## திரியோதிரன் கருணரைவிட்டுப் புலந்திரனைக் கொல்லச் சொல்லுகிறது.

செண்டாடு மன்னன் திரியோ திரன்கேட்டு
கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
சுட்டறுந்த நாகக் கொடிபோலே கண்சிவந்து
நெற்றியிற் புருவம் நெருப்பா யனல்பறந்து
காஞ்சிநா டாளுங் கருணர் முகம்நோக்கி
காஞ்சிவள நாடாளுங் கருணருக்கு ஏதுசொல்வான்
வைகைவள நாடான் வந்தானும் அத்திபுரம்
காளையவன் பெற்றெடுத்த கடுங்காளை வந்தானும்
சந்தனத் தோப்பிலே தார்வேந்தன் போய்ப்புகுந்து

வேம்பும் அரசுமங்கே வெட்டிப்போ ரிட்டானும்
உந்தன் தலையறுக்க வந்தானும் இந்திரனும்
பையன் தலையறுக்கப் பாரமில்லை எந்தனுக்கு
நீர்போய்த் தலையறுத்து வாருமென்று னிப்போதே

## திரியனுக்கு கர்ணர் பதில்கூறுவது.

காஞ்சிநா டாளுங் கருண ரவர்கேட்டுச்
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
மன்னர் மனஞ்சலித்து வார்த்தைகள் ஏதுசொல்வார்
சொல்மாத்தி சொல்லுரைப்பார் திரியன்முகங் கோணமல்
பேரப்பா ரப்பா பெரியப்பா ருங்களைத்தான்
காண வருகிறன் நின்றறியுங் காவலரே
பார்க்க வருகிறன் பார்த்தறியுங் காவலரே
மாமியார் வீட்டுக்கு வருகிறன் பாண்டியனும்
மச்சினியாள் மாளிகைக்கு வருகிற னென்றறியும்
பிள்ளையைப் பார்க்க வருகிறன் மன்னவனும்
மைந்தனைப் பார்க்க வருகிறன் மன்னவனும்
பிள்ளையை நீரனுப்பிப் பேச்சை யறியுமென்றார்

## புலந்திரரைக்காணச் சின்ன அருச்சுனனை அனுப்பும்படி கர்ணன் திரியனுக்குரைப்பது.

மைந்தரை நீயனுப்பி வார்த்தை யறியுமென்றான்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
நல்லதென்று சம்மதித்தான் நாம முடியானும்
அங்கிருக்குந் தூதுவரை யாணழகன் தானழைத்து
தோகை மயிலனையாள் துற்சடையாள் மாளிசென்று
ஐந்து வயதுடைய அருச்சுனரை நீர்பார்த்து
அரைநாழிப் போதில் அழைத்தோடி வாருமென்றான்
தூதுவனுந் தான்கேட்டுத் தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு

சொல்லப்பெற்றே னென்றுசொல்லி சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றே னென்றுசொல்லிக் கும்பிட் டெழுந்திருந்து

## தூதர் துற்சடையாள் அரண்மனைக்குப் போகிறது.

அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
வீதியும் வீதி வீதி பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
தோகை மயிலனையாள் துற்சடையாள் வீற்றிருக்கும்
சிம்மா தனத்தருகே சேரவந்தான் தூதுவனும்
செம்பொன் முடிசாய்ந்து சேரவந்து தெண்டனிட்டான்
ஐம்பொன் முடிவணங்கி அருகில்வந்து தெண்டனிட்டான்
தெண்டனிட்ட தூதன் திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதான்
ஆருடைய தூதுவன்நீ யறிய வுரையென்றாள்
தேசத்தை யாளுந் திரியோதிரன் தூதனென்றான்
நீயிங்கே வந்த தெனக்கறியக் கூறிடென்றான்
அஞ்சு வயதுடைய அருச்சுன ராசாவை
தேசத்தை யாளுந் திரியோ தனப்பெருமான்
அரைநாழிப் போதில் அழைத்தோடி வாருமென்றார்
ஆகையி னாலே அழைக்கவந்தே னென்றுசொன்னான்
தோகை மயிலனையாள் துற்சடையாள் தான்கேட்டு
ஆணு லழகுமன்னன் அருச்சுன ராசதுரை
அருச்சுனனு ரீன்றெடுத்த அழகு புலந்திரனார்
புலந்திரனார் பெற்றெடுத்த பூபால னருச்சுனனும்
சித்திரவில் பேரனவன் சின்ன அருச்சுனனும்
அஞ்சு வயதுடைய அருச்சுன ராசதுரை
தேனல்ல தாரன் வேட்டைக்குப் போனான்காண்
அங்கேநீ சென்று அழைத்தோடி வாவென்றாள்

## சின்ன அருச்சுனனை வேட்டையில்போய் தூதர் காணுகிறது.

தூதுவனுந் தான்கேட்டுத் தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு
அருளருளு மென்னுச்சி யப்படிக்கே யாகுதென்று
தெத்துத் தெருத்தாண்டி தேரோடும் வீதிவிட்டு
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
கடையுங் கடைத்தெருவும் கருமார வீதிவிட்டுப்
பாலனவன் போயிருக்கும் வனம்நோக்கி போகலுற்றான்
அருச்சுனனார் போயிருக்கும் அந்த வனம்நோக்கி
வனமாய் வனந்தாண்டி வாறானே தூதுவனும்
அங்கே அருச்சுனனும் ஆணழகன் ஏதுசெய்தான்
அஞ்சு வயதுடைய அருச்சுன வீரியனும்
காட்டானை சிங்கங் கரடிபுலி குத்திடுவான்
செந்நாய் புலிகரடி சேனைவேட்டை யாடிடுவான்
காட்டானை சிங்கங் கரடிபுலி யாளிகளை
கொன்று உருவாக்கி கொற்றம்பு வீரியனும்
காவடி தன்னுடனே கழுகண்டந் தோளேந்தி
செந்நாய்கள் சூழ்ந்துவர சேவகர்கள் முன்னடக்க
கருநாய்கள் சூழ்ந்துவரக் காவலர்கள் பின்னடக்க
நடந்தா ரருச்சுனரும் நாலுதிக்குந் தானதிர
அசைந்து நடந்துவர ஆணழகர் தமைக்கண்டார்
அழைக்கவந்த தூதுவர்கள் கண்டார்க ளாணழகர்
அஞ்சு வயதுடைய அருச்சுனரைத் தான்பார்த்து

## அருச்சுனனை தூதர் கண்டது.

அருச்சுனரைத் தான்பார்த்து ஆணழக ரேதுசொல்வார்
அரையில் சொருகழகும் ஐம்பொன்னுற் சீரழகும்
கத்தி சொருகழகும் கத்திகட்டு உள்மருங்கும்
கச்சைகட்டு உள்மருங்குங் கனிவாயுங் கண்மலரும்
தக்க புகழுடைய தருமருட மேனிகளும்

வெற்றி மதயானை வீமருட கால்நடையும்
காண்டீப வனமெரித்த காளையுட கைவீச்சும்
நாம முடியான் நகுல னிடையழகும்
தாம முடியான் சகாதேவன் பேரொளியும்
காஞ்சி நாடாளுங் கருணர் திருமுடியும்
போரஞ்சா மன்னர் புலந்திரனர் வீரியரும்
இவர்க ளழகையெல்லாம் பெற்றுவந்தான் புண்ணியனும்
ஒருமிக்கப் பெற்றுவந்தான் உத்தமனும் வீரியனும்
இப்படியாய்ச் சொல்லி நெருங்கி வழிநடந்து
அஞ்சு வயதுடைய அருச்சுனர்க்கு முன்னேவந்து
அருச்சுன ராசருக்கு அடிவணங்கித் தெண்டனிட்டான்.

## அருச்சுனன் தூதுவரை யாரென்று விசாரிக்கிறது.

தெண்டனிட்ட தூதுவனைக் கண்டந்த அருச்சுனனும்
யார்வந்தார் தூதா அறிய வுரையென்றான்
கோணாத மாதவத்துக் குந்திபம்மாள் தூதுவனோ
தோரா வடிவழகி துரோபதையாள் தூதுவனோ
சோரா வளநங்கை சுபத்திரையாள் தூதுவனோ
நாக மடந்தை நறுநுதலாள் தூதுவனோ
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தூதுவனோ
பங்கயஞ்சீர் கண்ணாள் பவளக்கொடி தூதுவனோ
பொன்னன மேனிப் போகவதி தூதுவனோ
ஆருடைய தூதன் அறிய வுரையுமென்றான்
அப்போது தூதுவனும் அறிய வுரைக்கலுற்றான்
ஆருடைய தூதுமல்ல அடியேனுட தூதுமென்றான்
ஒருவருட தூதனல்ல வும்முடைய தூதனென்றான்
தேசத்தை யாளுந் திரியோதிரன் தூதனென்றான்
திரியோதிரன் தூதனென்று தெண்டனிட்டா னப்போது
அஞ்சு வயதுடைய அருச்சுனரு மேதுசொல்வார்
ஏன்வந்தாய் தூதா வெனக்கறிய கூறிடென்றான்
வந்த வரவுதன்னை வாய்திறந்து சொல்லுமென்றான்

அப்போது தூதுவனும் அடிவணங்கித் தெண்டனிட்டான்
பார்த்தனுர் தந்தை வருகிரு ரென்றுசொல்லி
அருச்சுனனுர் தந்தை வருகிரு ரென்றுசொல்லி
உங்கள்-ஐயர்க் கெதிரே அனுப்பவென்று ஆணழகர்
தந்தைக் கெதிரே அனுப்பவென்று தார்வேந்தர்
அருச்சுனரைத் தேடி யழைத்தோடி வாருமென்றுர்
ஆகையி ஞலே அழைக்கவே வந்தேனுன்
வருக வருகவென்று மறித்தொருகால் தெண்டனிட்டான்
அஞ்சு வயதுடைய அருச்சுனரு மேதுசொல்வார்
ஐயா வரவுசொல்ல ஆணழகன் உள்மகிழ்ந்து
திரேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
பூரித் திருதோளும் பொன்னு பரணமின்ன
அரைச்சசெழுஞ் சந்தனத்தில் வீற்றிருந்த பாவனைபோல்
தருமருக்கு இப்போது சனியன் துலைந்ததோ
வீமருக்கு இப்போது விதியும் கழிந்ததோ
ஐவருக்கு மிப்போது அடைந்தது நற்காலம்
மாது மயிர்முடிக்க ஆச்சுது நற்காலம்
கோதை குழல்முடிக்க நாளாச்சு கொற்றவரே
திரியோதிரன் படையுஞ் சேனைக ளத்தனையும்
காஞ்சி நாடாளும் கருணரும் அவர்படையும்
இன்னஞ் சிலகாலம் இருந்தரசை யாள்வாரோ
மூன்றுநாட் பொழுதே முடிமன்னர் ஆளுவது
நாலாநா ளெங்களுக்கு ஆகுதுகாண் ராச்சியங்கள்
ரட்டிப்புச் சம்பளம் நானே தருகிறேன்காண்
அஞ்சாதீர் அஞ்சாதீர் ஆணழகர் வீரியரே
ஏதுக்கும் அஞ்சாதீர் என்பிறகே வாருமென்றுர்

## சின்ன அருச்சுனன் தகப்பனைக் காணவருகிறது.

பச்சை மலையைப் பனிவந்து சூழ்ந்தாற்போல்
பாலகனு மங்கே பதறி வழிநடந்தான்
தோட்டந் திறந்தானே தொன்னைதைத்துப் பூவெடுத்தான்

பொன்னின் செம்பிலே பன்னீருந் தானெடுத்து
பன்னீருங் கைக்கொண்டு பதறி வழிநடந்தான்
காடு மலைதாண்டிக் கரிய வனந்தாண்டி
ஆறு சுனைதாண்டி அதிக வனந்தாண்டி
ஓங்கி வளர்ந்த மூங்கில் வனந்தாண்டி
அத்தி புரந்தேடி வாறானே ஆணழகன்
அத்தி புரத்தை அடுத்து நடந்தானே
கடையுங் கடைத்தெருவுங் கருமார வீதிவிட்டு
தெத்துத் தெருத்தாண்டி தேரோடும் வீதிவிட்டு
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் அம்பலத்தில்

## சின்ன அருச்சுனன் இந்திரனைக் காணமல் புஷ்பத்தை காலில் சொரிந்துகொள்ளுகிறது.

அம்பலத்து வாசல் அடுத்துவந்தான் அருச்சுனனும்
எங்கெங்கும் பார்த்தான் இனியவிட மாராய்ந்தான்
சுற்றிவந்து பார்த்தானே சுந்திரரைக் காணவில்லை
எங்கெங்கும் பார்த்தானே இந்திரரைக் காணவில்லை
ஐயாவந்தா ரென்று அழைத்தாயே ஆணழகா
என்-தந்தைவந்தா ரென்று என்னை யழைத்தீர்களே
என்-தந்தையைக் காணேனே தார்வேந்தர் சபைநடுவே
ஐயரைக் காணேனே அரசர் சபைநடுவே
கொண்டுவந்த பூமலரை என்செய்வேன் கொற்றவனே
ஆர்பாதம் போட்டுத் தொழுவேனுன் ஆணழகா
என்று மவனுரைத்து ஏதுசொல்வான் அர்ச்சுனனும்
தன்னிரண்டு பாதமதில் தார்வேந்தன் பூச்சொரிந்து
கொண்டுவந்த பூமலரைக் கொட்டிக்கொண்டான் தன்பாதம்
நான்-கும்பிட்டுக் கொண்டேன் நீர்கூறிட்டுக் கொள்ளுமென்றான்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
தொப்பை யசைந்திடவே தொந்தி சரிந்திடவே
கைதட்டித் தானகைத்தார் கட்டழக ரெல்லோரும்
துரியர் குலத்திலே துரோண ரவர்பார்த்து

அங்காணி தொப்பை யசைய மருங்கசைய
உடம்பு குலுங்கிடவே உத்தமருந் தானகைத்தார்

## திரியோதிரன் அருச்சுனனைக் கொல்லச்சொன்னது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
கோபித்துக் கண்சிவந்து கொல்லுங் குருவியைப்போல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
கட்டறுந்த நாகக் கொடிபோலக் கண்சிவந்து
காஞ்சிநா டாளுங் கருணர் முகம்நோக்கி
காசிவள நாடாளுங் கருணருக்கு ஏதுசொல்வான்
தூதுரைக்க வந்ததொரு சுந்தரனார் பூமுடியும்
அஞ்சு வயதுடைய அருச்சுனனார் பூமுடியும்
இருவர் தலையறுத்தென் பாதத்தில் வையுமென்றான்

## கருணர் திரியோதிரனுக்குத் தேறுதல் சொல்லுகிறது.

காசிவள நாடாளும் கருண ரவர்கேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு பூமுடியான்
பச்சை முகம்கருகிப் பால்முகம் வேறுபட்டு
மன்னன் மனஞ்சலித்து மறுவார்த்தை எடுத்துரைப்பான்
சொல்மாத்தி சொல்லுரைப்பான் திரியன்முகங் கோணமல்
அறியா தறியுமோ ஆனந்த வாழ்மார்பா
இதற்குள்ளே பாரப்புத்தி எங்கேகற்றா னருச்சுனனும்
நல்ல தனத்தாலே கேளுமென்றான் மன்னவனும்
இன்ன மொருவார்த்தை இளவரசே கேளுமென்றான்

## திரியன் அர்ச்சுனனை மடியில்வைத்துக்கொண்டு கேட்கிறது.

அப்போ திரியோதிரன் ஆணழகன் தான்கேட்டு
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரைத் தானழைத்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
உச்சி முகந்துமவன் உள்ளங்கால் முத்தமிட்டு

ப்க்கம் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரே நீர்கேளும்
அர்ச்சுனனுர் புத்திரனும் வந்தானும் ஆணழகன்
அல்லி திருமகனும் வந்தானும் ஆணழகன்
வையை வளநாடான் வந்தானும் உன்தகப்பன்
சந்தனத் தோப்புதனில் தார்வேந்தன் போய்ப்புகுந்து
வேம்பு மரசுமங்கே வெட்டிபோ ரிட்டானும்
உன்-ஆச்சி கலந்தாரி ஆனந்த வாழ்மாரி
அவளை-வைத்துச் சிறைகாப்பேன் வையகமும் நான்கொடுப்பேன்
தேச முழுதும் இருந்தரசை யாண்டிடுவாய்
வையைவள நாடான் வந்தானே உன்தகப்பன்
பையன் தலையறுக்க பாரமில்லை யெந்தனக்கு
உங்கள்-அப்பர் தலையறுத்து வாருமென்றுன் ஆணழகன்
பையன் தலையறுத்துப் பாதத்திலே வையுமென்றுன்

## திரியனுரைக்கு அர்ச்சுனன் கோபித்துச் சொல்லுகிறது.

அஞ்சு வயதுடைய அர்ச்சுனருந் தான்கேட்டு
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
உள்ளுடம்பும் நடுங்கி வுடம்பும் படபடத்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனலண்டி
சூரிய மண்டலத்தைக் கிட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை அடுத்தது இவன்கோபம்
மனமடங்காக் கோபமுடன் மடியைவிட்டுக் கீழ்குதித்து
மடியைவிட்டுக் கீழிறங்கி மன்னவனு மேதுசொல்வான்
இந்தச் சபைநடுவே இருக்கின்ற ராஜர்களே
மன்னர் சபைநடுவே வீற்றிருக்கும் மன்னர்களே
குருக்கள்மார் துரோணரே கூறுகிறேன் கேட்டிருங்கள்
பாட்டன்மார் வீஷ்டுமரே பாலனுரை கேட்டிருங்கள்
காஞ்சிநா டாளும் கர்ணரே நீர்கேளும்
என்-ஆச்சி கலந்தாரி ஆனந்த வாழ்மாரி
அவளை-வைத்துச் சிறைகாப்பான் வையகமுந் தான்கொடுப்பான்

இருத்திச் சிறைகாப்பா னிவ்வுலகந் தான்கொடுப்பான்
வையக முழுதும்நான் இருந்தரசை ஆண்டிடுவேன்
தேச முழுதும் சிறப்பாக ஆண்டிடுவேன்
என்னுச்சி கலந்தாரி ஆனந்த மாரியர்க்கு
காஞ்சிநா டாளுங் கர்ணருட காவலது
ஆழக் குழிதோண்டி ஆகாசக் கோட்டைகட்டி
மேலே குழிதோண்டி விஷநாகக் கோட்டைகட்டி
எட்டுத் தலைவாசல் இடிமன்னர் காத்திருக்க
பத்துத் தலைவாசல் படைமன்னர் காத்திருக்க
காஞ்சிநா டாளுங் கர்ணருட காவல்துள்ள
அப்பெரிய காவலிலே வந்தானே ஆணழகன்
மாது இருக்கிற மதிலேறிச் சென்றுனே
ஆச்சியும் ஐயாவும் இருவரு மொன்றுக
அன்றிரவு அங்கிருந்து ஆணழகர் போய்நடந்தார்

## திரியன்மேல் கோபிக்கிறது.

மாது குளியாகி மைந்தனென்று என்னைப்பெற்றுள்
மாநாகங் கொண்டவனே மன்னவனே நான்பிறந்தேன்
எரிநாகங் கொண்டவனே இந்திரற்கு நான்பிறந்தேன்
அன்று தலையறுத்து ஆண்டீரோ ராச்சியத்தை
இன்று தலையறுக்கச் சொன்னீரே யிந்திரரே
இவன்-ஆச்சி கலந்தாரி ஆனந்த வாழ்மாரி
நாலாங் குளிகுளித்து ஞாயி றுதித்தாற்போல்
மூன்றுங் குளிகுளித்தாள் முத்தந்த வாழ்மாரி
ஏழு வருஷம் சிறையா யிருந்தாள்காண்
இவளைத்தொட்டுத் தாலிகட்ட எல்ல வரும்பயந்து
இவளைத்-தொட்டாரே யாமாளுல் திட்டென்று மாண்டிடுவார்
அந்தப் பயத்தாலே யாரும்வந்து கொள்ளாமல்
மண்டலத்து ராசாக்கள் மாலையிட யாருமில்லை
தேசத்து ராசாக்கள் தாலிகட்ட யாருமில்லை
இப்படி யாக யிருந்தாள் சிலகாலம்

அப்போ தொருபார்ப்பான் ஆணழகன் ஏதுசெய்தான்
ஆட்டுக்கடா கையாலே தாலிகட்ட தானமைந்தான்
ஆட்டுக்கடா தாலிகட்ட அந்திகண்ணன் பெண்டாள
பெண்டாளுங் காலத்திலே பிள்ளைக ளில்லாமல்
பிள்ளைக ளில்லாமல் பெருமலடாய்ப் போனாளே
மைந்தனு மில்லாமல் மகாமலடாய்ப் போனாளே
அப்போ பிலாரிஷியும் அறிந்தார் இவள்துயரம்
துயர மவரறிந்து சேர்ந்தே யுறவாடி
அவரைக்-கலந்து உறவாடிக் காந்தாரி பிள்ளைபெற்றாள்
ஆட்டுக்கடா தாலிகட்ட அந்திகண்ணன் பெண்டாள
கருப்புகடா தாலிகட்ட கண்ணில்லான் பெண்டாள
பிலாத்தழுவி நூற்றொருவர் பெற்றாளே யுன்னாச்சி
உம்-ஆச்சி தலையறுத்து ஆண்டீரோ ராச்சியத்தை
கண்ணில்லான் பிள்ளையென்று கலியுகத்தில் பேராச்சு
குருடனுட பிள்ளையென்று குவலயத்தில் பேராச்சு
பிலாத்தழுவிப் பெற்றபிள்ளை பேருலகை யாளுகிறீர்
ரிஷிசேர்ந்து பெற்றபிள்ளை இராச்சியத்தை யாளுகிறீர்
உம்-ஆச்சி தலையறுத்து ஆண்டீரோ ராச்சியத்தை
உம்-ஐயர் தலையறுத்து ஆண்டீரோ ராச்சியத்தை
என்-ஐயர் தலையறுக்க சொன்னாரே ஆணழகர்
எங்கள்-ஐயர் தலையறுக்க அடாதுகா ணெங்களுக்கு
என்று-கூறி யெழுந்திருந்தான் குந்தி குருமணியும்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரையரெல்லாம்
குறுஞ்சிரிப்புக் கொண்டு குலுங்க நகைநகைத்தார்

## திரியன் கோபிக்கிறது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
கோபித்துக் கண்சிவந்து கொல்லுங் குருவியைப்போல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனலண்டி
சூரிய மண்டலத்தைக் கிட்டிச் சுவாலயமாய்

அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலயமாய்
காஞ்சிநா டாளுங் கர்ணர் முகம்நோக்கி
பஞ்சவற்கு என்று பிறக்குமோ பாற்குடங்கள்
இவர்கள் செய்த அதிஷ்டநான் செய்யவில்லை
தூதுரைக்க வந்தவொரு புத்திரனுர் பூமுடியும்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனனுர் பூமுடியும்
இருவர் முடியறுத்து என்பாதத்தில் வையுமென்ருன்

## திரியனுக்கு கர்ணர் தேறுதல் சொல்லுகிறது.

காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
மன்னன் மனஞ்சலித்து வார்த்தையொன் றெடுத்துரைப்பான்
சொல்மாற்றிச் சொல்லுரைப்பான் தோழன்முகங் கோணுமல்
குலத்தில் குடிகேட ஞனேனையா கொற்றவனே
மறுத்தொருக்கால் வார்த்தைசொல்ல வாயுண்டோ மன்னவனே
பாசத் திளவரையன் படைகூட்டந் தன்னுடனே
ஆனந்த மார்பனுக்கு அனுப்பி விடைகொடென்ருன்
தேசத் தழகன் திரியோ திரன்கேட்டு
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரைத் தானழைத்து
பாசத் திளவரையர் படைகூட்டந் தன்னுடனே
ஆனந்த வாழ்மார்பன் ஐயாவைக் காணுமென்ருன்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரு மேதுசொல்வார்
உந்தன் விருதுவேண்டாம் உன்மேளம் நான்வேண்டேன்

## சின்ன அர்ச்சுனனுக்குப் பாட்டன் சேனை யனுப்புகிறது.

அரவக் கொடிவேண்டேன் ஆள்வேண்டேன் ஊர்வேண்டேன்
ஐவ ருடவிருது அடைவாக நீகொடுத்து
விடைகொடுத்து நீயனுப்பு வேந்தர் பெருமானே
என்ன-தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு

காஞ்சிநா டாளுங் கர்ணருக் கேதுசொல்வார்
ஐவருடை சேனைகளும் அவர்படை யானைகளும்
கால்விலங்கு போட்டோமே காவலிலே வைத்தோமே
இணைவிலங்கை நீகழற்றி யிவனுக் கனுப்புமென்றான்
காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு
சிங்கா தனத்தைவிட்டுத் திகழக் குதித்திறங்கி
செம்பொன் மிதியடியில் ஏறியந்த சீர்கர்ணர்
முத்து மிதியடியைத் தொட்டு மிகநடந்து
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
பஞ்சவர்கள் சேனை யிருக்கு மிடத்தில்வந்தார்
ஐவருட சேனைக்கு அருகே வரும்போது
பஞ்சவர்கள் சேனையர்கள் பார்மன்னர் தாம்பார்த்து
கர்ணரைத் தாம்பார்த்துக் காவலர்கள் ஏதுசொல்வார்
நெஞ்சுலர்ந்து நாவறண்டு நித்திலங்கு பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
ஒருவர்க் கொருவர் உவமைபாய்ச் சொல்லிக்கொள்வார்
என்னமோ ஏதோ இவர்இங்கே வரலாச்சு
கர்ணர் வருகிறது காரியமாய்த் தோற்றுது
என்று மவர்பேசி இருக்கின்ற வேளையிலே
காஞ்சிநா டாளுங் கர்ண ரருகில்வந்து

## கர்ணர் தேறுதல் சொல்லுகிறது.

அஞ்சாதீர் அஞ்சாதீர் அரையர்களே அஞ்சாதீர்
ஒன்றுக்கும் அஞ்சாதீர் உத்தமனர் சேனைகளே
இன்னஞ் சிலகாலம் இருந்தரசை யாள்வோமே
காலம் கழிந்தது கர்த்தன் பதிசேர
நாளுங் கழிந்தது ஏமன் பதிசேர
மூன்றுநாட் பொழுதே முடிமன்ன ராளுவது

நாலாம்நாள் உங்களுக்கு ஆகுது ராச்சியங்கள்
நாங்கள்-பார்த்தன்கை யம்பாலே படுவது நிச்சயந்தான்
மன்னர்கை அம்பாலே மாளுவது நிச்சயந்தான்
தர்மருக்கு இப்போ சனியன் துலைந்தது
வீமருக்கு இப்போ விடுதி துலைந்தது
மாது மயிர்முடிக்க நாளாச்சு இப்போது
கோதிக் குழல்முடிக்க நாளாச்சு இப்போது
பத்தினியாள் சாபம் பலித்தது எங்களுக்கு
உத்தமியாள் சாபம் உடனே பலித்தது
என்றுமே சொல்லியல்லோ இணைவிலங்கைத் தட்டிவிட்டான்
காலில் விலங்கு கழற்றினான் காவலனும்
ஆடை கொடுத்தான் அடைக்காயுந் தான்கொடுத்தான்
சேனைமத வீரருக்குச் சேனைதிர வியங்கொடுத்தான்
இனிவாரு மென்றுசொல்லி எழுந்திருந்தான் கர்ணனும்
மேக மலைபோலே மெள்ள நடந்துவந்தான்
காவலர்கள் சூழ்ந்துவரக் கர்ணன் வழிநடந்து

## கர்ணர் திரியன் சபைக்கு வருகிறது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்சபையில்
வந்து நுழைந்தார்கள் மன்னர் பெருஞ்சபையில்
காஞ்சிநா டாளுங் கர்ணர்வந்து வீற்றிருந்தார்
வந்ததொரு சேனையெல்லாம் மன்னர்களைக் கண்டார்கள்
தேசத்தை யாளுந் திரியனுக்குத் தெண்டனிட்டார்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
மகுட முடியசக்கி மன்னவனும் சாய்ந்திருந்தான்
தெண்டனிட்ட மன்னர் திரும்பி யெழுந்திருந்து
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரும் ஏதுசொல்வார்

## அர்ச்சுனன் தேறுதலுரைப்பது.

அஞ்சாதீர் அஞ்சாதீர் அரையர்களே அஞ்சாதீர்
மூன்றுநாட் பொழுதே முடிமன்னர் ஆளுவது

நால்நாள் எங்களது ஆகுதுகாண் ராச்சியங்கள்
ரட்டிப்புச் சம்பளங்கள் நானே தருகிறேன்
தர்மருக்கு இப்போ சனியன் துலேந்தது
வீமருக்கு இப்போ விடுதி தொலேந்தது
மாது மயிர்முடிக்க நாளாச்சு மன்னவரே
கோதிக் குழல்முடிக்க நாளாச்சு மன்னவரே
ஏதுக்கும் அஞ்சாதீர் என்பிறகே வாருமென்றார்
இவ்வா றவருரைத்த வார்த்தைக ளத்தனேயும்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
கடுகடுத்து வீற்றிருந்தான் கருநாகங் கொண்டவனும்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனருந் தான்பார்த்து

## அர்ச்சுனர் கர்ணருக்குச் சொல்லுகிறது.

காஞ்சிநா டாளுங் கர்ண ரெதிரில்வந்து
யானே கொடுத்தீர் அடைக்காய் மிகக்கொடுத்தீர்
சேனே கொடுத்தீர் திரவியமுந் தான்கொடுத்தீர்
ஒன்று குறைய விட்டீரே உத்தமரே
அந்தக் குறைநீக்கி யனுப்புமென்றான் உத்தமனும்
காஞ்சிநா டாளும் கர்ண ரவர்கேட்டு
அஞ்சு வயதுடைய அர்ச்சுனர்க்கு ஏதுசொல்வார்
என்ன குறையாக்கி விட்டேன்காண் இந்திரரே
ஏது குறையாச்சு உந்தமக்கு சொல்லுமென்றான்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரு மேதுசொல்வார்

## அர்ச்சுனருக்கு வெள்ளானே கொடுத்தது.

சிற்றப்பா ரேறிவந்த செல்வ மதக்களிறு
வேந்தரவ ரேறிவந்த வெள்ளானே வேணுமென்றார்
வெள்ளானே நீகொடுத்து விடைதந் தருளுமென்றார்
காஞ்சிநா டாளுங் கர்ண ரதுகேட்டு
பூரித் திருதோளும் பொன்னு பரணமின்ன
திரேகங்க ளார்ப்பரித்து இருதோளும் பூரித்து

உள்ளங் குளிர்ந்து உடம்பெங்கும் பூரித்து
அரைச்சசெழுஞ் சந்தனத்தில் வீற்றிருந்த பாவனைபோல்
வெள்ளானை சோடித்து வேந்தர்க் கனுப்புமென்றான்
அங்கிருக்குந் தூதுவர்கள் ஆணழகர் தாம்கேட்டு
சொல்லப்பெற்றோ மென்றுசொல்லிச் சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற்றோ மென்றுசொல்லிக் கும்பிட் டெழுந்திருந்து
அவ்வீதி விட்டு நடந்தார் அழகாக
யானைப் பணிக்கர் இருக்கு மிடத்தில்வந்து
வெள்ளானை சோடித்து வாருமென்றார் தூதுவரும்
யானைப் பணிக்கர்கள் அவ்வார்த்தை தான்கேட்டு
யானை யவிழ்த்து அலைதாரர் ஓடிவந்து

## தூதுவர் யானை கொண்டுவருகிறது.

யானைக்கு நீராட்டி அலர்கண்ணில் மையெழுதி
கண்ணுக்கு மையெழுதிக் கஸ்தூரி பொட்டுமிட்டு
நாலுகால் வண்டபமாம் நடுநெற்றிக் குச்சுகளாம்
வெள்ளிக் கொலுசுகளாம் வெண்முத்துத் தாவடமாம்
கண்ணாடி சல்லிகட்டி கவரிமான் சுங்குவிட்டு
யானையைச் சோடித்து வந்தார் அலைதாரர்
அரண்மனை வாசலிலே யானைவந்து நின்றது
காஞ்சிநா டாளுங் கர்ணருக்குத் தெண்டனிட்டு
யானைவந்து தென்றான் அழகான தூதுவனும்
யானையும் வந்துதென்று அடிவணங்கித் தெண்டனிட்டான்
காஞ்சிநா டாளுங் கர்ணரவர் ஏதுசொல்வார்
பாசத் திளவரையர் படைகூட்டந் தன்னுடனே
ஆனந்த வாழ்மார்பர் உம்ஐயர் காணுமென்றான்
வெள்ளானை மேலேறி வேந்தனைக் காணுமென்றான்

## அர்ச்சுனன் யானையில் வருகிறது.

அஞ்சு வயதுடைய அர்ச்சுனருந் தான்கேட்டு
துள்ளி யெழுந்தான் துவண்ட மலரெடுத்தான்

பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
யானையின் முன்னேவந்தான் அர்ச்சுன னனவனும்
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவனைக் கண்டது வெள்ளானை
உந்தனுக்கோ துக்கம்ஐயா உத்தமனே வீரியனே
எந்தனுக்குத் துக்கம் இருக்கு தெழுந்திரென்று
துக்கமாய் தானிருந்து தும்பிக்கையால் தூக்கிறது
அஞ்சு வயதுடைய அர்ச்சுன ராசாவும்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
நீட்டியிடுங் கால்களுக்கு நெரிஞ்சிப்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
உருவின கத்தியுடன் உத்தரீயந் தோளிலிட்டு

## அர்ச்சுனன் யானையின்மேலேறிப் பயணப்படுகிறது.

படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பந் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
கைத்தளத்தைத் தட்டி கருத்தானை யேறினான்
மத்தகத்தை தட்டி மதவானை யேறினான்
வீர மதவானை வெள்ளானை மேலேறி
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனஞ்சென் றேறுமென்றான்
அப்படிக்கே யாகுதென்று ஆனந்த வாழ்மார்பர்
சரியானை ஏறினார் தன்னோடொத்த ராசாக்கள்
அருகானை ஏறினார் அஞ்சுலட்சம் ராசாக்கள்
பக்கானை ஏறினார் பத்துலட்சம் ராசாக்கள்
போரானை ஏறினார் பெருமையுள்ள ராசாக்கள்
சிலமன்ன ரெல்லோருந் தேரின்மே லேறினார்

பலமன்ன ரெல்லோரும் பல்லக்கி லேறினர்
குலமன்ன ரெல்லோருங் குதிரையின்மே லேறினர்
அழகான மன்னரெல்லாம் ஆனையின்மே லேறினர்
முன்னே முரசெடுத்து முன்னணி மேற்போட்டார்
ஒருகோடி வாத்தியங்கள் ஒருமிக்க சத்தமிட
இருகோடி வாத்தியங்கள் எங்குமே சத்தமிட
பட்டப் புலவர் பதினெட்டு மந்திரிகள்
சிங்கங் கரடிபுலி சேர்ந்து முழங்கிவர
இப்படியாய் வீரரெல்லாம் ஏறினர் வாகனங்கள்
ஏறின போதே எடுத்தார் சிலவிருது

## குடையின் சிறப்பு.

ஏறின போதே எடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடையாம் முழுமாணிக்கப் பொற்குடையாம்
தங்கக் குடையாம் தவள நெடுங்குடையாம்
பட்டுக் குடையாம் பவள நெடுங்குடையாம்
வச்சிரக் குடையாம் வைடூரி யக்குடையாம்
எடுத்து நிறுத்தினர் எண்ணு யிரங்குடைகள்
சுற்றி நிறைந்தார்கள் சூரியனைக் காணுதே
பக்கம் நிறைந்தார்கள் பகவானைக் கண்மறைக்க
ஒற்றைக் குடைநடுவி லுத்தமரும் வாருராம்
பூச்சக்ரக் குடைநடுவில் பூபாலர் வாருராம்
அலங்காரக் குடைநடுவில் அருச்சுனரும் வாருரே
பச்சைக் குடைகவியப் பார்மன்னர் தேர்நடக்க
முத்துக் குடைகவிய முடிமன்னர் தேர்நடக்க
இரத்தினக் குடைகவிய இராசாக்கள் தேர்நடக்க
யானை கிறுகிறென்ன அணிமன்னர் கொக்கரிக்க
குதிரை யனுமானிக்கக் கோடிமன்னர் சத்தமிட
ஊதினன் சின்னம் உலகே முலகதிர
ஊதினன் காள முலகு தலைதுடிக்க
செம்பொன்னற் காளம் திசைவிளங்க ஊதினன்

பொன்னினுற் காளம் பொருந்தநின் றூதினன்
அவ்வீதி விட்டு நடந்தார் அழகாக

## அருச்சுனன் பெருந்திருவாள் வீதி வருகிறது.

தெத்துத் தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
மற்றுமொரு வீதியிலே வாருரே அர்ச்சுனரும்
பேடைமயிற் கண்ணுள் பெருந்திருவாள் வீதியிலே
பெருந்திருவாள் வீதியிலே வாருரே அர்ச்சுனனுர்
அஞ்சு வயதுடைய அர்ச்சுன ராசதுரை
அருச்சுனன் போறேனென்று ஊதினன் சின்னத்தொனி
ஊதினன் சின்னத்தொனி கேட்டாளே உத்தமியும்
பேடைமயிற் கண்ணுள் பெருந்திருவாள் தான்கேட்டு
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பெண்டுகளும்
அத்தனை பெண்டுகளும் அல்லவருந் தான்கூடி
அம்மானை யாடி அழலாடி பந்தாடி
சொக்கட்டான் சூது சதுரங்கந் தானுடி
கொம்பனைமா ரெல்லோரும் கூடிவிளை யாடினுர்
திருவனையா ரெல்லோருஞ் சேர்ந்தாடி தாமிருந்தார்
அந்தச் சமயத்தி லாரணங்கு தான்பார்த்து
பேடைமயிற் கண்ணுள் பெருந்திருவா ளேதுசொல்வாள்
பந்தாடும் பெண்களே பார்த்தன் வருகிறுன்
வளநாடி பேரன் வருகிறுன் வீதியிலே
வல்லிடும் பேரனவன் வாருண்டி வீதியிலே
இந்த மனைபுகுந்து யாவரையுங் கண்டாலே
பாட்டிமார் என்றுசொல்லி பரிகாசம் பண்ணிடுவான்
கொம்பனைமா ரெல்லாருங் கூடி ஒளியுமென்றுள்
அங்கிருக்கும் மங்கையர்கள் அனைவோருஞ் சம்மதித்து
அப்படிக்கே யாகுதென்று அனைவோரும் போயொளித்தார்
மங்கையர்க ளெல்லோரும் மறைவாகப் போய்மறைந்தார்
திரியோ திரன்தேவி திருவனை நாயகமும்
என்னசெய்யப் போறுன் இளவிஜய னருச்சுனனும்
இருந்துநாம் அறிவோம் அவனுடைய வித்தைகளை

என்றுமவள் சொல்லி இம்மாளிகை வீற்றிருந்தார்
இப்படி யாக இவளிருக்கும் வேளையிலே
அஞ்சு வயதுடைய அர்ச்சுன ராசதுரை
பாசத் திளவரையன் படைக்கூட்டந் தன்னுடனே
பேடைமயிற் கண்ணாள் பெருந்திருவாள் வாசல்வந்து
யானைவிட்டுக் கிழிறங்கி யானந்த வாழ்மார்பன்
வாளுருவி கைபிடித்து வல்லயத்தை தோளிவிட்டு
பாசத் திளவரையன் படைக்கூட்டந் தன்னுடனே

## பெருந்திருவாளரண்மனையில் திஷ்டோதிரன் தேவியை சின்ன அர்ச்சுனன் மானபங்கமாய்த் துகிலுரிதல்.

பேடைமயிற் கண்ணாள் உட்கட்டில் போய்புகுந்தான்
திஷ்டோ திரன்தேவி திருவனையாள் முன்னேவந்து
அவளாடுங் கழல்பறித்தான் அம்மானை தான்பறித்தான்
போடுங் கழல்பறித்தான் பள்ளாங் குழிபறித்தான்
கொம்பனையா ளோடுமவன் கொஞ்சுங் கிளிபறித்தான்
பெண்பெருமா ளோடும்அவன் பேசுங் கிளிபறித்தான்
பாட்டன் விளையாடி பரியாசம் பண்ணுப்போல்
சிரித்து விளையாடிச் சீரை யுரிந்தானே
கொஞ்சி விளையாடிக் கூறை களைந்தானே
பாசத் திளவரையன் படைகூட்டந் தன்னுடனே
மாலை முடியானும் மந்திரிகள் கைகொடுத்தான்
மந்திரிகள் கைகொடுத்து மன்னவனு மேதுசொல்வான்

## அருச்சுனன் சாட்சி வைத்தது.

கண்டீரோ ராசாக்கள் காணவில்லை என்னுதீர்
பார்த்தீரோ ராசாக்கள் பார்க்கவில்லை என்னுதீர்
ஆடம் பலத்தில் அரையர் சபைநடுவே
பேரம் பலத்தில் பெரியார் சபைநடுவே
தோரா வடிவழகி துரோபதையாள் என்னுச்சி

அவ்வழகும் ஒப்பனையும் ஆருமில்லை வையகத்தில்
திருவழகு மொப்பனையுந் தேசத்தில் கண்டதில்லை
துரௌபதையைக் கொண்டுவந்து தூங்குமஞ்ச மேற்றிவைத்தான்
ஆரணங்கைக் கொண்டுவந்து அம்பல மேற்றிவைத்தான்
பேரம் பலத்தில் பெரியோர் சபைநடுவே
பஞ்சவர்கள் தேவியைப் பங்கப் படுத்தவென்று
சொல்லாதுஞ் சொல்லித் துகிலு முரிந்தானே
பேசாதும் பேசிப் பட்டைக் களைந்தானே
அவனுரிந்த ஆடை அனேகமா மம்பலத்தில்
உரிந்த துகில்கள் கோடானு கோடியுண்டு
ஆரானுஞ் சொல்லி யளவிட லாகாது
ஒருவராற் சொல்லி உவமையிடப் போகாது
அதுசற்றே நழுவி உடைகுலையு மாமானல்
மானுவதும் அன்றல்லோ ஐவர்பஞ்ச பாண்டவர்கள்
பிடித்தது வில்லுமல்லோ போர்விஜயர் பஞ்சவர்க்கு
மாய னருளாலே மான மிருந்தது
தேவ ரருளாலே நின்றூர்காண் பூமியிலே
எதிராளி செய்த இடும்பைத் திருப்பினேன்
பங்காளி செய்த பருவந் திருப்பினேன்
சரிக்குச் சரியாய்த் துகிலுரிந்தேன் மன்னவனே
ஐயாவுக் கிப்போ தடையாளங் கொண்டுபோறேன்
என்றுமவன் சொல்லி எழுந்து நடக்கலுற்றான்

## அருச்சுனன் பெருந்திருவாளைக் கண்டது.

பேடைமயிற் கண்ணாள் பெருந்திருவாள் நாயகியை
கண்ணாலே கண்டானே காளை அருச்சுனனும்
ஓடி யொளித்தாயே ஓடைமலர்க் கண்ணாளே
உன்னையுங் கூட வுடனாகத் தான்சேர்த்து
வெட்கங் கெடுப்பேன் வேடிக்கை பார்ப்பேன்
பலர்க்கு முன்பாகப் பவிஷைக் கெடுப்பேனே
மறைந்து இருந்ததனல் பிழைத்தீர்காண் பெண்ணணங்கே
என்றுமவன் சொல்லியல்லோ எழுந்து நடக்கலுற்றான்

## அருச்சுனன் யானை யேறுகிறது.

படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பம் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
மத்தகம் தான்பிடித்து மதயானை ஏறினான்
கைத்தலத்தைத் தட்டிக் கறுத்தானை யேறினான்
வீர மதயானை வெள்ளானை மேலேறி
வந்தவந்த பேர்களெல்லாம் மதயானை யேறினார்
அப்படிக்கே யாகுமென்று யானையின்மேல் ஏறினார்
அவ்வீதி விட்டு நடந்தா ரழகாக
மற்று மொருவீதி மன்னவர்கள் தாண்டியல்லோ
சோலை யடுத்தார்கள் சுந்தரப்பூ முடியாரும்
தென்னமரச் சோலைத் திரும்பியந்த தேர்விசயன்
மாமரச் சோலை திரும்பியந்தத் தேர்விசயன்
அஞ்சு வயதுடைய அர்ச்சுன ராசதுரை
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்

## அருச்சுனன் பூங்காவில் கோலிக்குண்டு ஆடுகிறது.

உப்புகந்த மாடுகிறான் உத்தமனார் வீரியனும்
செண்டுவிளை யாடுகிறான் சேனைகள் தம்முடனே
இப்படி யாக இவனிருக்கும் வேளையிலே
பேடைமயிற் கண்ணாள் பெருந்திருவாள் ஏதுசொல்வாள்
திஷ்டோ திரன்தேவி திருவனையாட் கேதுசொல்வாள்
அப்போதே சொன்னேனே தப்புவரு மென்றுசொல்லி
என்வார்த்தை கேளாதே இருந்தாயே ஆரணங்கே
மானங் கெடுத்தானே மதிமோசம் போனாயே
சிலபேரைக் கூட்டிவைத்துப் பற்றித் துகிலுரிந்தான்
மண்வலத்தார் முன்பாக மானங் கெடுத்தானே
பாகைவிதை போட்டால் பயற்றங்காய் காய்த்திடுமோ
கத்தரிச் செடிபோட்டால் கஸ்தூரி முளைத்திடுமோ
மரமல்லி செடியதுதான் குடமல்லி பூத்திடுமோ
நாகத்தின் குட்டிக்கு நல்லவிஷ மில்லையோ

செந்நாகக் குட்டி சிறுமல் விடுவதுண்டோ
என்றுமவள் சொல்லி இருந்தாள் பெருந்திருவாள்
சிந்தை கலங்கிடவே திஷ்டேற திரன்தேவி
மாரடித்து மங்கையரும் மண்மேல் புரண்டழுது
மோதிரக் கையை முகத்தி லறைந்துகொண்டு
சாவேன் கெடுவேன் சமுத்திரத்தில் போய்விழுவேன்
மானங் குலைந்தபின்பு மண்மே லிருப்பேனோ
துகிலிழந்து நின்றபின்பு பூமியிலே தங்குவனோ
என்று மவளழுதாள் ஏலக் கருங்குழலும்
அங்கு மொருதாதி அறிவுடையா ளோடிவந்து
வாரி யெடுத்து மடிமேலே இருக்கவைத்து

## தாதி சீர்திருத்துகிறது.

பூணர் தேகத்தில் புழுதி பலதுடைத்து
ஆபரணந் தான்திருத்தி அழகாக செப்பனிட்டு
கொப்புத் திருத்தியவள் கோர்வைகள் திருத்தி
அவிழ்ந்த தலைமயிரை அள்ளி யவள்சொருகி
ஆச்சி நீர்கேளும் அடியேன் ஒருவார்த்தை
என்னாச்சி நீர்கேளும் என்னுடைய நல்வார்த்தை
மருமகள் பெற்றெடுத்த மதயானைக் கன்றல்லோ
அஞ்சு வயதுடைய அறியாத பாலகன்தான்
அவன்மேலே குற்றஞ்சொல்ல லாகுமோ என்னாச்சி
பாட்டியார் என்றுசொல்லிப் பார்த்தன் விளையாடினான்
சிறுபாட்டி யென்றுசொல்லிச் சிறிது விளையாடினான்
கோபித்துக் கொன்வாரோ கொத்தார் குழலாரே
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சிநீ ஆறிவிடும்
தேறிவிடுந் தேறிவிடுந் திருவனையாய் தேறிவிடும்
என்று மவளுரைக்க ஏதுசொல்வாள் திருவனையாள்
ஒருத்தனாய் வந்தானா உத்தமியாள் தாதியரே
பலபேரைக் கூட்டிவந்து பற்றித் துகிலுரிந்தான்
சேனைகளைக் கூட்டிவந்து சீரை களைந்தானே

மானங் குலேந்தபின்பு மண்மே லிருப்பதில்லே
இன்ன மொருநாழி நில்லேனுன் மண்மேலே
சாவேன் கெடுவேன் சமுத்திரத்தில் போய்விழுவேன்
என்ன-தாமக் குழலாளுந் தாதியவ ளேதுசொல்வாள்

## திரியோதிரனுக்குச் சமாசாரந் தாதிகளுரைப்பது.

தேசத்தை யாளுந் திரியனுக்குச் சொல்லுவோம்
அம்பலத்து வாசலிலே அனேவோர்க்குஞ் சொல்லிடுவோம்
அனேவர்க்குஞ் சொல்லி அவன்தலேயை வாங்கிடுவோம்
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சிநீ ஆறிவிடும்
தேறிவிடுந் தேறிவிடுந் திருவனேயாய் தேறிவிடும்
பட்டெடுத்துக் கட்டிபல வீரியர் தங்களேப்போல்
ஒட்டெடுத்துக் கட்டியங்கே ஓடிவாருள் தாதியவள்
எட்டடியும் ஓரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியும் ஓரடியாய்ப் பதறி மிகநடந்து
தெத்துத் தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
தேசத்தை யாளுந் திரியோ திரன்கொலுவில்
சிங்கா தனத்துக்கு முன்பாகத் தெண்டனிட்டாள்
தெண்டனிட்ட தாதி திரும்ப எழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதாள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
நீ-யார்பெண்ணே தாதி அறிய வுரையென்ருன்
யார்பணியு மல்ல பெருமாள் திருப்பணிதான்
ஒருவர்பணியு மல்ல உம்முடைய நற்பணிதான்
இஷ்டோ திரன்தேவி திருவனேயாள் தாதியென்ருள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
செண்டாடு மன்னன் திரியோதிர னேதுசொல்வான்
நீயிங்கே வந்த தெனக்கறியக் கூறிடென்ருன்
ஐயாவே நீர்கேளும் அடியே ெனுருவார்த்தை
என்னேயா நீர்கேளும் இன்ன மொருவார்த்தை

'பேடைமயிற் கண்ணாள் பெருந்திருவாள் மாளிகையில்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பெண்டுகளும்
கொம்பனைமா ரெல்லாரும் கூடிவிளை யாடினார்கள்
திருவனையா ரெல்லாருஞ் சேர்ந்துவிளை யாடினார்கள்
பந்து கழலாடிப் பைங்கிளிமார் வீற்றிருந்தார்
அந்தச் சமயத்தில் அர்ச்சுன வீரியனும்
பாசத் திளவரையன் படைக்கூட்டந் தன்னுடனே
ஓடைமலர்க் கண்ணனும் உட்கட்டிற் போய்ப்புகுந்தான்
திஷ்டோ திரன்தேவி திருவனையாள் நாயகியாள்
ஆடுங் கழல்பறித்தான் அம்மானை தான்பறித்தான்
பாடுங் கழல்பறித்தான் பள்ளாங் குழிபறித்தான்
கொம்பனையா ளோடுமவன் கொஞ்சுங் கிளிபறித்தான்
பெண்பெருமா ளோடுமவன் பேசுங்கிளி பறித்தான்
பாட்டன் விளையாடி பரியாசம் பண்ணப்போல்
சிரித்து விளையாடி சீரை களைந்தானே
கொஞ்சி விளையாடிக் கூறை யுரிந்தானே
திஷ்டோ திரன்தேவி திருவினை நாயகியும்
சாவேன் கெடுவேன் சமுத்திரத்தில் போய்விழுவேன்
செத்து மடிவேனென்றாள் செலவழிந்து போவேனென்றாள்
மாண்டு மடிவேனென்றாள் வைகுண்டஞ் சேர்வேனென்றாள்
இனியிருப்ப தில்லையென்று ஏலக் கருங்குழலும்
அழுது புலம்புகிறாள் ஆனந்த வாழ்மாரி
அந்த விசேஷம் அதுசொல்ல வந்தேனென்றாள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
வெட்கம் பெரிதாகி வேல்பொருவுங் கண்ணனும்

## திரியன் வெட்கித் தலை குனிந்தது.

தாம முடியான் தலைகுனிந்து வீற்றிருந்தான்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரையரெல்லாம்

கெக்கலி கொட்டி நகைத்தாரே மன்னரெல்லாம்
கைகொட்டித் தானகைத்தார் கட்டழக ரெல்லோரும்
திரியோ திரன்தம்பி திஷ்டோ திரன்பார்த்து
கோபித்துக் கண்சிவந்து கொல்லுங் குருவியைப்போல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
மீசை துடிக்க முழிகள் பொறிபறக்க
சிந்தை கலங்கிடவே திஷ்டோதிர னேதுரைப்பான்
அர்ச்சுனன் செய்ததெல்லாம் ஆனந்த மாச்சுதோ
பார்த்தனவன் செய்ததெல்லாம் பரியாச மாச்சுதோ
சிரிக்க வுடலெடுத்தோம் சீயென்னப் பேரெடுத்தோம்
நகைக்க வுடலெடுத்தோம் நாயென்னப் பேரெடுத்தோம்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனனார் வீரியத்தை
அரைநாழிக் கொள்ளையிலே யல்லவரும் பார்த்திருக்க
அவன்தலையை நான்வாங்கி வருகிறேன் பாரென்று
அண்ணன் முகம்நோக்கி ஆணழகன் ஏதுசொல்வான்
ஒரு-அக்ரோணி சேனையது உத்தமனே நீகொடுத்தால்

## திஷ்டோதிரன் யுத்தத்துக்குப்போக அண்ணனைச் சேனைகேட்டது.

தூதுரைக்க வந்ததொரு சுந்தரனார் பூமுடியும்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனனார் பூமுடியும்
இருவர் தலையறுத்து இப்போதே கொண்டுவந்து
அண்ணாஉன் பாதமதில் அடைவுடனே வைப்பேனென்றான்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
செண்டாடு மன்னன் திரியோ திரன்கேட்டு
மெத்த மகிழ்ந்தானே வேல்பொருதுங் கண்ணனும்
சந்தோஷ மாகிச் சரீரம் பூரித்து
தேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
ஒரு-அக்ரோணி சேனையது உத்தமனுந் தான்கொடுத்து
திஷ்டோ திரனுக்குச் சேதிகள் ஏதுசொல்வான்

தூதுரைக்க வந்ததொரு சுந்தரனுர் பூமுடியும்
அரைநாழிக் கொள்ளையிலே அறுத்துவந்து சேருமென்றான்
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்தான்
விடைபெற் றெழுந்திருந்தான் வேந்தர் பெருமானும்
சிந்தை கலங்கிடவே திஷ்டோதிரன் தானெழுந்தான்

## கர்ணர் வேண்டாமென்று தடுக்கிறது.

காஞ்சிநா டாளும் கருண ரவர்பார்த்து
திஷ்டோ திரனுக்குச் சொல்வார் ஒருவார்த்தை
போகாதே போகாதே போர்மன்ன போகாதே
அறியாத பையனென்று அமருக்குப் போகாதே
சின்னஞ்சிறு பையனென்று சண்டைக்குப் போகாதே
இவருட கும்புக்கு எல்லாப் பலமுமுண்டு
மாயர் வலிமையுண்டு மகாதேவர் கிருபையுண்டு
சுவாமி வலிமையுண்டு தேவர் கிருபையுண்டு
ஆதிசிவ சங்கரனுர் அவர்வலிமை மெத்தவுண்டு
பரமனுடன் வாதாடிப் பாசுபதம் பேறுபெற்றான்
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தனுட பேரனல்லோ
அவர்களுடன் யுத்தஞ்செய்ய யாரால் முடிந்திடும்காண்
போகாதே போகாதே பிழைமோசம் வந்துவிடும்
சண்டைக்குப் போகாதே சவுரியங்க ளற்றிடுவாய்
என்றுசொல்லக் கர்ணரவர் ஏதுசொல்வான் திஷ்டோதிரன்
உன்பேச்சு கேட்பேனென்று எண்ணுதே நீகருண
என்ன-காஞ்சிநா டாளும் கருணரவர் கேட்டு
சித்தத்துக் கேற்றபடி செய்தருளு மென்றுசொன்னர்
கொலுவைவிட்டு நீங்கியல்லோ கொற்றப்பூ வீரியரும்
காசிவளநா டாளுங் கருணர் பெருமாளும்
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
மாளிகைக்கு வந்து படுத்தாரே மன்னவரும்
பஞ்சணை மெத்தையிலே பள்ளிகொண்டார் கருணரும்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே

## திஷ்டோதிரன் யுத்தத்திற்குப் போகிறது.

சிந்தை கலங்கிடவே திஷ்டோ திரன்தானும்
ஒரு-அக்ரோணி சேனையுடன் உத்தமனும் வெளியானான்
சிந்தை கலங்கிடவே தேரின்மே லேறினான்
திஷ்டோ திரராசன் தேரின்மே லேறினான்
ஒரு-அக்ரோணி சேனையுடன் உத்தமர்கள் வந்தார்கள்
ஊதினான் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினான் காள முலகு தலைதுமுக்க
அஞ்சு வயதுடைய அர்ச்சுன வீரியன்மேல்
போர்பொருத வாறேனென்று ஊதினான் தாரைசின்னம்
சண்டைக்குப் போறேனென்று சங்கெடுத்து ஊதினான்
அவ்வீதி விட்டு நடந்தான் அழகாக
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
தென்ன மரச்சோலை திரும்பினான் தேர்விசையன்
மாமரச் சோலையிலே வந்தானே மன்னவனும்
திஷ்டோதிரன் வந்தேனென்று சின்னமெடுத் தூதினான்
சண்டைக்கு வந்தேனென்று சங்கமெடுத் தூதினான்
சண்டையென்று சொல்லிச் சண்டைநகா ரடிபடுது
ரணங்கள் ரணங்களென்று ரணபேரி யடிபடுது
அஞ்சு வயதுடைய அருச்சுனனுந் தான்கேட்டு
ஏறமுகம் பார்த்தான் இலங்குநற் பூமுடியான்

## சின்ன அர்ச்சுனன் யுத்தஞ் செய்கிறது.

அண்ணாந்து பார்த்தான் அரையன் திருமுகத்தை
கொட்டி நகைத்தானே குலுங்க இருபுஜமுங்
கைகொட்டித் தானகைத்தான் காலன்போல் வீரியனும்
ஆனந்த மார்பன் அட்டங்கால் தான்துடைத்து
மாலை முடியானும் மண்கையைத் தானுதறி
படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
வீர மதயானை வெள்ளானை மீதேறி
முக்கம்பம் தட்டி முதுகின்மேல் காலைவைத்து

கைத்தலத்தைத் தட்டிக் கறுத்தானே பேறினன்
அஞ்சு வயதுடைய் அருச்சுன வீரியனும்
திஷ்டோ திரனுக்குச் சொல்வா னொருவார்த்தை
முன்னையும் பூசை முதற்பூசை வந்தாயே
சற்றே மனந்தளர்ந்து சண்டைக்கு வந்தாயோ
சாமர்த்திய முள்ளவன்போல் சண்டைக்கு வந்தாயோ
தாம முடியானே தருமமாய்ச் சொல்லுகிறேன்
சரியா யிருந்தல்லோ சண்டைபண்ணி வெல்லுவையோ
எதிரா யிருந்தல்லோ என்னைநீ வெல்லுதற்கு
உந்தனு லாகுமோ உத்தமனும் வீரியனே
ஓடிப் பிழைத்திடென்றான் உத்தமனும் வீரியனும்
உன்தனு லாகாது ஓடிப் பிழையென்றான்
அவனுரைத்த மொழிகேட்டு ஏதுசொல்வான் திஷ்டோதிரன்
பாலனல்ல வென்றுசொல்லிப் பதறியங்கே வில்லெடுத்தான்
அஞ்சு வயதுடைய அருச்சுனன் தான்பார்த்து
அறியாத பாலகன்மேல் அரசன்வந்து தானெதிர்த்தான்

## அருச்சுனன் மாயவரை நினைக்கிறது.

ஐவரையுங் காக்கின்ற மாயவரே வாருமையா
ஏழுலக மாளுகிற எம்பெருமாள் வந்தருளும்
சோலே மலேயுடைய சொக்கரே வந்தருளும்
ஆனே மலேயுடைய அகிலாண்ட ஈஸ்வரரே
அல்லி யிலேமேலே பிறப்பித்தா யாச்சியரை
அறியாது சண்டைசெய்ய அருகாக வந்தருளும்
வாளின் முனையிலே வந்தருளும் ஈஸ்வரரே
என்று மவன்சொல்லி யெடுத்தானே வில்லதனை

## அர்ச்சுனன் யுத்தம்.

வில்லெடுத்து நாரிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
விட்டான் ஒருபாணம் விண்ணதிர மண்குலுங்க
விண்ணதிர மண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
மற்று மொருகணையை மறுகணையைத் தான்தொடுத்தான்
இன்ன மொருபாண மெடுத்துவிட்டா னிந்திரனும்
திஷ்டோ திரன்பார்த்து சிந்தை கலங்கிநின்றான்

அர்ச்சுனன்-மற்று மொருகணையை மறுகணையைத் தான்தொடுத் [தான்
அக்ரோணி சேனைகள் அடங்கலும் பட்டார்கள்
ஒருமிக்கப் பட்டார்கள் உத்தமனார் சேனைகள்
சண்டைக்கு வல்லையென்று சலாம்பண்ணி யோடுவாராம்
பிச்சைக்கு வந்தோமென்று பூணூலைக் காட்டிடுவார்
நாமத்தைக் காட்டுவாராம் நான்தாத னென்பாராம்
பூணூலைக் காட்டுவாராம் பிராமண ரென்பாராம்
அஞ்சு வயதுடைய அருச்சுனனுந் தான்பார்த்து
மற்றுமொருகணையை மறுகணையைத் தான்தொடுத்தான்
இன்னஞ் சிலகணையை எடுத்தானே யிந்திரனும்
விட்டான் சிலகணையை தொடுத்தந்த யிந்திரனும்
மண்ணதிர விண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
சிந்தை கலங்கிடவே திஷ்டோ திரன்பார்த்து

## திஷ்டோதிரன் தோற்றது.

கால்நடுங்கக் கைநடுங்கக் கட்டழகன் வீரியனும்
குலைகள் நடுங்கிடவே குப்புறவே தான்படுத்தான்
தேர்மேலே தான்படுத்தான் திஷ்டோ திரப்பெருமான்
அஞ்சு வயதுடைய அருச்சுனனுந் தான்பார்த்து
நெற்றிக்கு நேர்பிடித்து விட்டான் ஒருபாணம்
வந்த சிலபாணம் வல்லிடிபோ லேவிழுந்து
திஷ்டோ திரனும் தோற்றான் சிகரமற்றான்
தோற்றான் சிகரமற்றான் தேர்ப்பாகன் முடியுமற்றான்
அச்சற்றான் ஆணிஅற்றான் அம்பறாத் தூணியற்றான்
தேரைவிட்டுக் கீழ்குதித்துத் திருடன்போ லோடுகிறான்
தேரு முடைந்தது செம்புரவி செத்தது
ஒருத்தனாய் ஓடுகிறான் உத்தமனும் வீரியனும்
பதாதியாய் ஓடுகிறான் பாவிதிஷ் டோதிரன்
திஷ்டோதிரன் ஓடுவதை சிறுவ னவன்பார்த்து
அஞ்சு வயதுடைய அருச்சுனனு மேதுசொல்வான்
போகாதே போகாதே போர்மன்னா போகாதே
முன்னையும் பூசை முதற்பூசை வந்தாயே
சண்டைபண்ணி வெல்லாமல் போகலாமோ தார்வேந்தா

பின்காட்டப் பின்கொடுத்து போகாதே புண்ணியனே
இப்படியாச் சொல்லுகையில் ஓடுகிறான் திஷ்டோதிரன்
அப்போது அருச்சுனரும் ஆணழக ரேதுசொல்வார்
போகாதே போகாதே புண்ணியனே போகாதே
பகர்காலிற் பெற்றெடுத்த ஆணழகா ஓடாதே
அந்திக் கண்ணன் பெற்றெடுத்த ஆணழகா ஓடாதே
குருடனவன் பெற்றெடுத்த குலக்கொழுந்தே ஓடாதே
கண்ணில்லான் பெற்றெடுத்த கட்டழகா ஓடாதே
உன்-ஐயர் திரு வாணைகண்டாய் ஆச்சிமே லாணைகண்டாய்
அண்ணன்மே லாணைகண்டாய் இனித்திரும்பி ஓடாதே
அண்ணன்மே லாணையென்ன அஞ்சிப் பயந்தானே

## திஷ்டோதிரன் அர்ச்சுனனைக் கேட்டுக்கோள்ளுகிறது.

ஆயுதத்தைக் கீழ்போட்டு அடியேன் சரணமென்றான்
உன்-புண்ணியத்தி னாலே பிழைத்தோடிப் போறேனென்றான்
தரும மதினாலே பிழைக்கவழி பாருமையா
என்ன-அஞ்சு வயதுடைய அர்ச்சுனன் தான்கேட்டு
அங்கிருக்கும் மன்னவர்க்கு ஆணழக னேதுசொல்வான்
சமர்த்துள்ள வீரியன்போல் சண்டைபண்ண வந்தானே
என்னைக் கெலியாமல் ஏன்திரும்பி ஓடுகிறான்
இப்படிக் கொத்ததொரு ஆணழகன் வீரியனை
வெட்கங் கெடுக்கவேண்டும் வேந்தர் சபைநடுவே

## திஷ்டோதிரனை அர்ச்சுனன் பன்றிவடிவாக்கி பாட்டன்மார்க்கனுப்புதல்.

மானங் கெடுக்கவேண்டும் மன்னவர்கள் மண்டபத்தில்
பங்கப் படுத்தவேண்டும் பாட்டனுக் கனுப்பவேண்டும்
என்று மவருரைத்து எழுந்திருந்தார் அர்ச்சுனரும்
ஒணுங் கொடியறுத்தார் உத்தமனார் வீரியரும்
பச்சைக் கொடியறுத்தார் பாலக ரருச்சுனரும்
திஷ்டோதிரன் கைகாலை சிறுவ ரவர்பிடித்து
கால்கட்டுங் கைகட்டுங் கட்டியாந்த காவலரும்

அசையாமல் கட்டினார் ஆனந்த வாழ்மார்பர்
நாலுகால் மத்தியிலே நடுவேயொரு கொம்பைவிட்டு
பன்றி வடிவாகப் பார்த்திபனைச் சோடித்து
கூர்ம வடிவாகக் கொற்றவனைச் சோடித்து
என்னவென்று சாபம் இடுகிறா ரருச்சுனரும்
கட்டவிழ்க்க வந்ததொரு காவலர்க ளெல்லாரும்

## திஷ்டோதிரனுக்குச் சாபம்.

தச்சன் கருமான் தரமறிந்த சிற்பாசாரி
மந்திரி பிரதானிகள் மற்றுமுள்ள ராசாக்கள்
கட்டவிழ்க்க வந்ததொரு கனமுள்ள வீரியரும்
ஓட்டிக்கொண்டு போகவென்று உத்தமருஞ் சாபமிட்டார்
தொட்டுவந்த மன்னரெல்லாம் ஓட்டிக்கொண்டு போகவென்றார்
எங்கள்-வமிசத்தார் வந்துதொட்டால் விட்டுவிட வேண்டுமென்று
தூதுவரைத் தானழைத்துத் தூக்கி நடவுமென்றார்
நாலுபேர் தூதுவர்கள் நன்றாகத் தானெடுத்தார்
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்தார்
நாலுபேர் தூக்கி நடந்தார்கள் வீதியிலே
அந்தஅந்த வீதிகளில் வாழுகின்ற மன்னவர்கள்
இதுஎன்ன கோலமென்று எல்லவரும் ஓடிவந்து
கட்டை யவிழ்த்தார்கள் காவலனார் வீரியர்கள்
குய்யோ முறையோவென்று கூவினார் மன்னவர்கள்
ஐயையோ தெய்வமென்று அலறிப் புலம்புகிறார்
அந்தத் தெருத்தாண்டி மற்றுமொரு வீதியிலே
தச்சன் கருமான் தரமறிந்த சிற்பாசாரி
மந்திரி பிரதானி மற்றுமுள்ள ராசாக்கள்
கட்டவிழ்க்க வந்தார்கள் காவலனார் வீரியர்கள்
தொட்டு அவிழ்த்திடவே ஓட்டிமிக நடந்தார்கள்
ஒரு-அக்ரோணி சேனையுடன் உத்தமர்கள் போறார்கள்
குய்யோ முறையோவென்று கூச்சலிட்டுப் போறார்கள்

## திரியோதிரன் அம்பலத்தில் போய் விழுந்தது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்சபையில்
அம்பலத்து வாசலிலே எல்லவரும் போய்விழுந்தார்

அங்கிருக்கும் மன்னவர்கள் அரையர் துரையரெல்லாம்
குறுஞ்சிரிப்புக் கொண்டு குலுங்க நகைநகைத்தார்
தட்டி நகைத்தார்கள் தாம முடியார்கள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
மன்னன் மனஞ்சலித்து மருமம் வெளியிடாமல்
தலைகுனிந்து வீற்றிருந்தான் தாம முடியானும்
துய்ய கடத்துதித்த துரோண ரவர்பார்த்து
அங்கிருந்த தூதுவரை ஆணழகர் தாம்பார்த்து
காஞ்சிநா டாளும் கருணரைக் கூப்பிடென்றார்
தூதுவனுந் தான்கேட்டுத் தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு
அருளருளு மென்னையா அப்படிக்கே யாகுமென்று
எட்டடியும் ஓரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியு மோரடியாய்ப் பற்றி வழிநடந்து
காஞ்சிநா டாளுங் கருணருக்குத் தெண்டனிட்டான்
தெண்டனிட்ட தூதன் திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதான்
காஞ்சிநா டாளுங் கருண ரவர்பார்த்து
நீ-யாருடைய தூதன் அறிய வுரையென்றார்
யாருடைய தூதனல்ல அடியேனுன் உம்தூதன்
அம்பலத்தார் தூதனென்று அடிவணங்கித் தெண்டனிட்டான்
நீயிங்கே வந்த தெனக்கறியக் கூறிடென்றார்
துய்யர் குலத்திலே துரோண குருக்களும்
உம்மை யழைத்துவரக் கட்டளைக ளிட்டார்காண்
அரைநாழிப் போதில் அழைத்தோடி வாருமென்றார்
வாருமையா வென்று வருந்தியே தெண்டனிட்டான்
இன்னேர மங்கே யிருந்துநான் வந்தேனே
நானறியாக் காரியங்கள் வாய்திறந்து சொல்லிடென்றான்
ஏது வகையாக என்னை வரவழைத்தார்
வரவழைத்த காரியங்கள் வாய்திறந்து சொல்லிடென்றான்
அப்போது தூதுவனும் அடிவணங்கி ஏதுசொல்வான்
என்னமோ ஏதோ எனக்கொன்றுந் தெரியாது

ராசாக்கள் காரியங்கள் நமக்கு வெளிப்படுமோ
கத்திரியர் காரியங்கள் கலக்கம் வெளிப்படுமோ
மந்திரிகள் காரியங்கள் மருமம் வெளிப்படுமோ
வருக வருகவென்று வருந்தியே தெண்டனிட்டான்

## கருணர் திரியன் அம்பலத்துக்குப் பயணப்பட்டு வருகிறது.

காஞ்சிநா டாளுங் கருண ரெழுந்திருந்து
முத்து மிதியடியைத் தொட்டு மிகநடந்து
அம்பலத்து வாசலிலே ஆணழகர் வந்திருந்து
துய்யர் குலத்திலே துரோண ரவர்பார்த்து
கருணர் பெருமாளுக்குக் கண்சாடை காட்டினர்
காஞ்சிநா டாளுங் கருண ரதுவறிந்து
திஷ்டோ திரனறியத் திட்டெனவே வந்துநின்று
அப்போதே சொன்னேனே தப்பு வருமென்று
முன்னமே சொன்னேனே மோசம் வருமென்று
என்பேச்சைக் கேளாமல் எழுந்து நடந்தீரே
அறியாதான் என்றுசொல்லி அமருக்குப் போனீரே
அமருக்குப் போனிடத்தே அவகேடு கண்டீரே
சண்டைக்குப் போனிடத்தே சதிசெய்தான் கண்டீரே
என்று-காஞ்சிநா டாளும் கருண ரவருரைத்து
கட்டை யவிழ்த்தாரே காவலனர் வீரியரும்
உடனே-அக்ரோணி சேனைகளும் உத்தமரும் வெளியானர்
காலுதறிக் கையுதறிக் கடுக வழிநடந்தார்
அவரவர் மாளிகைக்கு அவரவர் போய்ச்சேர்ந்தார்
இப்படியாக இவரிருக்கும் வேளையிலே
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியரும்
காஞ்சிநா டாளுங் கருணருட வீதிவிட்டு

## புலந்திரர் துற்சடைவீதி வருகிறது.

மற்றுமொரு வீதியிலே வாருன் புலந்திரனும்
ஊதினன் சின்னம் உலகே ழுந்தானதிர
ஊதினன் காள முலகு தலைதுமுக்க

செம்பொன்னாற் காளம் திசைவிளங்க ஊதினான்
பொன்னினாற் காளம் பொருந்தநின் றூதினான்
ஊதினான் சின்னம் தொனிகேட்டா ளுத்தமியும்

## துற்சடைக்குத் தாதி சேதியுரைக்கிறது.

தாமக் குழலாளுந் தாதியவள் கேட்டு
எட்டடியும் ஓரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியும் ஓரடியாய்ப் பதறி மிகநடந்து
தோகை மயிலனையாள் துற்சடையாள் மாளிசென்று
தோகை மயிலனையாள் துற்சடையாள் வீற்றிருக்கும்
சிம்மா தனத்துக்கு முன்பாகத் தெண்டனிட்டாள்
தெண்டனிட்ட தாதி திரும்ப எழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழவே
நீ-யார்பெண்ணே தாதி அறிய வுரையென்றாள்
யார்பணியு மல்ல அடியேன் திருப்பணிதான்
ஒருவர் பணியுமல்ல உம்முடைய நற்பணிதான்
பேர்பெற் றுடைய பெருமாளே உம்பணிதான்
என்ன-நீயிங்கே வந்த தெனக்கறியக் கூறுமென்றாள்
வந்ததொரு காரியத்தை வாய்திறந்து சொல்லெனவே
சந்தோஷ மாக உரைக்கலுற்றாள் தையனல்லாள்
இந்நாட்டா னல்லகாண் இத்திசையா னல்லகாண்
தென்னாடு சூழத் திசைவணங்க வந்தவன்காண்
வையை வளநாடான் வந்தான்காண் வீதியிலே
மாது மணவாளன் வந்தான்காண் வீதியிலே
மாது மணவாளன் வரவுசொல்ல வந்தேனென்றாள்

## துற்சடை சந்தோஷப்படுகிறது.

தோகை மயிலனையாள் துற்சடையுந் தான்கேட்டு
தேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
உள்ளங் குளிர்ந்து உடம்பெல்லாம் பூரித்து
சந்தோஷப் பட்டுச் சரீரங்கள் பூரித்து
வளநாடி புத்திரனும் வந்தானோ அத்திபுரம்
மாது மணவாளன் வந்தானோ இத்தெருவில்

தென்னாடி சீர்மகனும் வந்தானோ திசைவிளங்க
தேவி மணவாளன் வந்தானோ வீதியிலே
என்று மனமகிழ்ந்து இருந்தாளே துற்சடையும்

## தாதிக்கு வேகுமதி கொடுத்தது.

மாது மணவாளன் வரவுசொன்ன தாதியர்க்கு
என்னத்தை யான்கொடுப்பேன் ஏலக் குழலியர்க்கு
வச்சிர மாணிக்கம் வாரிக் கொடுங்களென்றாள்
தோகை மயிலனையாள் துற்சடையா ளேதுசெய்தாள்
ஏழா நிலையும் எழுநிலையும் மேலேறி
மேலாங் தளத்தில் விடுகதவைத் தாள்திறந்து
பலகணி வாசல் திறந்தந்தப் பைங்கிளியும்
காசிப் படிதன்னைக் கனக்க மிதித்தேறி
பவழப் படிமிதித்துப் பைங்கிளியும் பார்த்திருந்தாள்
போரஞ்சா மன்னர் புலந்திரனார் சீர்வடிவை
அரையில் சொருகழுகும் அம்பொன்னாற் சீராவும்
கத்திச் சொருகழகும் கச்சைகட்டு வுள்மருங்கும்
கச்சைகட்டு வுள்மருங்குங் கனிவாயும் பேரழகும்
காசிவளநா டாளுங் கர்ணருட சீர்வடிவும்
காஞ்சிநா டாளுங் கருணர் திருவழகும்
தக்க புகழுடைய தருமருட மேனிகளும்
வெற்றி மதயானை வீமருட கால்நடையும்
காண்டா வனமெரித்தக் காளையுட கைவீச்சும்
நாம முடியான் நகுல னிடையழகும்
தாம முடியான் சகாதேவன் பூமுடியும்
ஆறுபேர் தன்னழகைப் பெற்றுவந்தான் ஆணழகன்
அடியா ளுடன்பிறந்த நூற்றொருவர் அரசர்கள்
எந்த னுடன்பிறந்தார் இளவிசையர் நூற்றொருவர்
நூற்றொருவர் ராசர்களும் இவனுக்கு எதிரலவே
நூற்றொருவர் பேரழகும் இவனழகுக் கீடாமோ
காஞ்சிநா டாளுங் கருணரு மீடலவே
ஈஸ்வரனைப் போலே யிருக்கிறா னிந்திரனும்
மன்மதனைப் போலே யிருக்கிறான் மன்னவனும்

மாது மணவாளன் மன்மதன்போல் தோணுகிறான்
கலந்தர்ரிக் கேற்றவன்காண் மணவாளன் பெற்றபிள்ளை
மாதுக் கிசைந்தவன்காண் மணவாளன் பெற்றபிள்ளை

## தாதிகள் ஆலாத்திசுற்றிக் காட்டுகிறது.

கண்ணெச்சில் கண்ணெச்சில் காவலனார் வீரியர்க்கு
ஆலாத்தி காட்டுமென்றார் அர்ச்சுனனார் புத்திரர்க்கு
அங்கு மொருதாதி அறிவுடையா ளோடிவந்து
இன்றுமுறை யென்தனது என்றுசொல்லித் தாதியவள்
முத்தினு லாலாத்தி முப்பதுநா றாயிரமாம்
பவளத்தா லாலாத்தி பத்துநா றாயிரமாம்
வெள்ளியா லாலாத்தி வேணநா றாயிரமாம்
கற்பூர ஆலாத்திக் காட்டியபந்தத் தாதியர்கள்
திருஷ்டி கழற்றித் தெருவெங்கும் விட்டெறிந்தார்
ஆலாத்தி காட்டி அணியிழைமார் நீங்கிநின்றார்
தோகை மயிலனையாள் துற்சடையாள் ஏதுசெய்வாள்

## மருமகன் வரவுகண்டு பள்ளியறை சோடிக்கிறது.

தாமக் குழலாள் தாதி முகம்நோக்கி
மாது மணவாளன் வருவானே மாளிகைக்குப்
பாங்கிகளே நீங்களெல்லாம் பள்ளியறை சோடிப்பீர்
என்ன-அங்குசில தாதியர்கள் அறிவுடையா ரோடிவந்து
சொல்லப்பெற் றோமென்று சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற் றோமென்று கும்பிட் டெழுந்திருந்து
பள்ளியறை மண்டபத்தைப் பைங்கிளிமார் தான்திறந்து
எங்கு நலங்கிட்டு எத்திசையும் நீர்தெளித்து
சாந்தால் தரைமெழுகிச் சந்தனத்தால் கோலமிட்டு
குங்குமத் தாலே குளிரத் தரைமெழுகி
கட்டிலின் மெத்தை கனக்க விரித்துதறி
ஏழாயிரம் பொன்பெற்ற இந்திரவர்ணப் பட்டெடுத்து
இந்திரவர்ணப் பட்டெடுத்து எங்கு மலங்கரித்து
காம்பரிந்த ஐங்கலப்பூ கட்டிலின் மேல்பரப்பி

பொன்னால் திரைவளைத்துப் பூமாலை சூட்டினார்
சன்னலிலே பன்னீரை சாடினா ரெத்திசையும்
குடங்குடமாய்ப் பன்னீரை கொட்டித் தெளித்தார்கள்
கெண்டிகையும் பூமலரும் வைத்தா ரழகாக
கிண்ணியிற் சந்தனமுங் கெண்டியில் தீர்த்தம்வைத்தார்
கச்சாயங் கொண்டுவந்து வைத்தார்கள் கிளிமொழிக்கு
சோடித்தோ மாச்சியென்று தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டார்
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியரும்
அந்தத் தெருத்தாண்டி மற்றுமொரு வீதியிலே
மற்றுமொரு வீதியிலே வாறானே மன்னவனும்
மாலை முடியானும் மன்னவனும் வாறானே
நின்றா னிலாவெரிக்கும் நீலமணி மண்டபமும்
நடந்தால் நிலாவெரிக்கும் நாதமணி மண்டபமும்
பவளத்தால் கால்நிறுத்திப் பதின்காதம் பந்தலிட்டு
முத்தாலே கால்நிறுத்தி முக்காதம் பந்தலிட்டு
ஈர்க்குப் பிளந்து இருபுறமும் பந்தலிட்டு
இப்படி யாக யிருக்குமந்த வீதிகளை
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்பார்த்து
யாருடைய வீதியென்றான் அல்லி திருமகனும்

## புலந்திரன் மாமனார் வீதிவருகிறது.

அங்கிருக்கு மன்னவர்கள் அரையர் துரையரெல்லாம்
கேட்ட புலந்திரற்குக் கேள்விசொல்ல மாட்டாமல்
நின்ற புலந்திரற்கு நீதிசொல்ல மாட்டாமல்
நெஞ்சுலர்ந்து நாவரண்டு நித்திலங்கும் பூமுடியார்
பச்சை முகம்கருகிப் பால்முகம் வேறுபட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மன்னர் முகங்கருகி வார்த்தைகளேதுசொல்வார்
மாலை முடியானே மாமன்மார் வீதியென்றார்
தங்கை மணவாளன் தறுதலையன் வீதியென்றார்

## புலந்திரன் சபதங்கூறுதல்.

போரஞ்சா மன்னர் புலந்திரனு ரேதுசொல்வார்
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
கோபித்துக் கண்சிவந்து கொல்லும் குருவியைப்போல்
சீறி எரிபறந்து சிங்கக்குட்டி போலுரைப்பான்
பிள்ளையைக் கொன்ருன் பெரும்பாவி தன்தெருவோ
மைந்தரைக் கொன்றதொரு மாபாவி தன்தெருவோ
வேறு வழியில்லையோ வேந்தர் பெருமானே
மறித்தும் வழியில்லையோ வேந்தர் பெருமானே
பிள்ளைகொன்ற வீதியிலே போகலாமோ மன்னவரே
மைந்தர்கொன்ற வீதியிலே வரலாமோ மன்னவரே
தாம முடியான் தறுதலைபான் பூமுடியை
சாமத்துக் குள்ளே தரங்கொள்வே னென்றுசொல்லி
அரைநாழிக் குள்ளே அறுத்து எறிவேனென்று
கொட்டினர் மேளங் குமுறவிட்டான் பேரிகையை
ஆழி கரைபுரள அடித்தான் ரணபேரி
ஊழிகாலத் திடிபோல வூதினன் சின்னத்தொனி
ஊதினன் சின்னம் உலகே முலகதிர
ஊதினன் காளம் உலகு தலைதுமுக்க
செம்பொன்னுற் காளந் திசைவிளங்க வூதினன்
பொன்னினுற் காளம் பொருந்தநின் றூதினன்
இப்படிக்கா இந்திரனும் இவனிருக்கும் வேளையிலே
ஊதின சின்னத் தொனிகேட்டா ளுத்தமியும்

## துற்சடை புலம்பல்.

தோகை மயிலனையாள் துற்சடையாள் தான்கேட்டு
மரம்வெட்டி சாய்த்தாப்போல் மாதரும் கீழ்விழுந்து
என்-மாதுக்கு வாழ்வு வருகிறது என்றிருந்தேன்
என்-மங்கிலியம் போறசேதி மண்மேலே நானறியேன்
தாலிபறி போகுமென்று தரணியிலே தானறியேன்
என்று மனதுருகி ஏங்கிப் புலம்புகிருள்

மாலை முடியாளும் மண்மேல் புரண்டழுதாள்
தாம முடியாள் தரையில் புரண்டழுதாள்
ஆனந்த மாரியரும் அடித்துப் புரண்டழுதாள்
அந்தக் குரல்கேட்டு ஆனந்த வாழ்மாரி
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி ஓடிவந்து
வாரி யெடுத்து மாதாவைக் கொண்டணைத்து
தொட்டிட்டு மாதர் துகிலால் முகந்துடைத்து
வந்துவிழுங் கண்ணீரை வெண்துகிலால் தான்துடைத்து
பூணார தேகத்தைப் புழுதி பலதுடைத்து

## கலந்தாரி பிள்ளையை வரவழைத்தல்.

பட்டுத் துகிலாடை தொட்டு மேலுடுத்தி
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரைத் தானழைத்து
ஐயருக்கு முன்பாக அரசனைப் போகவிட்டு
மைந்தரைப் போகவிட்டு வார்த்தை யறிந்திடலாம்
பிள்ளையைப் போகவிட்டுப் பேச்சை யறிந்திடலாம்
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சியரே ஆறிவிடும்
தேறிவிடுந் தேறிவிடுந் தேவியரே தேறிவிடும்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி நாயகமும்
அங்குமொரு தாதியரை ஆரணங்கு தானழைத்து
அஞ்சு வயதுடைய அர்ச்சுன வீரியரை

## தாதி அழைக்கிறது.

அவன்-எங்கே யிருந்தாலும் எவ்விடத்தில் சென்றாலும்
அரைநாழிப் போதே அழைத்தோடி வாருமென்றாள்
அப்படிக்கே நல்லதென்று ஆனந்த வாழ்மாரி
போறா ளவள்தாதி பொன்னா பரணமின்ன
பொற்பிரப்பங் கோல்பிடித்துப் போறா ளவள்தாதி
தென்னமரச் சோலைத் திரும்பியந்தத் தாதியரும்
மாமரச் சோலைவந்து மன்னவரைக் கண்டாளே
உப்புகந்த மாடுகிற உத்தமனா ரண்டைவந்து
அமுது புசிப்பதற்கு ஆச்சி யழைத்தாள்காண்

வாருமையா சுந்தரரே வந்தமுது கொள்ளுமென்று
தூக்கி மடியில்வைத்துத் துரிசாய் வழிநடந்தாள்
வீதியும் வீதி தெருவும் பலதாண்டி
தேரோடும் வீதி தெருவும் பலதாண்டி
தோகை மயிலனையாள் துற்சடையாள் பாலில்வந்து
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி முன்னேவந்து
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரும் வந்தார்காண்

## அருச்சுனர்க்குப் போசனமிட்டுச் சிங்காரித்தல்.

அமுது படையுமென்றார் ஆனந்த வாழ்மாரி
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி தான்கேட்டு
அஞ்சு வயதுடைய அர்ச்சுன ராசருக்கு
மஞ்சன நீராட்டி மயிர்முடிந்து பின்போட்டு
ஈர முலர்த்தி யிழைசேர்ந்த பட்டுடுத்தி
நனைந்த துகில்களைந்து நாகரிகப் பட்டுடுத்தி
சீரான நெற்றியிலே திருநீற்றுக் காப்புமிட்டு
கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டுமிட்டு
ஐவரது மோதிரம் அழகுபெறச் சாத்தினர்
வட்டப் பதக்கங்களும் மார்நிறைந்த தாழ்வடமும்
தாளிப் பதக்கங்களும் சன்னல்பின்னல் தாழ்வடமும்
தொப்புளின்மேல் மாணிக்கம் வைத்தாளே சுந்திரர்க்கு
கொம்பில் சிறுதேனுங் கோதுபடாச் சர்க்கரையும்
மலையில் சிறுதேனும் மங்களச் சர்க்கரையும்
கூட்டிக் குழப்பியந்த கொற்றவர்க்கு ஊட்டினள்
தள்ளிப் பிசைந்துமந்த தார்வேந்தர்க் கூட்டினள்
உண்டு புசித்தபின்பு உத்தமர்க்குக் கைபலம்பி
பொன்னினல் துப்பட்டிப் போர்த்தி யவள்மூடி
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்து
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரே நீர்கேளும்
வையை வளநாட்டார் வந்தாராம் உங்களையர்
உங்கஜளயருக் கிப்போது அதிசயமாய் நீர்பேசி

மன்னவரைக் கூட்டி வரவழைத்து வாருமென்றாள்
அஞ்சு வயதுடைய அருச்சுனருந் தான்கேட்டு

## அர்ச்சுனன் மாதாவுக்கு உத்தரவு கூறுதல்.

மாதா வுரைகேட்டு மைந்தர் மனமகிழ்ந்து
ஆச்சி யுரைகேட்டு ஆணழகன் சம்மதித்து
மடியைவிட்டுக் கீழிறங்கி மன்னவன் ஏதுசொல்வான்
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழகன் ஏதுசொல்வான்
ஆச்சிநீர் கேளும் அடியே னொருவார்த்தை
என்னாச்சி நீர்கேளும் அடியே னொருவார்த்தை
ஐவர்கள் பட்ட அக்கிரமம் நீயறிவாய்
பஞ்சவர்கள் பட்ட பரிபோகந் தானறிவாய்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவ ரம்மான்மார்
மண்டலத்தார் தாமறிய மன்னவரைத் தானழைத்து
ஐவர்பஞ்ச பாண்டவரை அங்கே வரவழைத்து
மாயத்தால் சூதாடி மண்ணுருக மண்பறித்து
மாதைத் துகிலுரிந்து மன்னவரைக் காடோட்டி
கோதை துகிலுரிந்து கொற்றவரைக் காடோட்டி
பருக்கல் உறுத்த பனிவந்து அலைமோத
ஓடும் பருக்கலது உள்ளங்கால் தானுறுத்த
கவிந்த மரத்தருகில் கண்பள்ளி கொண்டிருந்தார்
வையை வளநாட்டார் வந்தாரே யாமாகில்
தண்ணீரில் நஞ்சிடுவார் தாம முடியார்க்கு
அடைக்காயில் நஞ்சிடுவார் ஆனந்த மார்பருக்கு
பொய்யா தனமிடுவார் பொய்கைவள நாட்டார்க்கு
உன்-அம்மான்மார் செய்த அக்கிரமம் நீகேளாய்
மாமன்மார் செய்த வஞ்சனைகள் நீயறிவாய்
அம்மான்மா ரெல்லோரும் அடங்கலும் மாண்டபின்பு
மாமிமார் தாலி யறுத்த பிறகாக
அத்தைமார் தாலி யடங்கலு மறுத்தபின்பு
ஐயாவைத் தேடி அழைத்தோடி வாறதுவும்

வையை வளநாடார் வருவாருன் மாளிகைக்கு
பாலமுத முண்பதுவும் பத்தி யுலாவுவதும்
அடிசில் சமைப்பதுவும் ஆலித்து வாழ்வதுவும்
அன்றைக்கு ஆகட்டும் ஆச்சியரே யென்றுரைத்தாள்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி தான்கேட்டு
மைந்த ருரைத்ததற்கு மாதா மனமகிழ்ந்து
உச்சி முகந்துபிள்ளை உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கம் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
மைந்தரைத் தானிடுக்கி வந்தாளே மாதாவிடம்

## அர்ச்சுனன் துற்சடையென்னும் பாட்டியாரைக் காணுகிறது.

அஞ்சு வயதுடைய அர்ச்சுன ராசாவும்
பாட்டியார் பாதமது பார்த்தன் வணங்கிநின்றான்
துற்சடையாள் பாதம் செல்வன் வணங்கிநின்றான்
தோகை மயிலனையாள் துற்சடையுந் தான்பார்த்து
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைத்திருப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்தத் தூணதுபோல் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்தத் தூணதுபோல் விலங்கா தரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாளைப் போல்வாழ்வீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டஞ் சேர்த்திடுவீர்
மாற்றானை வென்றிடுவீர் மண்டலத்தை யாண்டிடுவீர்
எதிரிகளைக் கொன்றிடுவீர் எல்லையர சாண்டிடுவீர்
வாழ்வீர்காண் என்று மனங்குளிர வாழ்த்தினாள்
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்தாள்

## சின்ன அர்ச்சுனனுக்குத் துற்சடையாள் தன்கணவனைக் காப்பாற்றும்படிக் கூறுதல்.

அஞ்சு வயதுடைய அர்ச்சுனரே நீர்கேளும்
ஆரார்கள் பட்டாலும் அம்பலத்தார் பட்டாலும்

எவரெவர்கள் பட்டாலும் இளவரையர் மாண்டாலும்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பட்டாலும்
காஞ்சிநா டாளுகிற கர்ணரவர் மாண்டாலும்
கண்மணி யானதொரு கர்ணரு மாண்டாலும்
தாலி தருவீரே சுவாமி பெருமாளே
மங்கிலியம் வாங்கி வருவீரோ மன்னவரே
வைபை வளநாட்டார் வந்தாரே யுங்களையர்
உங்க-ளையருக் கிப்போது அதிசயமா நீயுரைத்து
மங்கிலியம் நிற்கவேதான் வழிபாரு மன்னவரே
தாலிக் கயிறிருக்க வரந்தாரும் புண்ணிபரே
என்று மவருரைக்க ஏதுசொல்வா ரர்ச்சுனரும்

## பாட்டியார் துற்சடைக்குச் சின்ன அர்ச்சுனன் உத்தரவு கூறுதல்.

மடியைவிட்டுக் கீழ்குதித்து வந்துமுன்னே நின்றலவோ
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழக னேதுசொல்வான்
ஆச்சிநீர் கேளும் அடியே னொருவார்த்தை
என்னாச்சி நீர்கேளும் என்னுடைய நல்வார்த்தை
நூலார் கடுந்திரளார் நூற்றொருவ ரனைவோரும்
ஐவரையுங் கொண்டுவந்து ஆட்டிவைத்தா ரனைவோரும்
பாஞ்சாலியைக் கொண்டுவந்து பற்றித் துகிலுரிந்தார்
துரோபதையைக் கொண்டுவந்து துகிலு முரிந்தாரே
துரோபதை நாயகியைத் தூங்குமஞ்ச மேற்றிவைத்தார்
அம்பலத்தார் தங்கள்முன்னே ஆடாது மாட்டிவைத்தார்
ஆட்டினது மல்லாமல் ஓட்டிவிட்டார் ஊரைவிட்டு
கட்டழக ரைவருமே கானகத்தில் வாசம்செய்தார்
ஐவர்பஞ்ச பாண்டவரும் ஆரணங்கு துரோபதையும்
மன்னர்பஞ்ச பாண்டவரும் மயிலனையாள் துரோபதையும்
எப்போது தொலையுமென்று ஏங்கி மனந்தளர்ந்து
வனமாய் வனந்திரிந்தார் வையகங்கள் தாமறிய
நாட்டைத் துறந்தார்கள் நல்ல பதியிழந்தார்

வீட்டைத் துறந்தார்கள் வேந்தர்க ளனைவருமே
ஊரைத் துறந்தார்கள் உற்றபதி யிழந்தார்கள்
மன்னவருந் தேவியுமாய் வனத்திலே வாசம்செய்தார்
தோரா வடிவழகி துரோபதை நாயகியாள்
அவளழகு மொப்பனையும் ஆருமில்லை வையகத்தில்
திருவழகு மொப்பனையும் தேசத்தில் கண்டதில்லை
தேசத்தை யாளுந் திரியோ திரன்தானும்
மாலை முடியானும் மைத்துனனைத் தானழைத்து
துரோபதையைக் கொண்டுவந்து தூங்குமஞ்ச மேற்றிவைத்தான்
பாவையரைக் கொண்டுவந்து படிக்குமஞ்ச மேற்றிவைத்தான்
இப்பெரிய நாடும் எழில்பெரிய சீமைகளும்
என்னுடைய நாடுங் கர்ணர்மறை ஆதினமும்
அத்தனையுந் தாரேனென்றான் ஆனந்த வாழ்மார்பன்
நல்லதென்று சம்மதித்தான் நாம முடியானும்
துரோபதையைக் கொண்டுவந்து சேர்க்கிறே னென்றுசொல்லி
தாம்பூலம் பெற்றானே தாம முடியானும்
ஒண்டி ரதமேறி உத்தமனும் போகலுற்றான்
அவர்-ஒளித்திருக்கு மவ்வனத்தை உத்தமனும் தான்தேடி
ஒக்கப் பிறந்த உடற்பிறப்பென் றெண்ணாமல்
மைத்துனனார் தேவியென்று மனதிலே எண்ணாமல்
பஞ்சவர்கள் தானிருக்கும் பார வனம்புகுந்து
ஐவரில்லா வேளையிலே ஆணழகன் வந்துநின்று
தோரா வடிவழகி துரோபதையாள் தன்னுடனே
நல்ல தனமாக நாயகிக்குத் தானுரைத்து
அவளை யழைத்துபோக ஆலோசனைகள்செய்து
ஆயுதத்தைக் கீழ்போட்டு ஆணழகன் தேரேறி
துரித முடனாகத் தேரை நடத்தலுற்றான்
துரோபதையுந் தான்பார்த்துத் துடித்து மிகவெழுந்து
ஆயுதத்தைத் தானெடுத்து அண்ணாவே யென்றழைத்தாள்
இந்தாரு மாயுதங்கள் என்றழைத்தாள் துரோபதையும்
மூன்றும் படியேறிக் கொடுத்தாளே மொய்குழலும்

அவ-ளெட்டிக் கொடுக்கையிலே தட்டி நடந்துவிட்டான்
அப்போது துரோபதையாள் அலறிப் புலம்பினுள்
குய்யோ முறையோவென்று கூச்சலிட்டுத் தானழுதாள்
கூச்சல் குரல்கேட்டுக் கொற்றவர்க ளோடிவந்தார்
அலறின சொற்கேட்டு ஐவர்களு மோடிவந்தார்
இவ்வுலகந் தானறியும் எம்பெருமாள் தாமறிவார்
மண்டலங்கள் தானறியும் மன்னவர்கள் தாமறிவார்
சோலை மலையுடைய சொக்கரவர் தாமறிவார்
உந்தன் மணவாளன் வந்த பெருங்கோலம்
கழுதையாய்ப் போகவிட்டார் கட்டழகர் வீரியர்கள்
பஞ்சவர்கள் பட்டதொரு பாடுகள் மெத்தவுண்டு
உங்களால் பட்டதெல்லாஞ் சொல்லி முடியாது
உனக்குத்-தாலி தருகிறது எப்படிகாண் தையலரே
எல்லாரின் தாலிகளை அந்திக் கறுத்தாலே
பாட்டியே உன்தாலி பகலுக் கறுப்பேனென்றான்
தோகை மயிலனையாள் துற்சடையுந் தான்கேட்டு

## சின்ன அர்ச்சுனன்சோல்லப் பாட்டி புலம்புகிறது.

இதுக்கோநான் மன்னவனே இத்தனை பாடுபட்டேன்
என்று-மாலை முடியாளும் மண்மேல் புரண்டழுதாள்
தாம முடியாளுந் தரையில் புரண்டழுதாள்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி ஓடிவந்து
தொட்டிட்டு மாதாவைத் துகிலால் முகந்துடைத்து
வந்துவிழுங் கண்ணீரை வெண்பட்டால் தான்துடைத்து

## கலந்தாரி தன் தாயார் துற்சடைக்குச் சமாதானங் கூறல்.

அறியா தறியுமோ ஆனந்த வாழ்மார்பன்
இதற்குள்ளா பாரபுத்தி எங்கேகற்று னருச்சுனனும்
வையைவள நாடானுக்கு மனமுருகச் சொல்லிடுவோம்
ஆறிவிடும் ஆறிவிடும் என்னுச்சி ஆறிவிடும்

தேறிவிடும் தேறிவிடும் என்னுச்சி தேறிவிடும்
என்று அஞ்சு வயதுடைய அர்ச்சுனரைத் தான்பார்த்து
திருஷ்டி கழற்றினர் தேனர் கருங்குழலும்
பூமியைக் கிள்ளியல்லோ பொருந்தி விடைகொடுத்தாள்
போய்வாரு மென்று பொருந்தி விடைகொடுத்தாள்
விடைபெற் றெழுந்திருந்தான் வேந்தர் பெருமானும்

## அர்ச்சுனன் புறப்படுகிறது.

வீர மதயானை வெள்ளானை மேலேறி
முக்கம்பந் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
கைத்தலத்தைத் தட்டி கறுத்தானை ஏறினன்
மத்தகத்தைத் தட்டி மதயானை ஏறினன்
சரியானை ஏறினர் சரியொத்த ராஜாக்கள்
அருகானை ஏறினர் ஐந்துலட்சம் ராஜாக்கள்
பக்கானை ஏறினர் பத்துலட்சம் ராஜாக்கள்
சிலமன்ன ரெல்லாருந் திடுக்கிட் டெழுந்திருந்து
முன்னே முரசெடுத்து முன்னானை மேல்போட்டார்
பின்னே முரசெடுத்துப் பின்னானை மேல்போட்டார்
சிலமன்ன ரெல்லாருந் தேரின்மே லேறினர்
குலமன்ன ரெல்லாருங் குதிரையின்மே லேறினர்
பலமன்ன ரெல்லாரும் பல்லக்கி லேறினர்
அழகான மன்னரெல்லாம் ஆனையின்மே லேறினர்
பட்டர் புலவர் பதினெட்டு மந்திரியும்
சிங்கங் கரடிபுலி சேர்ந்து முழங்கிவர
யாளி புலிகரடி அருகில் முழங்கிவர
எத்திலங்கு பூமுடியார் ஏறினர் வாகனங்கள்

## குடையின் சிறப்பு.

ஏறின போதே எடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடையாம் முழுமாணிக் கக்குடையாம்
தங்கக் குடையாம் தவள நெடுங்குடையாம்
பட்டுக் குடையாம் பவழ நெடுங்குடையாம்

வச்சிரக் குடையாம் வைடூரிய நற்குடையாம்
எடுத்து நிறுத்தினர் எண்ணு யிரம்குடைகள்
சுற்றி நிறைந்தார்கள் சூரியனைக் காணுமல்
பக்கம் நிறைந்தார்கள் பகவானைக் காணுமல்
ஒற்றைக் குடைநடுவில் இருந்தந்த புண்ணியனும்
பூசக்கிரக் குடைநடுவில் இருந்தந்த உத்தமனும்
ஒற்றைக் குடைபிடிக்க உத்தமர்கள் தேர்நடக்க
பச்சைக் குடைகவியப் பார்வேந்தர் தேர்நடக்க
பட்டுக் குடைகவியப் பகவானைக் கண்மறைக்க
ரத்தினக் குடைபிடிக்க ராஜாக்கள் தேர்நடக்க
குடைகள் பிடித்திடவே கொற்றவர்கள் சூழ்ந்துவர
ஊதினன் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினன் காள முலகு தலைதுழுக்க
செம்பொன்னுற் காளந் திசைவிளங்க ஊதினன்
பொன்னினுற் காளம் பொருந்தநின் றூதினன்

## சின்ன அர்ச்சுனன் பாட்டன்மார் பேர் சொல்லுவதும் பாட்டிமார் எழுபேரையும் தான் மாலையிட்டதாக தாரை சின்னம் ஊதுகின்றது.

என்னவென் றூதினன் எழில்விஜயன் பேரனவன்
பொய்யாத வாசகனுர் புகழுடைய தருமலிங்கம்
தக்க புகழுடைய தருமரென் றூதினன்
பாரிய திண்டோளன் பகலிடும்பன் பற்பிடுங்கி
சாடிப்போர் வென்றவனும் நான்தான்என் றூதினன்
கைலாசம் போயிருந்து சமர்த்தரைக் கண்டலவோ
பரமனுடன் யுத்தம்பண்ணிப் பாசுபதம் பேறுபெற்று
பாசுபதம் பேறுபெற்றப் பார்த்திபனென் றூதினன்
பச்சை மடல்விரியும் பாளைவிரி பூமணக்கும்
பாஞ்சால ராஜன் பசுமணப்பூம் பந்தலிலே
வில்லை வளைத்து இளங்கொடியை மாலையிட்டு

சுண்டு விரல்பிடித்த சுந்தரனார்என் றாதினன்
அம்மி வலமாக அரசாணி முன்பாக
சாலுங் கரகமும் முன்பாகத் தாலிகட்டி
அரசாணி சுற்றிவந்த ஆண்பிள்ளைஎன் றாதினன்
அவளுக்கு-வாய்த்த மணவாளன் வேந்தனென் றாதினன்
சோரா வளநங்கை சுபத்திரை நாயகியாள்
சந்யாசி வேஷங்கொண்டு சடுதியில் போயிறங்கி
மாய ரனுமதியால் மங்கையரைத் தூக்கியல்லோ
ஒண்டி ரதத்தோடே உத்தமியைக் கொண்டுவந்து
மாலையிட்டுக் கொண்ட மணவாளனென் றாதினன்
தாலிகட்டவந்த தனஞ்சயனென் றாதினன்
நாக மடந்தை நறுநுதலாள் நாயகியை
காண்டா வனமெரித்த கர்த்தர் வருகையிலே
வனமெரித்த வண்மைகளைக் கண்டந்த நாகேந்திரன்
என்தன் வடிவழகைக் கண்டநா கேந்திரன்
மாதரை என்தனுக்கு மாலையிட்டுத் தந்தார்கள்
தாரார் குழலாளைத் தாலிகட்டி வந்தேன்காண்
நாககன்னிக் கானதொரு நல்ல மணவாளன்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் அல்லியர்க்கு
மாலையிட வேண்டுமென்று வந்தேன் மதுரையிலே
வேட்டைக ளாடினேன் மெல்லி யவளுடனே
அம்பு பொறுக்கித்தந்தேன் ஆனந்த மாரியர்க்கு
காளியம்மன் கோயிலுக்குக் காவு கொடுங்களென்றாள்
அதுக்கும் பிழைத்தேனே ஆயருட புண்ணியத்தால்
பூதக் கிடங்கதனில் போட்டு அடையுமென்றாள்
அதுக்கும் பிழைத்தேனே ஆயருட புண்ணியத்தால்
அங்கே ஒருநாளில் ஆண்டி வடிவெடுத்தேன்
படம்விரித்துப் பிச்சைக்கேட்டு பாவாடை வாங்கிவந்தேன்
பார்ப்பானும் பார்ப்பாத்தியும் போல வடிவெடுத்தேன்
அல்லியுட மாளிகையில் அங்கேவந்து தானமர்ந்து
இலட்சுமி நோன்பு நடத்தினே மப்போது

குஷ்டரோகி வேஷம்கொண்டு தட்டினே னப்போது
அவளுட விருதறுத்துப் போய்ச்சேர்ந்தே னத்திபுரம்
அவளை-வந்து மடலூர்ந்த மைந்துனன்என் றாதினன்
அவளை-மயக்கி மடலூர்ந்த மைத்துனன்என் றாதினன்
மேகம் பயந்தெடுத்த மின்னொளியாள் நாயகியை
தாலிகட்டிக் கொண்ட தனஞ்சயனென் றாதினன்
வந்து மடலூர்ந்த மன்னவனென் றாதினன்
பங்கயஞ்சீர் கண்ணுள் பவளக் கொடியாள்
மைந்தனுக்குத் தேர்வேண்டி வந்தேனவள் ராச்சியத்தில்
வேட்டைக ளாடிவந்தாள் வேல்பொருதுங் கண்ணுளும்
கட்டழகி நாயகியைக் கண்டு மயலானேன்
அன்ன வடிவெடுத்து அவளைவந்து மாலையிட்டேன்
அவளை-மாலையிட்டுக் கொண்ட மணவாள னென்றாதினன்
தாலி தரித்த தனஞ்சயனென் றாதினன்
எட்டாத பொன்னுலகம் ஏறிப்போ யிந்த்ரபடை
புட்பமலர் கொண்டுவந்த புண்ணியனென் றாதினன்
நாம முடியான் நகுலனென் றாதினன்
சாத்திரக் கொடிவேந்தன் சகாதேவனென் றாதினன்
ஐவ ருடவிருது முழங்கிவந்தா னங்ஙனமே
விருது முழக்கிடவே வேந்தன் நடக்கலுற்றான்
ஊதினன் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினன் காளம் உலகு தலைதுமுக்க
செம்பொன்னற் காளந் திசைவிளங்க ஊதினன்
பொன்னிறற் காளந் திசைவிளங்க ஊதினன்
அருச்சுனனர் போறேனென்று அரற்றுது தாரைசின்னம்
விசையனர் வாறேனென்று முரசு முழங்குது
ஐவர்களும் வாரேமென்று அரற்றுது தாரைசின்னம்
காதவழிக் கிப்பாலே ஊதுது தாரைசின்னம்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
ஊதின சின்னத் தொனிகேட்டா னுத்தமனும்

## சின்ன அர்ச்சுனன் ஊதுகிற தாரை சின்னத்தைப் பற்றி பொன்னுமலை நாடானுடன் புலந்திரன் ஆலோசனை செய்கிறது.

மாமா முகம்நோக்கி மன்னவனு மேதுசொல்வான்
அம்மான் முகம்நோக்கி ஆணழகன் ஏதுசொல்வான்
ஐவ ருடைவிருது அடைவாக முழங்கிற்றே
ஆர்வரவு மாமா அறிய வுரையுமென்றான்
பொன்னுமலை நாடாளும் அண்ணவும் ஏதுசொல்வார்
மைந்தர் படையெடுத்து வருகிறார் மன்னவனே
பிள்ளை படையெடுத்து வருகிறார் புண்ணியனே
எதிர்போய்க் காணுமென்றார் எத்திலங்கு பூமுடியார்
போரஞ்சா மன்னன் புலந்திரருந் தான்கேட்டு
ஐவர் திசைநோக்கி ஆணழகன் தெண்டனிட்டான்
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்

## தகப்பனும் பிள்ளையும் யானைவிட்டிறங்கி எதிர்கொண்டு காணுகிறது.

காலால் நடக்கலுற்றான் காவலன் வீரியனும்
நடுவாக வாறானே ஞாயி றுதித்தாற்போல்
எட்டி நடைநடந்தான் எதிரேநிற்குஞ் சூரியன்போல்
அஞ்சு வயதுடைய அருச்சுனருந் தான்பார்த்து
ஐயர் குறிப்பறிந்து அடிவணங்கித் தெண்டனிட்டு
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
வீர மதயானை வெள்ளானை விட்டிறங்கி
தோட்ட மதுதிறந்து தொன்னைதைத்துப் பூவெடுத்து
மல்லிகை முல்லை மருவு மருக்கொழுந்து
பாதிரி முல்லை பருத்ததொரு சண்பகமும்
இருவாட்சி புன்னை இசைந்ததொரு கஸ்தூரி
சிறுமல்லி குடமல்லி சேர்ந்ததொரு புஷ்பமெல்லாம்
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்

பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
வீசி நடந்தானே வேல்பொருதுங் கண்ணனும்
அய்யருக் கெதிரேவந்து அருச்சுன ராஜாவும்

### தகப்பனுக்குப் பிள்ளை நமஸ்காரம் செய்கிறது.

பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
வண்ணவண்ணப் பூமலரை விதவிதமாய்த் தானெடுத்து
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபெனத் தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கி தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
அஞ்சு வயதுடைய அருச்சுன வீரியனும்
நின்றானே பூமியிலே நெடுங்கால் கடுத்துவிழ
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியரும்
ஏனென்று கேளாமல் ஏறமுகம் பாராமல்
வாயைத் திறவாமல் மறுவார்த்தை சொல்லாமல்
மறுவார்த்தை சொல்லாமல் மரமாகி நின்றுவிட்டார்
எண்ணுதும் எண்ணுது இந்திரவீரியற்கு
தோணுதுந் தோணுது தோகைநல்லாள் புத்திரற்கு
அங்குமொரு தூதன் அருகாக ஓடிவந்து

### தூதர் பொன்னுமலைநாடானை அர்ச்சுனனுக்கு அம்மானென்றுரைத்தது.

அஞ்சு வயதுடைய அர்ச்சுனர்க்குச் சொல்லுவான்
உங்கள்-அய்யருக் கம்மான் அவர்காணும் என்றுசொன்னான்
அஞ்சு வயதுடைய அருச்சுனருந் தான்கேட்டு
போம்போம் மகனாரே முன்னமே சொல்லொணுதோ
அறியாத பாலனுக்கு அப்போதே சொல்லொணுதோ
என்றுமவன் கோபங்கொண்டு எத்திலங்கும் பூமுடியான்
கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
வேர்த்து விரிவிரித்து விழிகள் சிவப்பேறி
அத்தனை கோபமெல்லாம் அடக்கி யொருபுறமாய்

பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பொன்னுமலை நாடாளும் அண்ணனுக் கெதிரில்வந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கி தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
அறியாதான் செய்தபிழை ஐயா பொறுத்தருளும்
பார்த்தனவன் செய்தபிழை பாட்டா பொறுத்தருளும்
பொறுத்தருள வேண்டுமென்று பின்னொருகால் தெண்டனிட்டான்
இன்னம் பொறுக்கவென்று இனியொருகால் தெண்டனிட்டான்

## பொன்னுமலைநாடான் அருச்சுனனை ஆசீர்வதிக்கிறது.

பொன்னுமலை நாடாளும் அண்ணு அவர்பார்த்து
பூரித் திருதோளும் பொன்னு பரணமின்ன
திரேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
உள்ளங் குளிர்ந்து உடம்பெல்லாம் பூரித்து
அருச்சுன ராசாவை அவருமே வாழ்த்துகிறார்
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல விளங்கி அரசாள்வீர்
என்தனைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாளைப் போலிருப்பீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
ஆல்போ லேதழைத்து அறுகுபோல வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினார்
வாழ்வீர்கா ணென்று மனதாரவாழ்த்தினார்
மைந்தரைக் கொஞ்சி எடுத்து மடியில்வைத்து

வருக வருகவென் வள்ளல் வருகவென்றார்
அதிகார அச்சுதரே அய்யா வருகவென்றார்
திருவருக பொன்வருக தேனே வருகவென்றார்
குடிகார கொத்தடிமைக் கொண்டு வருகவென்றார்
சொக்கர்திரு வாசலுக்குத் தூண்டா மணிவிளக்கே
கப்பலுஞ் சோங்குங் கரைதுறையு முள்ளவனே
சங்கீன்ற முத்துஞ் சலாப முடையவனே
ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் அழகான பேரமையே
அழகியசீர் கொம்பனையாள் அல்லியுட பேரமையே
ஐயா வருகவென்று அணைத்தார் மடிமேலே
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்தார்
உச்சி முகந்துபிள்ளை உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கந் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியர்மேல்
கண்சாடை காட்டினார் காவலனார் வீரியரும்
காட்டின சாடை யறிந்தந்தக் காவலரும்
மடியைவிட்டுக் கீழ்குதித்து மன்னர் பெருமாளும்
அஞ்சு வயதுடைய அருச்சுன ராசாவும்
உரிந்ததொரு சேலையது உத்தமனுங் கைப்பிடித்து
போரஞ்சா மன்னர் புலந்திரனார் முன்னேவந்து
ஐயாவின் பாதம் அடிவணங்கித் தெண்டனிட்டான்
மன்னவனார் பாதம் வணங்கினான் மன்னவனும்
பொன்னுமலை நாடாளும் போர்வழுதி அண்ணவும்

## பொன்னுமலைநாடான் புலந்திரனிடம் பிள்ளையை எடுக்கச் சொல்லுவது.

போரஞ்சா மன்னர் புலந்திரர்க்கு ஏதுசொல்வார்
வந்து பணிந்தவனை வாரி யெடுக்காமல்
வாரி யெடுக்காமல் வண்ணமடி வைக்காமல்
நின்று னருச்சுனனும் நெடுங்கால் கடுத்துவிழ
மண்மேலே நிற்கையிலே மைந்தன்கால் நோகாதோ

பூமியிலே நிற்கையிலே பொன்னங்கால் நோகாதோ
மைந்தரைக் கொஞ்சி எடுங்காணு மன்னவனே
பிள்ளையைக் கொஞ்சி எடுங்காணும் புண்ணியரே
என்று மவருரைக்க ஏதுசொல்வா ரிந்திரரும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் ஆரணங்கு துரோபதையும்
மன்னர்பஞ்ச பாண்டவரும் மயிலனையாள் துரோபதையும்
அவர்க ளெடுக்காதே அருங்குழந்தை தீண்டேனென்றான்
மன்ன ரெடுக்காதே மைந்தரைத் தீண்டேனென்றான்
புண்ணியர்கள் தீண்டாதே பிள்ளை எடுக்கேனென்றான்
ஆய்ச்சிமார் காணுதே அருங்குழந்தை தீண்டேனென்றான்
பொன்னுமலை நாடாளும் அண்ணவு மேதுசொல்வார்
ஏன்காணு மன்னவரே இந்தமதி உம்தமக்கு
மைந்தரைக் கொஞ்சி எடுங்காணு மன்னவரே
பிள்ளையைக் கொஞ்சி பிடிங்காணு மன்னவரே

## புலந்திரன் சின்ன அருச்சுனனை எடுக்கிறது.

போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்கேட்டு
நாளது கேட்டு நடுநாள் முகூர்த்தமிட்டு
தேனல்ல தாரான் திரையெடுத்து தான்பரப்பி
தட்டோடே வெற்றிலையாம் சாதிக் களிப்பாக்காம்
கொத்தோடே வாழைப்பழம் கொண்டு வரச்சொல்லி
சாயாம்பு மேனியனும் சர்க்கரை தான்வழங்கி
காணிகள் பூமிகள் கடுகெனவே தானம்பண்ணி
நாம முடியானுக்கு நாமகரணம் பண்ணிவைத்து
அர்ச்சுன ராசனென்று அவனுக்குப் பேருமுண்டு
ஐயா வருகவென்று அழைத்தாரே இந்திரரும்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனனுந் தான்பார்த்து

## தகப்பன் பிள்ளையை ஆசீர் வதிக்கிறது.

வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திப்பீ ருத்திருப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்

கற்பதித்த தூண்போல் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல் விளங்க வரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
மாதர்களை மாலையிட்டு மைந்தர்களைப் பெற்றிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளைப் பெற்றிடுவீர்
பெண்களை மாலையிட்டுப் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
எதிரிகளைச் சங்கரித்து எல்லையர சாண்டிடுவீர்
மாற்றானை வென்றிடுவீர் வையகத்தை யாண்டிடுவீர்
மதுரை யரசாண்டு மனதார வாழ்ந்திடுவீர்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போலே சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்ந்திருப்பீர் என்று மனங்குளிர வாழ்த்தினார்
வர்த்திப்பீர் என்று மனங்குளிர வாழ்த்தினார்
வருக வருகவென் வள்ளல் வருகவென்றான்
திருவருக பொன்வருக தேனே வருகவென்றான்
அதிகார அச்சுதனே அப்பா வருகவென்றான்
குடிகார கொத்தடிமை கொண்டு வருகவென்றான்
அங்கத்துக் குள்ளே அமர்ந்திருக்கும் பாற்குடமே

## சின்ன அருச்சுனனை புலந்திரன் கொஞ்சுகிறது.

சொக்கர்திரு வாசலுக்குத் தூண்டா மணிவிளக்கே
கப்பலுஞ் சோங்கும் கரைதுறையு முள்ளவனே
சங்கீன்ற முத்துச் சலாப முடையவனே
ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் அழகான பேரமையே
அழகியசீர் கொம்பனையாள் ஆச்சியுட பேரமையே
தோரா வடிவழகி துரோபதையாள் கண்மணியே
சோரா வளநங்கை சுபத்திரையாள் கண்மணியே

மின்னொளிக்கு ஏற்க விளங்கும் குலக்கொழுந்தே
நாககன்னிக் கண்மணியே ராசாக்கள் ரத்தினமே
பவளக் கொடியாட்குப் பட்ச முடையவனே
கோணாத மாதவத்துக் குந்தி குருமணியே
ஐயா வருகவென்று அருச்சுனரைத் தானெடுத்து
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே வைத்துக்கொண்டு
என்-ஐயன்சிறு கைத்தலத்தை யாதோடே ஒப்பிடுவேன்
சினத்தார்கள் பூமுடியை செண்டாட்ட மாட்டுங்கையோ
பகைத்தார்கள் பூமுடியைப் பந்தாட்ட மாட்டுங்கையோ
மூத்தோர்கள் சொல்லை முடிமேலே வைக்குங்கையோ
இளைத்தோர்கள் சொல்லை எடுத்தெறியுங் கைகளேயோ
என்-ஐயன்தன் கரத்தை யாதோடே ஒப்பிடுவேன்
தக்கப் புகழுடைய தருமரே வாருமையா
வெற்றி மதயானை வீமரே வாருமையா
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தரே வாருமையா
நாம முடியார் நகுலரே வாருமையா
தாம முடியார் சகாதேவே வாருமையா
என்-ஐயனுட சிறுகரத்தை யாதுடன் ஒப்பிடுவேன்
பச்சை மடல்விரியும் பாளைவிரி பூமணக்கும்
பாஞ்சால மகாராசன் சுயமணப்பூம் பந்தலிலே
வில்வளைத்து மாலையிட்ட விஜயரும் நீர்தாமோ
பாஞ்சாலி தன்னுடனே பந்தல் மணம்பொருந்தி
சுண்டு விரல்பிடித்த சுந்திரரும் நீர்தாமோ
அரசாணி சுற்றிவந்து அம்மி மிதித்தீரோ
அருந்ததி குறித்தீரோ ஆனந்த வாழ்மார்பா
என்-மாதாவை மாலையிட்ட மன்னவரும் நீர்தாமோ
துரோபதையை மாலையிட்ட சுந்திரரும் நீர்தாமோ
என்-ஆச்சி மணவாளர் ஐவர்களும் நீர்தாமோ
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் நீர்தாமோ
மதுரைக்கு வந்திருந்து மங்கையரை மாலையிட்டு
அவளை மணம்புரிந்த ஆணழகர் நீர்தாமோ

அல்லி மணவாளர் அருச்சுனரும் நீர்தாமோ
சோரா வளநங்கை சுபத்திரையா ளென்னுச்சி
சந்நாசி வேஷங்கொண்டு சடுதியிலே வந்திறங்கி
ஓண்டி ரதத்தோடே உத்தமியைக் கொண்டுவந்து
மயக்க மடலூர்ந்த மணவாளர் நீர்தாமோ
மேகம் பயந்தெடுத்த மின்னெளியாள் என்னுச்சி
மின்னெளிபை மாலையிட்ட வேந்தரும் நீர்தாமோ
நாகம் பயந்தெடுத்த நாககன்னி என்னுச்சி
அந்தக்-கன்னியரை மாலையிட்ட காளையரும் நீர்தாமோ
பொற்கலச வாழ்முலையாள் போகவதி என்னுச்சி
போகவதிக் கேற்றப் புருஷரும் நீர்தாமோ
பங்கயஞ்சேர் கண்ணுள் பவளக்கொடி என்னுச்சி
பவளக்கொடிக் கேற்ற பாண்டியரும் நீர்தாமோ
என்-ஆச்சிகளை மாலையிட்ட ஆணழகர் நீர்தாமோ
என்-ஐயர்சிறு கைத்தலத்தை எவரோடோ ஒப்பிடுவேன்
இவருடைய கைத்தலத்தை எவரோடே ஒப்பிடுவேன்

## சின்ன அருச்சுனர் குழந்தையில் பழகிய ஆட்டங்களை தகப்பனுக்கு முன்பாக ஆடுகிறது.

அஞ்சு வயதுடைய அருச்சுனரே நீர்கேளும்
நீர்-அறியாத நாளையிலே ஆச்சி அருகிருந்து
உம்-ஆச்சி யவள்காண ஆடின ஆட்டமெல்லாம்
இந்திரனுர் பேரமையே எனக்குமெள்ள காட்டுமென்ருள்
அர்ச்சுனனுர் பேரமையே அருகில்மெள்ள வாருமென்ருர்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனருந் தான்கேட்டு
மடியைவிட்டுக் கீழிறங்கி வந்துமெள்ள ஏதுசொல்வார்
மார்பால் நகர்ந்து மண்மேல் தவறுவதும்
முன்கந்து பாயுறதும் பின்னகர்ந்து பாயுறதும்
தவழ்ந்துவிளை யாடுவதுந் தானே நடிக்கிறதும்
எட்டிஎட்டிப் பார்க்கிறதும் எகிரி நடக்கிறதும்

துய்பி பறக்கிறதும் தும்துமா லடிக்கிறதும்
பண்டி பிறக்கிறதும் பாலடிசி லுண்ணுறதும்
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் தாம்பார்த்து
மைந்தர் முகம்பார்த்துச் சிந்தை கலங்கினுர்
மாதாவைத் தானினைந்து மன்ன ருருகுகிருர்

## புலந்திரன் விசனப்படுகிறது.

காணுதே என்னுச்சி கண்ணற்ரு ளானுளே
பாராதே என்னுச்சி பாவியா ளானுளே
குன்றின்மேற் பெய்த மழையானுள் மாபாவி
குடத்திலே யிட்ட விளக்கானுள் என்னுச்சி
காட்டிலே காய்ந்த நிலவானுள் மாபாவி
கடலிற் கரைத்த புளியானுள் என்னுச்சி
என்று-இற்றிற்று மன்னன் இருகண்ணில் முத்துதிர்த்தான்
பொன்னுமலை நாடாளும் அண்ணுவு மேதுசொல்வான்
ஏன்காணும் மன்னவரே இந்தமதி யும்தமக்கு
வந்த கருமம் முடியுங்கா ணிந்திரரே
என்று-வந்துவிழுங் கண்ணீரை வெண்துகிலால் தான்துடைத்து
மைந்தரைக் கண்துடைத்து ஏன்காணு மன்னவனே
புத்திரரைக் கொஞ்சி எடுங்காணு மன்னவனே
என்ன-போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்பார்த்து
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரைத் தான்பார்த்து

## மறுபடியும் சின்ன அருச்சுனனை புலந்திரன் மடிமேல்வைத்து சேலைகளைந்த வரலாறு கேட்கிறது.

வண்ண மடிமேலே வைத்தார் புலந்திரரும்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரே நீர்கேளும்
சேலை களைந்துவந்தீர் யாரதுகாண் இந்திரரே
கூறையிது யாரதுகாண் கொற்றவரே சொல்லுமென்ருர்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரு மேதுசொல்வார்

ஐயாவே நீர்கேளும் அடியே ஞெருவார்த்தை
என்னையா நீர்கேளும் அடியே னுடவார்த்தை
திரியன் சபையைவிட்டுத் திரும்பி வருகையிலே
வெள்ளானை மேலேறி வீதி வருகையிலே
பேடைமயிற் கண்ணுள் பெருந்திருவாள் மாளிசென்றே
உள்ளே நுழைந்தேனே ஒருகோடி சேனையுடன்
திஷ்டோ திரன்தேவி திருவினையாள் நாயகியாள்
தனியாக வீற்றிருந்தாள் தாம முடியாளும்
அவ-ளாடுங் கழல்பறித்தேன் அம்மானை தான்பறித்தேன்
பச்சைக் கழல்பறித்தேன் பள்ளாங் குழிபறித்தேன்
கொம்பனையா ளோடுமல்லோ கொஞ்சுங் கிளிபறித்தேன்
பெண்பெருமா ளோடுமல்லோ பேசுங் கிளிபறித்தேன்
பாட்டன் விளையாடிப் பரியாசம் பண்ணுப்போல்
சிரித்து விளையாடிச் சேலை களைந்துவந்தேன்
ஆடம் பலத்தே அரையர் சபைநடுவே
பேரம் பலத்தே பெரியோர் சபைநடுவே
ஆரணங்கைக் கொண்டுவந்து அம்பலங்க ளேற்றிவைத்தான்
துரோபதையைக் கொண்டுவந்து துரைகள் சபைநடுவே
சொல்லாதுஞ் சொல்லித் துகிலு முரிந்தானே
பேசாதும் பேசிப் பட்டை யவிழ்த்தானே
அந்த விசேஷம் அதுகொண்டு சிந்தையிலே
படைக்கூட்டந் தன்னுடனே பற்றித் துகிலுரிந்தேன்
எதிராளி செய்த இடும்பைநான் தீர்த்துவைத்தேன்
பங்காளி செய்த பருவஎழுந் தொலைத்துவைத்தேன்
ஐயாவே யும்தமக்கு அடையாளங் கொண்டுவந்தேன்

## சின்ன அருச்சுனன் அடையாளங் காட்டுகிறது.

இதோபாரு மென்று எடுத்தான் துயிலாடை
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் தாம்பார்த்து
குழந்தையைத் தானெடுத்துக் கொஞ்சி மடியில்வைத்து
என்தன் குலம்விளங்க வந்துதித்த ரத்தினமே

அடியேன் குலம்விளங்க வந்துதித்த ஆணழகா
என்று-கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டு
உச்சி முகந்துபிள்ளை உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கந் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
அஞ்சு வயதுள்ள அர்ச்சுனரே நீர்கேளும்
பகையாளி பேரில் படைவந்தா ருங்களையர்
எதிராளி பேரி லெதிர்த்துவந்தா ருங்களையர்
சினத்த படைநடுவே செல்வ ரிறந்தாரே
பகைத்தார் படைநடுவில் பால ரிறந்தாரே
முத்து முடி,தரித்த முடிமன்னர் பட்டாரே

## அபிமன்னன் இறந்ததைப்பற்றித் தகப்பன் பிள்ளையை விசாரிக்கிறது.

ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவே
எடுத்தாரோ கொண்டாரோ இழுத்தெறிந்து போனாரோ
உன்-ஆச்சி கலந்தாரி அழுதாளோ தின்னாளோ
பாலுங் குடித்தாளோ பாலமிர்த முண்டாளோ
நிலத்தில் படுத்தாளோ நீலப் பசுங்கிளியாள்
சிரித்து விளையாடி யிருந்தாளோ உன்னாச்சி
ஏது கருமம் எனக்கொன்றுந் தோன்றவில்லை
அந்த வதிசயங்கள் அர்ச்சுனரே சொல்லுமென்றான்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனருந் தான்கேட்டு
மடியைவிட்டுக் கீழ்குதித்து வந்துமெள்ள ஏதுசொல்வார்
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழக ரேதுசொல்வார்

## சின்ன அர்ச்சுனன் தகப்பனுக்கு அபிமன்னன் வரலாறுரைப்பது.

ஐயாவே நீர்கேளு மடியே னொருவார்த்தை
என்-ஐயாவே நீர்கேளு மின்ன மொருவார்த்தை
பகையாளி பேரில் படைவந்தா ரெங்களையர்
தாம,முடியான் தைத்தலையன் றன்னுடனே

காஞ்சிநா டாளுங் கர்ணருட கையாலும்
தாம முடியான் தைத்தலேயான் கையாலும்
முத்து முடிதரித்த முடிமன்னர் பட்டாரென்று
ஆளப் பிறந்த அபிமரும் பட்டாரென்று
கொட்டிற்று மேளங் குமுறிற்று கைத்தலங்கள்
ஊதிஞன் சின்ன முலகே முலகதிர
ஊதின சின்னத் தொனிகேட்டா ளென்ணுச்சி
ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவும்
கட்டழகி வாழ்மார்பன் களத்திலவர் பட்டாராம்
மைத்துனரை கொண்டுவந்து மனேயிடத்தில் சேருமென்ருர்
தூதுவருந் தான்கேட்டு தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டு
ஆகட்டு மென்றுசொல்லி அப்படியே நல்லதென்று
நடந்தார்கள் தூதுவர்கள் நாலுதிக்குந் தானதிர
காஞ்சிநா டாளுங் கர்ணருக்குத் தானுரைத்தார்
நல்லதென்று சம்மதித்தார் நாடாளுங் கர்ணராசர்
கர்ணருந் தூதுவருங் களந்தனி லோடிவந்து
செத்த அபிமரைச் செந்தூக்கா யெடுத்துவந்து
கலந்தாரி மாளிகையில் கட்டழகர் கொண்டுவந்தார்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி தான்பார்த்து
பஞ்சவர்ணஞ் சித்திரித்த பலகையின் மேல்வளர்த்தி
கால்கட்டுங் கைகட்டுங் கட்டியந்தக் காவலர்க்கு
சீரான நெற்றியிலே திருநீற்றுக் காப்புமிட்டு
கலந்த திருமுகத்திற் கஸ்தூரிப் பொட்டுமிட்டு
சாயாம்பு மேனியற்குச் சந்தன பொட்டுமிட்டு
ஐவிரல் மோதிரம் அழகுபெறச் சாத்திஞர்
பாரப் பதக்கமும் பருமுத்துத் தர்வடமும்
தாளிப் பதக்கமுஞ் சன்னபின்னல் தாவடமும்
மார்நிறைய சாற்றிஞர் மைத்துன ரானவர்க்கு
பொன்னிஞற் றுப்பட்டி போர்த்தி யவள்மூடி
உதிரந் தெறித்துவிழ உத்தமியா ளென்ணுச்சி
அடித்துப் புரண்டழுதாள் ஆரணங்கு என்ணுச்சி

பாதம் பிடித்தழுதாள் பத்தினியா ளென்னுச்சி
அவிழ்ந்த தலைமுடியாள் ஆரணங்கு என்னுச்சி
வீதி தனில்வந்து விலைமோருங் கொண்டறியாள்
பாலும் குடித்தறியாள் பாலமுத முண்டறியாள்
வேல்பொருவுங் கண்ணாளும் வெற்றிலை தின்றறியாள்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பெண்டுகளும்
காஞ்சிநா டாளுங் கர்ணாது தேவியரும்
தோகை மயிலனையாள் துற்சடை நாயகியும்
பட்டணத்தி லுள்ள படைமன்னர் பெண்டுகளும்
துய்ய குலத்துதித்தத் துரோணருட தேவியரும்
கொம்பனைமா ரெல்லாருங் கூடி மிகவாழ்ந்தார்
என்னுச்சி தன்னுடனே அடித்துப் புரண்டழுதார்
கொம்பனைமா ரெல்லாருங் கூடி இழவுகொண்டார்
திருவனையா ரெல்லாருஞ் சேர இழவுகொண்டார்
நான்-வீதி திரிந்து விளையாடி வீட்டில்வந்தேன்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி தான்பார்த்து
சீருடைய பார்புத்திரனே உன்சிற்றப்பா காணுமென்றாள்
ஆனந்த மார்பாநான் அடித்துப் புரண்டழுதேன்
வேல்பொருவுங் கண்ணாநான் விழுந்து புரண்டழுதேன்
கலந்தாரி மாளிகையில் கண்ணில்லா னோடிவந்தான்

## குருடன் தவடையிலே அடித்ததை சின்ன அருச்சுனன் தகப்பனுக்குரைப்பது.

கொம்பனையாள் மாளிகையில் குருடனவ னோடிவந்து
தாம முடியான் தவடையிலே தானறைந்தான்
அழுவானே யென்றுசொல்லி அடித்தான் தவடையிலே
அடித்த வடியாலே கோபித்து நானழுதேன்
காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்பார்த்து
ஆனந்த மார்பனென்னை யணைத்து மடியில்வைத்து
தின்னப் பழங்கொடுத்துத் தேங்காயுங் கைக்கொடுத்து
கண்ணீரைத் தான்துடைத்துக் கட்டழகர் வீற்றிருந்தார்

நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் வந்திருந்தார்
பட்டணத்தி லுள்ள படைமன்னர் வந்திருந்தார்
சாமத் துரோகி சகுனியும் வந்திருந்தார்
தங்கை மணவாளன் தறுதலைய னங்கிருந்தான்
மற்றுமுள்ள ராசாக்கள் மன்னவர்க ளங்கிருந்தார்
துய்ய குலத்துதித்த துரோணரவ ரேதுசொல்வார்

## அபிமன்னன் சீவித்தகாலத்தில் சடங்கு செய்தது.

காசிதீர்த்தங் கொண்டுவந்து கட்டழகர் பூமுடிக்கு
என்தனது கையாலே எடுத்துச் சொரியுமென்றார்
அபிமன்ன ராசாவுக்கு அபிஷேக மாட்டுமென்றார்
புஷ்பங்கள் சாற்றினார் புண்ணியனார் பூமுடிக்கு
சீரான நெற்றியிலே திருநீற்றுக் காப்பணிந்தார்
கமலத் திருமுகத்திற் கஸ்தூரிப் பொட்டுமிட்டார்
பொன்னினாற் றுப்பட்டி போர்த்துமெள்ள மூடுமென்றார்
பொன்னரிசி கொண்டு போற்றினார் மன்னவர்க்கு
வாய்க்கரிசி போட்டார்க ளானந்த மார்பனுக்கு
சந்தனக் கட்டைத் தனிக்கட்டை தானடுக்கி
குங்குமக் கட்டை யடுக்கினார் கொற்றவர்க்கு
பல்லக்குச் சோடித்துப் பாடையைத் தானெடுத்து
நடந்தார்கள் ராசரெல்லாம் நாலுதிக்குந் தானதிர
கொட்டு முழக்குடனே கொற்றவரைக் கொண்டுவந்து
மயானங் கரைதேடி மன்னவரைக் கொண்டுவந்து
காஷ்டத்தின் மேலே வளர்த்தினார் காவலனை
கொற்றவனார் பூமுடிக்குக் கொள்ளி சொரியுமென்றார்

## அபிமன்னனுக்குச் சின்ன அர்ச்சுனன் கொள்ளியிட்டது.

ஐயோ சிவனேயென்று அழுதுமே ஓடிவந்து
சுற்றிவந்து கொள்ளியிட்டேன் சுந்தரப் பூமுடிக்கு
வளையவந்து கொள்ளிவைத்தேன் மன்னவர் பூமுடிக்கு
அந்தநாள் போக்கி அடுத்ததோர் மற்றநாள்

சுட்ட எலும்புக்குச் சோறிட்டு நீர்தெளித்து
பாண்டியர் பூமுடிக்குப் பாலுந் தெளித்துவந்தேன்
ஒற்றை யொருபொழுதா யுண்டிருந்தே னையாவே
மற்றக் கடன்கழித்தேன் மன்னரந்த ராசருக்கு
பெற்ற கடனுங் கழித்துவிட்டேன் புண்ணியர்க்கு

## புலந்திரன் விசனப்படுகிறது.

நலல இரவு நடுச்சாம வேளையிலே
பாதி இரவு பதினைந்து நாழிகையில்
காஞ்சிநா டாளுங் கர்ணருட காவல்விட்டு
ஈட்டிகத்தி வாங்காத இடிமன்னர் காவல்விட்டு
அவள்-கட்டைநான் சோதித்துக் காவ லதுவழித்து
கன்னி யிடந்தேடிக் கனவினில் வந்தேனே
மங்கையரை நான்தேடி மதிலேறிச் சென்றதுவும்
கன்னியருந் தானுங் கலந்துவிளை யாடினதும்
கலந்து விளையாடிக் காளையைப் பெற்றெடுத்தோம்
ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவும்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனரைப் பார்த்ததில்லை
பிள்ளையிவ னென்றுசொல்லிப் பூரித்துக் கண்டதில்லை
ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவும்
சிற்றப்பா வென்றுசொல்லிச் சிரித்துவிளை யாடவில்லை
ஐயரென்று சொல்லி அறியானே அர்ச்சுனனும்
கொள்ளிக்கோ பிள்ளை கொடுத்தார் மகாதேவர்
என்றுசொல்லி மன்ன னிருகண்ணால் முத்துதிர்த்தான்

## பொன்னுமலைநாடான் புலந்திரற்குச் சமாதானஞ் சொல்லுகிறது.

ஏன்காணு மன்னவரே யிந்தமதி யுந்தமக்கு
வந்த கருமம் முடியுங்காண் மன்னவரே
என்று-வந்துவிழுங் கண்ணீரை வெண்துகிலாற் றுன்துடைத்து
கொற்றவனூர் கோபம் குணப்படுத்திக் கொண்டணைத்து

மன்னவனார் கோபம் வசப்படுத்தி யானபின்பு
பிள்ளையைக் கொஞ்சி யனுப்புங்காண் மன்னவரே
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
ஐந்து வயதுடைய அர்ச்சுனரைத் தான்பார்த்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
ஐந்து வயதுடைய அர்ச்சுனரே நீர்கேளும்

## புலந்திரன் பிள்ளைக்குப் பாட்டன் வலிமையுரைக்கிறது.

இன்னம்-மூன்றுநா ளறுபொழுது முடிமன்ன ராளுவது
நாலாநாள் நம்மது ஆகுதுகாண் ராச்சியங்கள்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியும்
காஞ்சிநா டாளுங் கர்ணருட பூமுடியும்
தங்கை மணவாளன் தறுதலைபன் பூமுடியும்
சாமத் துரோகி சகுனியுட பூமுடியும்
ஐவர்பஞ்ச பாண்டவர்க ளதமாக்கிப் போட்டிடுவார்
அத்தனைபேர் பூமுடியும் கிள்ளி பெறிந்திடுவார்
அப்போது அத்திபுரம் அடங்கலும் நம்மதுகாண்
மாற்றானைக் கொன்றுவிட்டு வையகத்தை யாண்டிடலாம்
எதிரிகளைக் கொன்றக்கால் இவ்வுலக மாண்டிடலாம்
அந்தமட்டு மன்னவனே ஆணழகா நீயிருந்தால்
யானையுஞ் சேனையும் அனுப்புவே னுங்களுக்கு
தாதிகளைக் கூட்டி யனுப்புவேன் தார்வேந்தா
உன்-ஆச்சியும் நீயுமிப்போ அடிபிடித்து வாருமென்றார்
மாதாவும் நீயும் மதுரைவந்து சேருமென்றார்
ஐந்து வயதுடைய அர்ச்சுனருந் தான்கேட்டு

## சின்ன அர்ச்சுனன் பாட்டியின்பேரில் சரசமுரைக்கிறது.

மதுரை குடையாளும் மகுடமுடி யல்லியரை
நான்-வந்துமே மாலையிட்டேன் மறித்துவந்து கண்டதில்லை
தேடிவந்து மாலையிட்டேன் திரும்பிவந்து கண்டதில்லை

முத்துப் படுந்துறையும் முழுமையுங் காணவேணும்
பவளம் படுந்துறையும் பாண்டியர்கள் சீர்க்கணக்கும்
கப்பல் படுந்துறையும் கணக்குகள் உள்ளவெல்லாம்
அந்தக் கணக்குகளை அறியவே வேணுமையா
அவள்-மதமறிய வாரேன்காண் மன்னர் பெருமாளே
நானும் வருவேனென்முன் இராசர்கள் வீரியனும்
கூட வருவேனென்முன் கொற்றப்போர் வீரியனும்

## புலந்திரன் சந்தோஷப்படுவது.

மைந்த னுரைத்தவெல்லாம் மனதுமிகக் கொள்ளாமல்
குறுஞ்சிரிப்புக் கொண்டு குலுங்க நகைநகைத்து
உடம்பு குலுங்கிடவே உத்தமருந் தாங்கைத்து
சந்தோஷப் பட்டுச் சரீரங்கள் பூரித்து
உள்ளங் குளிர்ந்து உடம்பெல்லாம் பூரித்து
உண்ணுதே பூரித்து உடம்பெல்லாம் பூட்டுவிட்டு
மைந்தர் முகநோக்கி மன்னவனு மேதுசொல்வான்
அர்ச்சுனரைத் தான்பார்த்து ஆணழகர் ஏதுசொல்வார்
அல்லி கருவம் அடக்கவென்று வாறீரோ
அல்லி யவளறிந்தால் ஆனந்த மாகிடுவாள்
என்-மாதா வறிந்தால் மனமகிழ்ச்சி கொண்டிடுவாள்
ஐந்து வயதுடைய அர்ச்சுனரே நீர்கேளும்
தூதுரைக்க வந்தேன்காண் சுந்திரப் பூமுடியே
வந்த விடந்தனிலே வுன்தனை நானழைத்து
அர்ச்சுன வுன்தனைநான் அழைத்துமே போனாலே
அவர்களுக்கும் எங்களுக்கும் அனர்த்தம்வந்து நேர்ந்துவிடும்
மன்னவர்க்கும் எங்களுக்கும் மாளாத போராகும்
போராடி வந்தவன்நான் பிள்ளையை யழைக்கலாமோ
மல்லாடி வந்தவன் மைந்தனை யழைக்கலாமோ
அழைத்துக்கொண்டு நான்போக ஆகாது மன்னவனே

## சின்ன அர்ச்சுனனுக்குச் சமாதானஞ்சொல்லி யானைசேனை பரிவாரங் கொடுக்கிறது.

நல்ல தனத்தாலே பிள்ளை மனந்தேற்றி
குளிர்ந்த மொழியாலே குழந்தை மனந்தேற்றி

கொடுத்தான் குமாரருக்குக் கூடை வளநாடு
கொல்லுங் குதிரைகளாங் கூர்வாளாம் அம்புகளாம்
வெற்றிலைப் பெண்களிலே வேணநூ றாயிரமாம்
பச்சோலைப் பெண்களிலே பத்துநூ றாயிரமாம்
கொடுத்தான் குமாரனுக்குக் கூடை வளநாடு
ஆனை யொருகோடி அணிமன்னர் முக்கோடி
குதிரை யறுகோடி கொற்றவர்கள் முக்கோடி
ஒட்டை யறுகோடி முடிமன்னர் முக்கோடி
ஏறி விளையாட எழிலானை பொன்னாலே
குந்தி விளையாடக் குதிரைகளும் பொன்னாலே
இத்தனையும் தான்கொடுத்தா னிந்திர ராசாவும்
போய்வாரு மென்று பொருந்தி விடைகொடுத்தான்

## சின்ன அர்ச்சுனன் தாய்வீடு வருகிறது.

விடைபெற் றெழுந்தானே வேந்தர் பெருமாளும்
வீர மதயானை வெள்ளானை மீதேறி
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனஞ்சென் றேறினார்
அவ்வீதி வீதி நடந்தான் அழகாக
மற்று மொருவீதி மன்னவனுந் தான்தாண்டி
கலந்தாரி மாளிகையில் கட்டழகன் வந்துநின்றான்
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
யானையுஞ் சேனையும் அனுப்பி விடைகொடுத்து
வாளுருவிக் கைபிடித்து வல்லயத்தைத் தோளிலிட்டு
ஓடைமலர்க் கண்ணனும் உட்கட்டிற் போய்ப்புகுந்து
மாதாவின் முன்னேவந்து மன்னவனுந் தெண்டனிட்டான்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி தான்பார்த்து
வாழ்த்தி விடைகொடுத்து மாதாவு மென்னசொல்வாள்

## கலந்தாரி பிள்ளையை வாழ்த்துகிறது.

வாழ்வீர் வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீ ரெந்நாளும்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்தத் தூண்போலே கலங்கா தரசாள்வீர்

என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
பகைத்தார்கள் பூமுடியைப் பருந்தாட்ட மாட்டிடுவீர்
சினத்தார்கள் பூமுடியைச் செண்டாட்ட மாட்டிடுவீர்
மாதர்களை மாலையிட்டு மைந்தரைப் பெற்றிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளை யீன்றிடுவீர்
பெண்களை மாலையிட்டுப் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
ஐம்பத் தறுகாதம் ஆண்டிடுவீர் ராச்சியத்தை
மதுரையை யாள்வதற்கு மைந்தர்களைப் பெற்றிடுவீர்
அத்திபுர மாளுவதற்கு ஆண்பிள்ளை பெற்றிடுவீர்
ஆல்போலே தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்கா ணென்று மனமார வாழ்த்தினார்
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்து

## கலந்தாரி தன்பிள்ளையைத் தகப்பனிடத்திற் போன செய்தியைக் கேட்கிறது.

ஐந்து வயதுடைய அர்ச்சுன ராசாவே
வையகத்தை யாளவந்த மன்னர் பெருமாளே
பூலோக மாளவந்த புலந்திரனார் புத்திரரே
ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் அழகான பேரமையே
தக்கப் புகழுடைய தருமருட் பேரமையே
வெற்றி மதயானை வீமருட் பேரமையே
ஆணு லழகுமன்ன ரர்ச்சுனர் பேரமையே
ஈரலர்ப்பூந் தாரார் இரட்டையர்கள் பேரமையே
ஆணு லழகுமன்ன ரர்ச்சுனரே நீர்கேளும்

ஐயரைக் காணுதற்குப் போனீரே ஆண்டழகர்
உங்கள்-ஐயரைக் கண்டதுவும் அதிசயஞ் சொன்னதுவும்
மன்னவரைக் கண்டதுவும் வார்த்தைக ளாடினதும்
ஒன்று மொளியாமல் உத்தமரே சொல்லுமென்றார்
ஐந்து வயதுடைய அர்ச்சுனருந் தான்கேட்டு
மடியைவிட்டுக் கீழிறங்கி மன்னவனு ரேதுசொல்வார்

## அருச்சுனன் மறுமொழி கூறல்.

கைகட்டி வாய்புதைத்துக் கட்டழக ரேதுசொல்வார்
ஆச்சி நீர்கேளும் அடியே னுடவார்த்தை
என்னுச்சி நீர்கேளு மென்னுடைய நல்வார்த்தை
ஐயாவைக் காணப் போனேனே ஆண்டழகன்
ஐய ரிருந்தார்கா ணரையர் சபைநடுவே
ஐயரைக் கண்டு அடிவணங்கித் தெண்டனிட்டேன்
தெண்டனிட்ட வென்னைச் சேர்த்து மவரெடுத்தார்
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்தார்
என்தன் முகம்பார்த்து ஏதுசொல்வா ரிந்திரரும்
சிற்றப்பா செத்ததுவும் சேதி தெரிந்ததுவும்
மாண்டு மடிந்ததுவும் வைகுந்தஞ் சேர்ந்ததுவும்
ஆச்சி கலந்தாரி யழுததுவுந் தின்றதுவும்
அத்தனையுஞ் சொல்லுமென்று ரானந்த வாழ்மார்பர்
ஐயர் முகம்நோக்கி அடியேனு னேதுரைத்தேன்
ஆளப் பிறந்த அபிமரவர் பட்டதுவும்
முத்து முடிதரித்த முடிமன்னர் மாண்டதுவும்
சந்தனக் கட்டை தனிக்கட்டை தானடுக்கி
குங்குமக் கட்டை யடுக்கியந்தக் கொற்றவர்க்கு
கொள்ளிகள் வைத்துக் குடங்க ளுடைத்ததுவும்
ஒற்ற யொருபொழுது சோறுண் டிருந்ததுவும்
அத்தனையுந் தானுரைத்து அடியேனும் வாறேனென்றேன்
மதுரைக்கு உன்னுடனே மன்னவனே வாறேனென்றேன்
அய்ய ரதுகேட்டு ஆணழகர் ஏதுசொல்வார்

தூல்லார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியை
நூற்றொருவர் பூமுடியை நொறுங்க அடித்தபின்பு
வீமனார் தண்டாலும் விசையனார் வாளாலும்
வீரரிவர் கைப்படையால் வெட்டி மடிப்பதற்கு
மூன்றுநா ளுக்குள்ளே முடியுங்காண் மன்னவனே
மூன்றுநா ளறுபொழுது முடிமன்னர் ஆளுவது
நாலாநாள் எங்களது ஆகுதுபார் ராச்சியங்கள்
ஆனையுஞ் சேனையும் அனுப்புகிறே னென்றுசொன்னார்
ஆச்சியும் நீயும் அடிபிடித்து வாருமென்று
ஏறி விளையாட எழிலானை தான்கொடுத்தார்
குந்தி விளையாடப் பொன்னானை தான்கொடுத்தார்
அம்மானை பந்துகளும் அத்தனையுந் தான்கொடுத்தார்
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற்று மீண்டுவந்தேன் வேந்தர் பெருமானும்
இதுதான் புதுமைகண்டீர் எழில்விஜயன் மருமகளே
போன அதிசயங்கள் புதுமை யிதுகாணும்
என்று மவருரைத்தார் இந்திர னருச்சுனரும்
கலந்தாரி தான்கேட்டுக் கட்டழகி மனமகிழ்ந்து
இப்படி யாக இவரிருக்கும் வேளையிலே
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்

## புலந்திரன் திரியன் வீதிவருகிறது.

அந்தத் தெருத்தாண்டி மற்றுமொரு வீதியிலே
மற்றுமொரு வீதியிலே வாறுரே இந்திரரும்
ஊதினார் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினார் காளம் உலகெல்லாம் தான்முழங்க
செம்பொன்னாற் காளம் திசைவிளங்க ஊதினார்
பொன்னினாற் காளம் பொருந்தநின் றூதினார்
வையை வளநாட்டான் வந்தேனென் றூதினார்
வளநாடி புத்திரன்நான் வந்தேனென் றூதினார்
ஊதின சின்னத் தொனிகேட்டா ளுத்தமியும்

பஞ்சவர்கள் தாதியரும் பைங்கிளியார் தான்கேட்டு
மஞ்சள் துகில்களைந்து மற்றுந் துகிலுடுத்தி
வேல்பொருதுங் கண்ணாரும் வெள்ளைத் துகிலுடுத்தி
வீதியும் வீதித் தெருவும் பலதாண்டி
போரஞ்சா மன்னர் புலந்திரனார் முன்னேவந்து
யானையின் முன்னேவந்து அடிவணங்கித் தெண்டனிட்டார்
போரஞ்சா மன்னர் புலந்திரனார் தாம்பார்த்து

## பஞ்சவர் தாதி புலந்திரனைக் காணுகிறது.

பஞ்சவர்கள் தாதியென்று பாண்டியனுந் தானறிந்து
ஐவருட தாதியென்று ஆணழகன் தானறிந்து
ஆடையும் பொன்னும் அனுப்பவே தானிருந்தோம்
சேலையும் பொன்னும் கொடுத்தனுப்ப வேயிருந்தோம்
துக்கம் பெரிதானேம் துன்னீலங் கண்ணாளே
விசனம் பெரிதானேம் வேல்பொருவுங் கண்ணாளே
அனந்தல் பெரிதானேம் ஆனந்த வாழ்மார்பி
உன்தனுக்கோ துக்கமம்மா உத்தமியாள் தாதியரே
என்தனுக்குத் துக்கம் இருக்குது எழுந்திரம்மா
என்னத்-தாமக் குழலாளுந் தாதியவ ளேதுசொல்வாள்
ஆளும் மதுரைவிட்டு அத்திபுரம் வந்ததென்ன
செங்கோல் மதுரைவிட்டுத் தேசம்வந்து சேர்ந்ததென்ன
வந்த வகையேது மன்னவரே சொல்லுமென்றாள்
ஏன்வந்தீ ரிந்திரரே எனக்கறியச் சொல்லுமென்றாள்

## புலந்திரன் தாதிக்குச் சேதியுரைப்பது.

போரஞ்சா மன்னர் புலந்திரனா ரேதுசொல்வார்
பேரப்பா ரப்பா பெரியப்பா தங்களுக்கு
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
வேந்தர் பெருமாளும் வெளிமண்ட பஞ்சேர்ந்து
விடையருள விட்டார்கள் வேந்தர் பெருமாளும்
துன்னீலங் கண்ணனும் தூதுரைக்க வந்தேனென்றான்
தாமக் கருங்குழலாள் தாதி யவள்கேட்டு

முன்னேயும் பூசை முடிந்து இருக்குதே
முத்துமுடி பாண்டியனும் பட்டு மிருக்கையிலே
இப்பவும் பூசை யெழுப்பினூர் பஞ்சவர்கள்
அரசாளும் நாயகியாள் அறிவழிந்தா ளானுளே
வையகத்தை யாண்டும் மதிகுலைந்தா ளானுளே
இப்போதும் பிள்ளைதனை ஏக்கம் வர விட்டாளே
மாற்றான் படைநடுவே மைந்தர்வர விட்டாளே
எதிரிப் படைநடுவே இந்திரரை விட்டாளே
என்று மவளுரைக்க ஏதுசொல்வா ரிந்திரரும்
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
அவர்க்கே தெரியாது நமக்குத் தெரிந்திடுமோ
என்னைப்பெற்ற தந்தையருக் குரைத்திடும்போ மென்றுசொன்னூர்

## புலந்திரன் தான்வந்ததாகத் தாதியைவிட்டுத் துரியனுக்குச் சமாசாரஞ் சொல்லச் சொன்னது.

தாதி யவள்கேட்டுத் தான்வணங்கித் தெண்டனிட்டாள்
அருளருளு மென்னையா அப்படிக்கே ஆகுதென்றுள்
சொல்லப்பெற் றேனென்று சுறுக்கா யெழுந்திருந்து
கூறப்பெற் றேனென்று கும்பிட் டெழுந்திருந்து
எட்டடியு மோரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியு மோரடியாய்ப் பதறி வழிநடந்து
தேசத்தை யாளுந் திரியோதிரன் முன்னேவந்து
சிம்மா தனத்தருகே சென்றிறஞ்சித் தெண்டனிட்டாள்
தெண்டனிட்டத் தாதி திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதாள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
நீர்-ஆர்பெண்ணே தாதி அறிய வுரையுமென்றூர்
தாமக் குழலாளுந் தாதியவ ளேதுசொல்வாள்
பார மதயானை பஞ்சவர்க ளைவருக்கும்
உருவ மதயானை உத்தமர்க ளைவருக்கும்
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கும் அவருடைய தேவியர்க்கும்

பஞ்சவர்க ளைவருக்கும் பட்சமுள்ள தாதியென்றாள்
உத்தமர்க ளைவருக்கும் உருக்கமுள்ள தாதியென்றாள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
நீரிங்கே வந்ததென்ன யெனக்கறியக் கூறுமென்றான்

## தாதி சேதியுரைப்பது.

தாமக் குழலாளுந் தாதியவ ளேதுசொல்வாள்
ஐவர் பெற்றெடுத்த அழகான ரத்தினங்காண்
பஞ்சவர்கள் பெற்றெடுத்த பாண்டி வளநாட்டான்
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தருட புத்திரன்காண்
அழகியசீர் கொம்பனையாள் அல்லி திருமகன்காண்
ஆறாயிரம் பாண்டியர்க்கு அழகான பேரனையா
ஐவருக்கு முங்களுக்கும் அருமையுள்ள புத்திரர்காண்
பேரப்பா ரப்பா பெரியப்பா வுங்களுக்கு
துன்னீலங் கண்ணாளன் தூதுரைக்க வந்தான்காண்
புத்திரரைக்கண் டேயருமை புகழ்ந்துரைக்க வந்தேன்காண்
என்ன-தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
மகுட முடியசக்கி மன்னவனுஞ் சார்ந்திருந்தான்
பார மொழியான் பராக்காய்த் தானிருந்தான்
தாமக் குழலாளுந் தாதி யவள்பார்த்து

## தாதி மறுபடியும் எடுத்துரைப்பது.

தேசமுடி மன்னனுக்குப் பின்னுந் தொழுதுரைப்பாள்
காடெல்லாம் யானை கரும்பெல்லாம் மாணிக்கம்
நீரெல்லா முத்து நிலமெல்லாஞ் செங்கழனி
வாரிக்கொண்டு வனம்போன வைகைக் கரையுடையான்
சித்தந் திருப்பாலன் மாயன் சிவனனையான்
புத்திரர் கண்டருமை புகழ்ந்துரைக்க வந்தேன்காண்
தங்களிஷ்ட மேயென்று இணையடி கைதொழுதாள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
மகுட முடியசக்கி மன்னவனும் வீற்றிருந்தான்
பார மொழியான் பராக்காய்த் தானிருந்தான்

தாமக் குழலாளுந் தாதியவள் பார்த்து
தேசமுடி மன்னனுக்குப் பின்னுந் தொழுதுரைப்பாள்
பாலன் அறிவான் பகைத்தார் முடியரிவான்
தேவன் சினத்தான் சினத்தார் முடியரிவான்
தங்களிஷ்ட மேயென்று சீரடி கைதொழுதாள்
தேசத்தை யாளுந் திரியோதிரன் தான்கேட்டு

## திரியோதிரன் கோபித்துக் கர்ணரையழைத்துத் தாதியைச் சிரசாக்கினை செய்யச்சொல்வது.

கோபித்துக் கண்சிவந்து கொல்லுங் குருவிப்போல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
கட்டறுந்த நாகங் கனற்பொறிபோல் கண்சிவந்து
குன்றிபோல் கண்சிவந்து கோப மதிகமதாய்
சூரிய மண்டலத்தைக் கிட்டச் சுவாலபமாய்
கருணர் முகம்நோக்கிக் கட்டழக னேதுசொல்வான்
காஞ்சிநா டாளுங் கருணர் பெருமானே
சீர்பதத்தை மாற்றிச் சிறையி லடையுமென்றான்
மற்றும் பதமாற்றிப் போடுமென்றான் காவலிலே
தாமக் குழலாளுந் தாதி யவள்கேட்டுப்
போரஞ்சா மன்னர் புலந்திரனர் வாளாலே
உங்கள் தலையறுக்க வந்தது காலமென்று
சொல்லி யவள்நடந்தாள் சுந்தரப்பூந் தாதியவள்
எட்டடியு மோரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியு மோரடியாய்ப் பதறி மிகநடந்து
போரஞ்சா மன்னர் புலந்திரனர் முன்னேவந்து
யானையின் கீழே அடிவணங்கித் தெண்டனிட்டாள்
தெண்டனிட்ட தாதி திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதாள்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்பார்த்துப்
போய்வந்த காரியங்கள் புதுமைக ளத்தனையும்
என்னைப்பெற்ற தந்தையர்கள் என்னென்ன சொன்னார்கள்

ஒன்று மொளியாம னுத்தமியே சொல்லுமென்றார்
தாமக் குழலாளுந் தாதியவ ளேதுசொல்வார்
உன்னைப்பெற்ற தந்தையரும் மெத்தப் பிணங்கினார்
சொன்னதெல்லாந் தான்கேட்டுச் சிறையி லடையுமென்றார்
கட்டழகா என்தனுக்குக் கால்விலங்கு போடுமென்றார்
அந்த விசேஷம் அதுகேட்டு வந்தேனென்றாள்
போரஞ்சா மன்னர் புலந்திரரு மேதுசொல்வார்

### புலந்திரன் தாதிக்குத் தேறுதலுரைப்பது.

மூன்றுநா ளறுபொழுது முடிமன்ன ராளுவது
நாலாநாள் நம்முடைய தாகுதுபார் ராச்சியமும்
பார்த்தன்கை யம்பாலே படுவது நிச்சயங்காண்
வீமர்கை யம்பாலே வேந்தர் மடிந்திடுவார்
மன்னர்கை யம்பாலே மாண்டிடுவா ரெல்லோரும்
தருமருக்கு மிப்போது சனியன் ஒழிந்தது
வீமருக்கு மிப்போது விடுதி யொழிந்தது
ஐவருக்கு மிப்போது அடுத்தது நற்காலம்
மாது மயிர்முடிக்க நாளாச்சு மங்கையரே
கோதிக் குழல்முடிக்க நாளாச்சு கோதையரே
பத்தினியாள் சாபம் பலித்த திவர்களுக்கு
உத்தமியாள் சாபம் உடனே பலித்தது
சிறையிட்ட இந்திரனும் குறைவிட்டுத் தானழுதான்
கால னுயரவந்து கடுகவர வென்றானே
ஏம னுயரவந்து இங்கேவா வென்றானே
இன்னஞ் சிலகால மிருந்தரசை யாளாமல்
நாளை தெரியும்காண் ராசர்படை போறதெல்லாம்
பின்னைத் தெரியும்காண் மன்னர் படும்பாடு
ஆரணங்கு தாதியரே அரண்மனைக்குட் செல்லுமென்றார்
மாதருட தாதியரே மாளிகைக்குச் செல்லுமென்றார்
போக விடைகொடுத்தார் பொன்னும் புலந்திரனார்
விடைபெற்றுத் தாதியவள் மாளிகையில் போய்ப்புகுந்தாள்
அங்கே விடைபெற்று அரண்மனைக்குட் போய்ப்புகுந்தாள்

## புலந்திரன் வார்கோள்ளிவாசலுக்கு வருகிறது.

போர்ஞ்சா மன்னர் புலந்திரனூர் வீரியரும்
அவ்வீதி வீதி நடந்தா ரழகாக
மற்று மொருவீதி தாண்டியந்த மன்னவரும்
வாசலண்ணி காக்கின்ற வார்கொள்ளி வீதிவந்தார்
வாசல்படி காக்கின்ற மங்கைநல்லா ளாரடிநீ
அடியடி தாதியரே யப்பாலே நில்லுமென்றூர்
வாழ்பாண்டி நாட்டார்க்கு வழிவிட்டு நில்லுமென்றூர்
வையைவள நாட்டார்க்கு வழிவிட்டு நில்லுமென்றூர்
வாசலணி காக்கின்ற வார்கொள்ளி தான்கேட்டு
யார்காணு ம்மன்னவனே அப்பாலே நில்லுமென்றுள்
எவர்காணு மன்னவனே யிங்கே வராதேயென்றுள்
அரண்மனையா ருத்தரவு அப்படிக்குச் சொன்னூர்கள்
உலகாண்ட ராசாக்கள் உள்ளே விடாதேயென்றூர்
திரியோ திரனருகில் சென்று வருமளவும்
ராசர் திருமுகத்தைக் கண்டுவருமளவும்
உத்தரவு பெற்றுவந்து உங்களுக்கு வழிவிடுவேன்
அந்தமட்டும் நில்லுமென்று ஆரணங்கு போய்நடந்தாள்

## வார்கோள்ளி திரியனை உத்தரவு கேட்கப்போகிறது.

எட்டடியு மோரடியாய் விட்டு மிகநடந்து
பத்தடியு மோரடியாய்ப் பதறி மிகநடந்து
ஓட்டம் பெருநடையாய் ஓடிவந்தாள் தாதியவள்
ஆடம் பலத்தில் அவ்வையர் சபைநடுவே
பேரம் பலத்தில் பெரியோர் சபைநடுவே
திரியோதிரன் முன்னேவந்து சொல்லுவா ளொருவார்த்தை
ஐயாவே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
உமக்கு மொருவாண்டு எனக்குமொரு மூவாண்டு
மூன்று வருஷமது முடிமன்னர் வாசலிலே
ஐந்து வருஷமது அணிமன்னர் வாசலிலே
வாளெடுத்துக் கைகொடுத்து வாசலிலே நில்லுமென்றீர்
கத்தியைக் கைகொடுத்துத் தலைவாசல் காருமென்றீர்
அன்றுமுத லின்றளவும் அணிவாசல் காத்திருந்தேன்

காணாத காட்சியெல்லாம் கண்டேன் நெடுநாளாய்
பாராத காட்சியெல்லாம் பார்த்தேன் நெடுநாளாய்
மண்டலத்து ராசாக்கள் வாராத பேருமில்லை
சீமையுள்ள ராசாக்கள் செல்லாத பேருமில்லை
காணாத ராசரெல்லாங் கண்டேனிந்த வாசலிலே
முடியோடு முடிநெருங்கும் முடிமன்ன ரம்பலத்தில்
தங்க முடிநெருங்கும் தார்வேந்த ரம்பலத்தில்
அப்பெரிய மன்னரெல்லாம் அடியென்று சொன்னதில்லை
அடியென் றழைத்தவர்கள் ஆருமில்லை வையகத்தில்
வாடியென்று சொன்னவர்கள் வந்ததில்லை வையகத்தில்

## வார்கோள்ளி திரியனுக்குப் புலந்திரனுடைய பராக்கிரமங்கூறல்.

அவன்-அடிஅடி யென்றானே அண்ட மதிர்ந்துவிழ
பிடிபிடி யென்றானே பிண்டங் கலங்கிவிழ
பார்த்தால் பிராயம் பதினாறுங் காணவில்லை
எண்ணால் பிராயம் இருபதுங் காணவில்லை
துடுக்கென்ற மீசையும் சூரக் கருங்குழலும்
சோலைக் கெதிராக மாதளம்பூச் சூரியனோ
சாலைக் கெதிராகச் சந்திரனைப் போலழகும்
காஞ்சிநா டாளுங் கருணர் திருமுகமும்
தக்கப் புகழுடைய தருமருட மேனியும்
வெற்றி மதயானை வீமருட கால்நடையும்
காண்டா வனமெரித்த காளையுட கைவீச்சும்
நாம முடியான் நகுல னிடையழகும்
அரையின் சொருகழகும் அம்பொன்னாற் சிராவும்
கத்திச் சொருகழகும் கத்திகட்டும் உள்மருங்கும்
கச்சைகட்டு முள்மருங்கும் கனிவாயுங் கண்மலரும்
காஞ்சிநா டாளுங் கருணரென்று சொல்லிடலாம்
சீரான நெற்றியிலே திருநீற்றுக் கொப்பழகும்
கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டழகும்
பாரப் பதக்கமும் பருத்தமுத்துத் தாழ்வடமும்
தாளிப் பதக்கமுஞ் சன்னல்பின்னல் தாழ்வடமும்

ஐந்து விரல்களிலே அழகான மோதிரமும்
பத்து விரல்களில் பாங்கான மோதிரமும்
அவன்-ஆபரணம் சோதிமின்ன அடியடி யென்றுனே
அடியடி யென்றுனே அண்ட மதிர்ந்துவிழ
பிடிபிடி யென்றுனே பிண்டங் கலங்கிவிழ
அவனுடைய வாயாலே அடியென்ன நாளாச்சே
மன்னனுட வாயாலே வாடியென்ன நாளாச்சே
இன்னமெந்த ராசாக்கள் என்னடி யென்பாரோ

## வார்கோள்ளி கோபித்து வழிநடப்பது.

இனியிருப்ப தில்லையென்று எழுந்திருந்தாள் மங்கையரும்
வாளெடுத்துக் கீழ்போட்டு வழிபட்டாள் மங்கையரும்
கத்தி சுழற்றிவிட்டுக் கடுகெனவே போகலுற்றுள்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
தட்டி நகைத்தார்கள் தார்வேந்த ரெல்லாரும்
கைகொட்டித் தாநகைத்தார் கட்டழக ரெல்லாரும்
துய்யர் குலத்திலே துரோண ரவர்பார்த்து
அவர்-அங்காணித் தொப்பை யசைய மருங்கசைய
வாரோடி வாரோடி வார்கொள்ளி வாரோடி
அடியென்று சொன்னவனும் ஆரென்று நீயிருந்தாய்
உன்னையடி யென்றதை என்னையடா வென்றுக்கால்
எட்டாத பொன்னுலகங் கிட்டக் கதிபெறுவேன்
வானேழு லோகம் வதியுங் கதிபெறுவேன்
தேவர்கள் சொர்க்கமது சேருங் கதிபெறுவேன்
உன்னையடி யென்றவன் தன்பே ருரைக்கிறேன்கேள்

## துரோணர் வார்கோள்ளிக்குப் பதிலுரைப்பது.

உன்னை-வாடியென்று சொன்னவன்தான் வானவர்கள் புத்திரண்டி
வானவர்கன் புத்திரண்டி மங்கைமண வாளனடி
தேவர்கள் புத்திரண்டி தேவிமண வாளனடி
கருநீலம் பூங்குழலாள் கலந்தாரி நாயகண்டி
தோகை மயிலனையாள் துற்சடையாள் புத்திரண்டி
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தீபன் புத்திரண்டி

ஆணு லழகுமன்னன் அர்ச்சுனனுர் புத்திரண்டி
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கு அழகான புத்திரண்டி
ஆயிரம் பாண்டியற்கு அழகான பேரமைதான்
தேசத்தை யாளுந் திரியோதிரன் புத்திரண்டி
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் புத்திரண்டி
அவனடி யென்றதினுல் ஆரணங்கே பழுதுமில்லை
என்று மவருரைக்க ஏதுசொல்வாள் வார்கொள்ளி

## வார்கோள்ளி பதிலுரைப்பது.

வானவர்கள் புத்திரன் என்னுந் தரமறியேன்
மங்கை மணவாளன் என்னும் வகையறியேன்
தேவர்கள் புத்திரன் என்னுந் தரமறியேன்
வையை வளநாடான் என்னுந் தரமறியேன்
என்று மவளுரைத்து எழுந்து நடக்கலுற்றுள்
வாளுருவிக் கைப்பிடித்து வந்தாளே மங்கையவள்
போரஞ்சா மன்னர் புலந்திரன் முன்னேவந்து
யானையின் கீழே அடிவணங்கித் தெண்டனிட்டாள்
தெண்டனிட்ட மாதும் திரும்பி யெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதாள்
போரஞ்சா மன்னர் புலந்திரற் கேதுசொல்வாள்
ஐயா புலந்திரரே அடியே னொருவார்த்தை

## வார்கோள்ளி புலந்திரனுக்கு வழிவிட்டது.

வானவர்கள் புத்திரன் என்னும் வகையறியேன்
மங்கை மணவாளன் என்னுந் தரமறியேன்
தேவற்குப் புத்திர னென்னுந் தரமறியேன்
தேவி மணவாளன் என்னுந் தரமறியேன்
வாழ்பாண்டி நாட்டானே வழிவிட்டு நீங்கினேன்காண்
பாசத் திளவரையன் படைக்கூட்டந் தன்னுடனே
ஓடைமலர்க் கண்ணனே உட்கட்டில் போங்காணும்
என்று மவளுரைக்க ஏதுசொல்வா ரிந்திரரும்
தர்மமக னுகையினுல் தர்மமாய் நான்பொறுத்தேன்
வீமர்மகன் வந்தாக்கால் வீண்படுமே உன்காவல்

அர்ச்சுனனார் புத்திர னைகயால் நான்பொறுத்தேன்
வீமன்மகன் வந்தாக்கால் வெட்டி யெறிந்திடுவான்
வெட்டி யெறிந்திடுவான் வீரமணி வாளாலே
குத்தி யெறிந்திடுவான் குடல்கள் சரிந்திடவே
நான்-புண்ணியத்தை யெண்ணிப் பொறுத்தேன்கா ணுத்தமியே

## புலந்திரன் வார்கோள்ளிக்குத் தேறுதல் புத்தியுரைப்பது.

வாழ்பாண்டி நாட்டார் வருவார் சிலபேர்கள்
வந்தபடை மன்னர்க்கு வழிவிட்டு நீங்கிநில்லு
மூன்றுநா ளாறுபோது முடிமன்ன ராளுவது
நாலாம்நா ளெங்களது ஆகுதுகாண் ராச்சியங்கள்
இரட்டிப்புச் சம்பளம் நானே தருகிறேன்காண்
அஞ்சாதே அஞ்சாதே ஆரணங்கே அஞ்சாதே
ஏதுக்கு மஞ்சாதே யிருவென்று ணிந்திரனும்
நல்ல திருவென்று நடந்தாரே புலந்திரரும்
மற்றோர் படிகடந்தான் மன்னவனும் போகலுற்றான்
அங்கிருக்கும் வண்மைகளைக் கண்டானே மன்னவனும்
ஆனந்த வானனமும் அவியாத் திருவிளக்கும்
ஆர்காவ லென்றான் அல்லி திருமகனும்
அங்கிருக்கும் மன்னர் அரையர் துரைகளெல்லாம்
கேட்ட புலந்திரர்க்கு கேள்விசொல்ல மாட்டாமல்
நின்ற புலந்திரற்கு நீதிசொல்ல மாட்டாமல்
நெஞ்சுலர்ந்து நாவுலர்ந்து நித்திலங்கு பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
மன்னர் மனஞ்சலித்து மர்மமாய் வீற்றிருந்தார்

## புலந்திரரைத் தாதிவந்து காணுகிறது.

அங்கு மொருதாதி அறிவுடையா ளோடிவந்து
இறைஞ்சியே யானைமுன்னே எதிராகத் தெண்டனிட்டு
தெண்டனிட்ட தாதி திரும்ப வெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுது
போரஞ்சா மன்னர் புலந்திரற் கேதுசொல்வாள்

தக்கப் புகழுடைய தருமருட பூமுடியும்
வெற்றி மதயானை வீமருட பூமுடியும்
காண்டா வனமெரித்த காளையவர் பூமுடியும்
நாம முடியான் நகுலரிட பூமுடியும்
சாஸ்திரக் கொடியுடைய சகாதேவர் பூமுடியும்
ஐவ ரிடமுடியும் அரிவேன் அரிவேனென்று
அரிவேன் அரிவேனென்று ஆணழகன் சோடித்தான்
அப்போது தாதி அறிய வெடுத்துரைப்பாள்
ஆளுகிற வாதனமும் அழியாத் திருவிளக்கும்
மனுஷர்க ளேறுத மண்டபமுந் திருவிளக்கும்
காஞ்சிநா டாளுங் கருணரிட காவலென்றாள்
போரஞ்சா மன்னர் புலந்திரனார் தான்பார்த்து

## புலந்திரன் கோபித்து கர்ணருடைய மாளிகையை யானையைக்கொண்டு இடிக்கிறது.

கோபித்துக் கண்சிவந்து கொல்லுங் குருவியைப்போல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குன்றுபோல் கண்சிவந்து கோபம் பெரிதாகி
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
சூரிய மண்டலத்தைக் கிட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலயமாய்
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
ஐரா வதம்போல யானையைத் தானழைத்து
இடித்து நசுக்கி எமபுரஞ் சேருமென்றான்
குத்திப் பிளந்துஅதைக் கோளாறு செய்யுமென்றான்
யானை யதுகேட்டு அப்படியே நல்லதென்று
வெங்கண் சிவந்து வெளிவால் மிகமுறுக்கி
தும்பிக்கை யைத்தூக்கி வருகுதுகாண் அவ்வானை
மண்டபந் தன்னருகில் மதயானை வந்துநின்று
கொம்பை யசக்கிக் குளம்பால் நிலம்பேர்த்து
தும்பிக்கை யாலே சுழற்றி அடிக்கிறது
மண்டபத்தை வேர்பிடுங்கி மண்ணோடே சாடுமாம்

அவியாத் திருவிளக்கை அங்கனவே சாடிடுமோம்
ஆளேறு மண்டபத்தை யடங்கலுந் தானிடித்து
ஆகார முள்ளடக்கி அவ்வானே தான்திரும்பி
போரஞ்சா மன்னர் புலந்திரற்குத் தெண்டனிட்டு
இடித்து நகர்த்துநான் எமபுரஞ் சேர்த்துவந்தேன்
மண்டபத்தை வேர்பிடுங்கி மண்ணோடே சாய்த்துவந்தேன்
என்றுமே சொல்லி யிருந்தது அவ்வானே
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
இன்னஞ்சில தூதுவரை மன்னவனுந் தானழைத்து

## புலந்திரன் தூதுவரைவிட்டுத் தனக்கு சிம்மாதன மண்டபம் நிருமிக்கிறது.

அங்குமொரு ஆதனந்தான் அழகாக சோடியென்றான்
வந்தநல்ல தூதுவர்கள் அவ்வார்த்தை தான்கேட்டு
சொன்ன பொழுதிலவர் சோடித்தார் மண்டபமும்
புலந்திரனர் சொன்னபடி பொட்டனவே சோடித்தான்
சோடித்து ஆச்சுதென்று தொழுதிறைஞ்சித் தெண்டனிட்டார்
அப்போ புலந்திரனர் அவ்வார்த்தை தான்கேட்டு
ஆளேறு ஆதனமும் அழியாத் திருவிளக்கும்
மண்டலங்க ளுண்டுபண்ணி மன்னவனு மேலேறி

## புலந்திரன் சபதம்.

நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியும்
காஞ்சிநா டாளுங் கருணரிட பூமுடியும்
தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடியும்
சாமத் துரோகி சகுனியிட பூமுடியும்
தாம முடியான் தைலாட்டான் பூமுடியும்
அரிவேன் அரிவேன்என்று ஆணழக னேறினன்
ஒருமிக்க அறுத்திடுவேன் என்றுமிக ஏறினன்
ஏறியே தானிருந்து இறங்கினன் மன்னவனும்
மண்டபத்தை விட்டல்லவோ மன்னவனுங் கீழ்குதித்து

## புலந்திரன் திரியோதிரன் கொலுவுக்குச் செல்கிறது; ஜனங்களைப்பார்த்து அதிசயப்படுகிறது.

படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பந் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
கைத்தலத்தைத் தட்டி கறுத்தானை யேறினான்
அம்மானுந் தானும் அழகானை ஏறினான்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனங்க ளேறுமென்றான்
அப்படிக்கே நல்லதென்று அனைவோரும் ஏறினார்கள்
ஏறின போதே யெடுத்தார் ரணவிருது
வாகனங்க ளேறியபின் வாசித்தார் சங்கத்தொனி
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
மற்றோர் படிகடந்தான் மன்னர் படையுயர்ந்தான்
மற்றோர் படிதாண்டி மன்னவனும் போகலுற்றான்
திரியோ திரன்கொலுவில் செல்லுகின்ற ராசர்களும்
முடியோடே முடிநெருங்கும் முடிமன்ன ரம்பலத்தில்
இரத்தின முடிநெருங்க இராசாக்கள் போய்நடந்தார்
வச்சிர முடிநெருங்க வாறார்கள் மன்னவர்கள்
செம்பொன் முடிநெருங்கச் சேனைபேர் சூழ்ந்திருப்பார்
தங்க முடிநெருங்கத் தார்வேந்தர் அங்கிருக்க
தூரத்து ராசாக்கள் சுருளோலை கொண்டுநிற்க
காதத்து ராசாக்கள் கையோலை கொண்டுநிற்க
தேசத்து ராசாக்கள் சேனைபேர் வந்திடுவார்
அங்கங்கே கூத்துகளும் அரிச்சந்திர நாடகமும்
வாற வழிதனிலே வண்ணநல்ல கூத்துகளும்
நடக்கும் வழிதனிலே ராசாக்கள் கூட்டங்களும்
அத்தனையுங் கண்டாரே ஆண லழகுமன்னர்
போரஞ்சா மன்னர் புலந்திரனார் தான்பார்த்து

## புலந்திரன் பேரெழுதி அம்மானுக்குத் திரியன் செல்வச்சிறப்பு கூறுதல்.

பொன்னுமலை நாடாளும் அண்ண முகம்நோக்கி
அய்யாவே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னையா நீர்கேளும் அடியேனொருவார்த்தை

இவர்பெருமை யாருக்குண்டு இந்திரற்கு நேராக
தேவேந் திரராசன் சிறப்புடைய னென்பார்கள்
இந்திர ராசாவும் இவருக்கு ஈடலவே
தேவேந் திரன்தானும் இவர்சிறப்புக் கீடலவே
குபேரனது பட்டணங்கள் கோடியுண்டு என்பார்கள்
அவை-இவருடைய ராச்சியத்துக் கீடுசொல்ல லாகாது
உத்தமனர் பட்டணத்துக் குவமைசொல்ல லாகாது
அத்திபுரத்திற்கு அளகாபுரி யீடலவே
வாழ்மதுரைப் பட்டணமும் மன்னர்பதிக் கீடலவே
உத்தமனர் வீரியற்கு ஒருவ ரெதிரலவே
மண்டலத்து ராசனுக்கு மற்றொருவ ரீடலவே
எங்கள்-அத்தி புரத்தானுக்கு யாரு மெதிரலவே
இந்திர ராசாவும் இப்படிக்கே சொல்லனுமே
பொன்னுமலை நாடாளும் அண்ணவும் எதுசொல்வார்
ஏன்காணு மன்னவனே இந்தமதி புந்தனுக்கு

## பொன்னுமலைநாடான் புலந்திரற்குச் சொல்வது.

மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
பொய்கை யறுகாதம் பூமதுரை முக்காதம்
ஐம்பத் தறுகாதம் ஆண்டிருந்த ராச்சியங்கள்
அப்பெரிய ராச்சியத்தை ஆண்டிருந்தார் பாண்டியர்கள்
மைந்தரு மில்லாதே மன்னர் மனஞ்சலித்து
மாளுகிறோ மென்று மலைமேல் தவமிருந்தார்
மாளேதே யென்று மலரி லவதரித்தாள்
ஆரு யிரவருக்கும் ஆணுமவள் பெண்ணுமவள்
பெண்பட்டங் கட்டியல்லோ பூமிபர சாளுகிறார்
எல்லை யரசாண்டு இருந்தாளே அல்லியம்மாள்
ஏழு பிராயத்திலே எதிர்த்துவந்த நீன்முகனை
வெட்டித் தலைபிளந்து வீரபட்ட மாண்டாளே
மன்னர் அருச்சுனனர் மாலையிட வேணுமென்று
கட்டழகி அல்லியரைக் கலியாணம் பண்ணவென்று
மதுரைக்கு வந்திருந்தார் மாயவரும் அர்ச்சுனரும்

மாறு வடிவுகொண்டு மறைந்திருந்தார் மன்னவரும்
வேல்பொருவுங் கண்ணாளும் வேட்டைக்குப் போனாள்காண்
கானகத்து வேட்டைக ளாடி வருகையிலே
பெண்வேஷங் கொண்டாரே போர்விசையப் பெருமாளும்
ஆணழகி யல்லியற்கு அம்பு பொறுக்கித்தந்தார்
காலும் பிடித்தானே கதையொன் றுரைத்தானே
கதையொன் றுரைக்கையிலே கண்டாளே அல்லியரும்
ஆண்பிள்ளை யென்றுசொல்லி யதட்டி எழுந்தாளே
கத்தி எடுக்கையிலே கடுகி நடந்துவிட்டார்
வேட்டைக ளாடிவந்தாள் வேல்பொருவுங் கண்ணாலே
மற்றநாள் காலையிலே மன்னர் அர்ச்சுனரும்
தண்ணீர்க் குளத்தருகே தார்வேந்தர் வந்திறங்கி
அல்லியென்று மெல்லியென்றும் அழுது புலம்புகிறார்
தண்ணீர்க்கு வந்ததொரு தாதியவள் தான்கேட்டு
அல்லிக் குரைத்தாளே ஆக்கினைகள் செய்யவென்று
அப்போது அல்லியம்மாள் ஆக்கினைகள் செய்யலுற்றாள்
தூக்கு மரத்திலே போடச் செலவுதந்தாள்
தூக்குமரஞ் செப்பனிடப் போனதொரு செங்கமலம்
போனதொரு செங்கமலம் பொன்னுலகம் போய்ச்சேர்ந்தாள்
ஆற்று மணலிலே போட்டுப் புரண்டழுதாள்
அத்தாலுந் தப்பிப் பிழைத்தார்காண் அர்ச்சுனரும்
மாயனுட புண்ணியத்தால் மன்னவருந் தான்பிழைத்தார்
காளியம்மன் கோவிலுக்குக் காவு கொடுங்களென்றான்
அத்தாலுந் தப்பிப் பிழைத்தார்காண் புண்ணியரும்
பூனைக் கிடங்குதனில் போட்டடைக்கச் செலவுதந்தாள்
அத்தாலும் தப்பிப் பிழைத்தார்காண் புண்ணியனும்
பாம்புகளை விட்டுமே கொல்லுமென்று ளல்லியம்மாள்
அத்தாலுந் தப்பிப் பிழைத்தார்காண் மன்னவரும்
யானை மதமேற்றிக் கொல்லுமென்று ளல்லியரும்
அத்தாலுஞ் சாகாமல் பிழைத்தார்காண் புண்ணியரும்
நாக மதமேற்றிக் கொல்லுமென்றாள் நாயகியும்

அத்தரலும் தப்பிப் பிழைத்தார்காண் அர்ச்சுனரும்
பைங்கிளியாள் தன்கையிலே பாவைபிச்சை வாங்கி
அள்ளியே நீறுமிட்டு ஆணழகர் போய்நடந்தார்
மற்று மொருநாளில் மாதவள் அல்லியம்மாள்
வேட்டைக ளாடிவந்தாள் வேல்பொருவுங் கண்ணாளும்
தண்ணீர்க் களையாகித் தவித்துப் புலம்புகையில்
மாயன் பெருமாளும் மன்னவனார் அர்ச்சுனரும்
பார்ப்பூரனும் பார்ப்பாத்திப் போலே வடிவெடுத்து
தண்ணீர்ப்பந்தல் போட்டார்கள் தாங்க ளிருவருமாய்
அல்லிக்குத் தாகங் கொடுத்தார்காண் அர்ச்சுனரும்
வந்த சனங்களெல்லாந் தாகந் தெளிந்தபின்பு

## அல்லி அர்ச்சுனரை விசாரித்தது.

ஆரம்மா என்றுசொல்லி அல்லி யவள்கேட்க
சின்ன வயதல்லோ தெய்வப் பிராமணப்பெண்
குஷ்டரோகி என்புருஷன் கண்டீரோ ஆச்சியரே
இலட்சுமி நோன்பதுதான் நாளைக்கு வருகுதம்மா
கையிலே காசுமில்லை கடன்கொடுப்பா ராருமில்லை
என்று புலம்புகையில் ஏதுசொல்வா ளல்லியரும்
ஆனல்கேள் ஆச்சியரே அரண்மனைக்கு வந்தாக்கால்
வேண்டியது நான்தருவேன் விரத முடித்திடுவாய்
கேட்டது நான்தருவேன் நோன்பு முடித்திடுவாய்
அப்படிக்கே நல்லதென்று ஆரணங்கு சம்மதித்தாள்
கூட்டிவந்து சேர்த்தார்கள் கொம்பே ரிடையாளை
அழைத்துவந்து சேர்த்தாளே அல்லிப் பெருமாளும்
மாளிகை வாசலிலே வந்தா ரிருவருமாய்
இலட்சுமி நோன்பதுதான் நடத்துமென்ருள் மங்கையரை

## அல்லிக்குத் திருட்டுத்தாலி சம்பவித்தது.

சடங்குகள் செய்தாளே சதிரான பார்ப்பாத்தி
விஸ்தார மாகவேதான் வேள்வி நடத்தினளே

நடுச்சாம வேளையிலே நடத்துகிறார் நோன்புதனை
அந்தச் சமயத்தில் அல்லியருந் தூங்கிவிட்டாள்
அர்ச்சுனர்-அந்தச் சமையம் அதுவேளை தானறிந்து
யானைத் தலைபோலே அழகான மங்கிலியம்
அல்லியம்மாள் தன்கழுத்தில் கட்டினா ரப்போது
மங்கிலியந் தரித்து மன்னர் மறைந்துவிட்டார்
தாலி தரித்து நடந்தாரே அர்ச்சுனரும்
கட்டின விருதறுத்துக் கடுகெனவே போய்நடந்தார்
பொழுது விடிந்தது பகவா னுதித்தது
அங்கம்மாள் கோயிலுக்குத் திருக்காப்புஞ் சென்றது
சங்கமனை வாதியர்கள் அனைவோருங் கண்விழித்தார்
பவளசேனை தன்னுடனே பத்தினியுங் கண்விழித்தார்
கழுத்திலே மங்கிலியங் கண்டாளே அல்லியம்மாள்
அறுத்து எறிவோமென்றால் அரிவா ளொடிந்துபோகும்
கத்திகொண் டறுத்தாலுங் கத்திரண்டு துண்டாகும்
ஆறுயிரம் பாண்டியரும் அல்லியருந் தான்கூடி
ஆலோ சனைகள்பண்ணி அல்லிப் பெருமாளும்

## பாண்டியர்களும் அல்லியும் ராசாக்களுக்கு ஓலையெழுதி சத்தியங் கூறச்சொன்னது.

ஐம்பத்தாறு தேசத்துக்கும் அனுப்பினா ரோலைதனை
ஐம்பத்தாறு தேசத்து ராசாக்கள் வந்தார்கள்
மண்டலத்தி லுள்ளதொரு மந்திரிகள் வந்தார்கள்
சொக்கரிட ஆலயத்தில் சிவகாமி சன்னதிமுன்
வந்தவந்த ராசரெல்லாம் அந்தமுடன் வீற்றிருந்தார்
நெய்க்குடத்தைக் காச்சியல்லோ கைதோயு மென்றாளே
நெய்க்குடத்தில் கைதுவைத்து நெல்லை நிமிட்டிவிட்டார்
வெற்றி மதயானை வீமரவ ரோடிவந்து

## வீமன் நெய் குடித்தது.

நெய்க்குடத்தில் கைதோய்த்து நெய்யைக் குடித்துவிட்டார்
அம்பார நெல்லையெல்லாம் நிமிட்டிஅவர் தின்றுவிட்டார்

அத்தை யறிந்தாளே அல்லிப் பெருமாளும்
அவர்பேரும் ஊரும் அறிந்தாளே அல்லியம்மாள்
பட்டணத்தி லுள்ள படைமன்னர் அனைவரையும்
யானைத் திரள்படையும் அழகான சேனைகளும்
குதிரைப்படை சேனைகளும் கூட்டினு ளல்லியரும்
ஐவர்மேற் சண்டைசெய்ய ஆரணங்கு வந்துவிட்டாள்
வந்து அடித்தாளே வண்ணவண்ணக் கூடாரம்
அடித்தாள் ரணபேரி அண்டரண்டம் தானதிர
சண்டைக்கு வந்தேனென்று தானடித்தாள் பேரிகைகள்
அந்த விசேஷம் அதுவறிந்து தருமலிங்கம்
வீமனையும் மாயரையு மிருவரையுங் கூட்டிவிட்டார்
வீமனும் மாயவரும் வந்துமே போர்கொடுத்தார்
இருவருமாய்ச் சண்டைபண்ணி எதிர்நிற்க மாட்டாமல்
புறங்கொடுத்து ஓடினார் பெண்பெருமாட் கஞ்சியல்லோ
ஆனு லழகுமன்னர் அர்ச்சுனனார் வந்தெதிர்த்தார்
அவராலே போர்கொடுக்க மாளாதே மன்னவனும்
கைசோர்ந்து மெய்சோர்ந்து கையில் கணைசோர்ந்து
தேரொடிந்து வில்முறிந்து தேரைவிட்டுக் கீழ்குதித்து
உற்ற உயிர்சோர்ந்து ஓடினார் அர்ச்சுனரும்

## சகாதேவன் அல்லியைக் கூண்டிலடைத்த சமர்த்துக் கூறல்.

சாத்திரக் கொடிவேந்தன் சகாதேவன் தானறிந்து
கூண்டொன்று செப்பனிட்டுக் கொண்டுவந்தான் தார்வேந்தன்
சூதான கூண்டொன்று தோன்றாம லல்லியற்கு
சதிசெய்து வென்றானே சமர்த்தன் சகாதேவன்
அல்லியம்மாள் தோற்றாளென்று அடித்தாரே பேரிகையை
எல்லவருந் தாமறிய அரண்மனைக்குக் கொண்டுசென்று
சந்தோஷப் பட்டார்கள் சமர்த்தான ராசாக்கள்
ஆறாயிரம் பாண்டியர்கள் அய்யன்மார் தானறிய
மங்கிலியந் தான்பொருந்தி மன்னவனே யுன்னைப்பெற்றார்

மதுரையை யாளுதற்கு மன்னவனே உன்னைப்பெற்றார்
பூலோக மாளுதற்குப் புலந்திரனை யீன்றெடுத்தார்
இப்பெருமை யாருக்கு இந்திரரே சொல்லுமையா
பெண்பெருமை யாருக்குண்டு புலந்திரரே சொல்லுமையா
அத்தி புரமும் அவராளும் அரசுகளும்
மதுரைப்பெருஞ் சீமையது மண்டலத்துக் கீடாமோ
வையைப் பெருநாட்டு வாழ்மதுரைக் கீடாமோ
அல்லி பெருமையது அளவிடக் கூடாது
பெண்பெருமாள் தன்பெருமை புகழ்ந்திட லாகுமோதான்
இப்படிக்குச் சொல்லி யெடுத்துரைத்தான் மன்னனுந்தான்

## புலந்திரர் மாமன் பொன்னுமலைநாடானுக்கு கோப வார்த்தை யுரைக்கிறது.

போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
கதிக்குக் கதிமண்டி கண்கள் எரிபறந்து
நீலவிழிக் கண்கள் நெருப்புத் தணலாகி
கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குன்றிபோல் கண்சிவந்து கோபம் பெரிதாகி
நெற்றிப் புருவம் நெருப்பாய் அனல்பறந்து
சூரிய மண்டலத்தை எட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலபமாய்
அண்ணு முகநோக்கி மன்னவனுர் ஏதுசொல்வார்
மாமா முகநோக்கி மன்னவனுர் ஏதுசொல்வார்
அம்பலத்து ராசருக்கு ஆரணங்கு மீடாமோ
மண்டலத்து ராசருக்கு மாத ரெதிராமோ
முத்து முடிதரித்த ராசாக்கள் தம்முடனே
வச்சிர முடிதரித்த ராசாக்கள் தம்முடனே
சரியாகச் சொன்னீரே தாரார் குழலாளை
வில்பிடித்து வேட்டையாட வல்லவியாள் என்றலவோ
பட்ச முடனுக மெச்சி யெடுத்துரைத்தீர்

நீங்களே சொன்னகதை மற்றொருவர் சொன்னக்கால்
மற்றொருவர் சொன்னாலே வாளுக் கிரையிடுவேன்
வாளுக் கிரையிடுவேன் மண்டை பிளந்திடுவேன்
ஆதிசிவ னானாலும் ஆண்மைகொண்டு யுத்தம்பண்ணி
பரமசிவ னானாலும் பற்றிப் பிளந்திடுவேன்
மாயவனே யானாலும் அவன்மண்டை பிளந்திடுவேன்
ஈஸ்வரனே யானாலும் இருதுண்டாய்ப் போட்டிடுவேன்
முனிவர்க ளானாலும் முறிய வுடல்பிளப்பேன்
ஊருக்கு மேற்கே உயிர்க்கழுவில் போட்டிடுவேன்
தாமணிக் கூட்டித் தறித்திடுவேன் பூமுடியை
மூக்கோடே நாக்கறுத்து முன்முடியைச் சங்கரிப்பேன்
நாக்கோடே மூக்கறுத்து நகரைவிட்டு ஓட்டிடுவேன்
என்று மனுக்கொடுத்தா ரிந்திர ராசாவும்

## புலந்திரனுக்குச் சபையார் எடுத்துரைப்பது.

அங்கிருக்கு மன்னவர்கள் அரையர் துரைகளெல்லாம்
புலந்திர ராசருக்குப் புண்ணியர்க ளேதுசொல்வார்
பொன்னுமலை நாடாளும் அண்ண வுரைத்ததற்கு
கோபித்துக் கண்சிவந்தீர் கொற்றவனார் வீரியரே
வாடி முகந்தளர்ந்தீர் மன்னர் பெருமாளே
ஆச்சி யுடபெருமை அண்ண வெடுத்துரைத்தார்
எதிரிகளைப் புகழ்ந்து இகழ்ந்தீரே அண்ணாவே
மாற்றானைத் தான்புகழ்ந்து வைதீரே அண்ணாவே
என்று மனந்தேற்றி இந்திரரைக் கொண்டணைத்தார்
கொற்றவனார் கோபங் குணப்படுத்திக் கொண்டார்கள்
மன்னவனார் கோபம் வழிப்படுத்திக் கொண்டார்கள்
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியரும்
ஆறினார் கோபம் அமர்ந்தார் கொலுமேடை
தேறினார் கோபம் தெளிந்தார் கொலுமேடை
பொன்னுமலை நாடாளும் புண்ணியனார் மன்னவரும்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்

இருவருங் கோபந் தணிந்தார்க ளப்பொழுது
போரஞ்சா மன்னன் புலந்திர வீரியனும்
மற்ரோர் படிகடந்தான் மன்னன் படையுயர்ந்தான்
மற்ரோர் படிதாண்டி மன்னவனும் போய்நடந்தான்

## புலந்திரன் சின்னமெடுத் தூதுவது.

ஊதினன் சின்னம் உலகே முலகதிர
ஊதினன் காளம் உலகு தலைதுமுக்க
செம்பொன்னாற் காளந் திசைவிளங்க ஊதினன்
பொன்னினாற் காளம் பொருந்தநின் றூதினன்
என்னவென்று ஊதினன் இந்திர ராசாவும்
கோணாத மாதவத்துக் குந்தியம்மா ளென்பாட்டி
பாண்டுமகா ராசன் பட்டத் தரசியவள்
பட்டத் தரசியவள் பாஞ்சாலி குந்தியம்மாள்
துருவாசர் மந்திரத்தால் துலங்கவந்தார் மன்னவர்கள்
பாண்டுராசன் பெற்றெடுத்த பஞ்சவர்க ளைவருண்டு
ஐவர்பஞ்ச பாண்டவரை ஆச்சி பயந்தெடுத்தாள்
வாசமாம் குந்தி வடமதுரை வாழுதற்கு
காப்புடைய கன்னியவள் காரணத்தால் வந்துதித்த
கோப்புடைய குந்திக் குருமணியென் றூதினார்
ஏற்றமா வென்று இரணியனை மார்பிளந்து
தோற்றமாந் தூணிலே நின்ற சுடரதுபோல்
அவர்க்குவாய்த்த மருமகனான் வந்தேனென் றூதினார்

## ஐவர்மகனேன்று புலந்திரன் சின்ன மூதுவது.

பொய்யாத வாசகனார் புகழுடைய தர்மலிங்கம்
தக்கப் புகழுடைய தர்மருட புத்திரனான்
புத்திரனான் வந்தேனென்று ஊதினன் சின்னத்தொனி
பாரிய திண்டோளன் பகலிடும்பன் பற்பிடுங்கி
சாடிப்பொன் கொண்டுவந்தோன் தன்மகனென் றூதினன்
பெட்டிப்பொன் கொண்டுவந்தோன் புத்திரனென் றூதினன்
கைலைப் பதிநோக்கிக் கர்த்தரைக் கண்டலவோ

பர்மருடன் வாதாடிப் பாசுபதம் பேறுபெற்றார்
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தருட புத்திரனன்
அர்ச்சுனனார் புத்திரனென் றறைந்தான் விருதோசை
எட்டாத பொன்னுலகம் ஏறிப்போ யிந்திரபடை
கச்சேதி புட்பமலர் கொண்டுவருஞ் சகாதேவர்
சகாதேவர் புத்திரனன் என்றுமவ னூதினன்
காமக் கொடியுடைய நகுல மகாராசர்
என்னைப் பெற்றார் முழுப்புலியார் பிள்ளையென் றூதினன்
என்னைப்பெற்ற தந்தையர்கள் என்றுமவ னூதினன்

## புலந்திரன் நூற்றொருவர்சின்ன மூதுவது.

நூலார் கடுந்திரளார் நூற்றொருவர்க் கென்றுசொல்லி
நூற்றொருவர்க் கென்றுசொல்லிச் சங்கெடுத் தூதினன்
தாம முடியான் தைலாட்டான் பூமுடிக்கு
சங்கெடுத் தூதினன் தயிலாட்டான் பூமுடிக்கு
காஞ்சிநா டாளுங் கர்ணருக் கென்றெடுத்தான்
கர்ணருக் கென்றெடுத்துக் காளசின்ன மூதினன்
தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடிக்கு
தறுதலையன் பூமுடிக்கு சங்கெடுத் தூதினன்
சாமத் துரோகி சகுனி படும்பாவி
சகுனி தனக்கென்று தாரைசின்ன மூதினன்
இப்படி யாகச்சொல்லி யெடுத்தான் விருதோசை
ஊதினன் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினன் காளம் உலகு தலைதுமுக்க
செம்பொன்னாற் காளம் திசைவிளங்க ஊதினன்
பொன்னினாற் காளம் பொருந்திநின் றூதினன்
இப்படிக்கா ஊதின னிந்திர ராசாவும்

## புலந்திரன் சின்னத்தோனியை திரியோதிரன் கேட்டு கோபிக்கிறது.

ஊதின சின்னத்தொனி கேட்டா னுத்தமனும்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்

உற்றுற்றுக் கேட்டானே உத்தமனும் வீரியனும்
கோபித்துக் கண்சிவந்து கொல்லுங் குருவியைப்போல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குன்றிபோலக் கண்சிவந்து கோபம் பெரிதாகி
நெற்றிப் புருவம் நெருப்பா யனலண்டி
சூரிய மண்டலத்தைச் சுற்றிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை யடுத்துச் சுவாலயமாய்
காஞ்சிநா டாளுங் கர்ணர் முகம்நோக்கி

## திரியோதிரன் தருமரைப்பற்றி இகழ்ச்சியாகக் கர்ணருக்குச் சொல்வது.

காஞ்சிநா டாளுங் கர்ணருக் கேதுசொல்வான்
கர்ணு-விண்ணோர் புகழும் விலாட நகரியிலே
தக்கப் புகழுடைய தர்ம ரெழுந்திருந்து
அறுந்ததொரு பூணூலுங் கிழிந்ததொரு புத்தகமும்
அறுபது சுக்கலாகப் போனதொரு புத்தகமும்
புத்தகத்தைக் கைப்பிடித்துப் போர்மன்னர் தம்கொலுவில்
பஞ்சாங்கஞ் சொல்லுகிற பார்ப்பானைப் போலிருந்து
இச்சகங்கள் சொல்லி இடிச்சுண் டிருந்தானே
அவ்விருதை ஊத அசந்தானே பேடிமகன்
உன்விருதும் என்விருதும் ஊதஇவ னூர்காணும்

## வீமனைப்பற்றி இகழ்ச்சியாகக் கூறுவது.

விண்ணோர் புகழும் விலாட நகரியிலே
வெற்றி மதயானை வீமனவ னேடிவந்து
எட்டடுப்பு மூட்டி அணைந்தடுப்பைத் தீமோதி
ஆச்சாவுந் தேக்கும் அகிலும் பிளந்தடுக்கி
நெட்டென்னக் கல்லை நெரித்து நெருப்பாகி
தென்கடலில் மாணிக்கம் வாரி யுமிசேர்த்து
வடகடலில் மாணிக்கம் வாரி யுமிசேர்த்து
பானை கழுவிப் பனிநீரால் உலைவார்த்து

அசையாமல் வெண்ணீரைத் தூத்தி மணல்பொறுக்கி
அரிசி புடைத்தட்டி எடுத்தானே ஆணழகன்
அவ்விருதை ஊத அசைந்தானோ பேடிமன்னன்
உன்விருதும் என்விருதும் ஊதஇவ ஞர்காணும்

## அர்ச்சுனனை இகழ்ச்சியாகக் கூறுவது.

விண்ணோர் புகழும் விலாட நகரியிலே
காண்டா வனமெரித்த காளை யவனெழுந்து
ஆணு லழகுமன்ன னர்ச்சுனன் தானெழுந்து
விலாட நகரியிலே வேணதொரு பெண்களுக்கும்
அவனுடைய தேவியர்க்கும் வேணதொரு பெண்களுக்கும்
மங்கையர்கள் பூமுடிக்கு மயிர்கோதி எண்ணெயிட்டு
மஞ்ச ளரைத்து மலரடிக்குத் தண்ணீர்கொண்டு
அவர்களுக்குப் பூமுடித்தான் ஆணு லழகுமன்னன்
ஆட்டமுங் கூத்துக்களும் அவர்க்கேற்ற நாட்டியமும்
கற்றுக் கொடுத்தானே காளை யர்ச்சுனனும்
அவ்விருதை ஊத அசந்தானோ பேடிமகன்
உன்விருது மென்விருது மூதஇவ ஞர்காணும்

## நகுலன்பேரில் இகழ்ச்சியாகக் கூறுவது.

நாம முடியான் நகுல னெழுந்திருந்து
கப்பல் குதிரை கனம்பெறவே கொண்டுவந்து
நல்ல குதிரை நலமாகக் கொண்டுவந்து
சீமைக் குதிரைகளைச் சிறப்பாகக் கொண்டுவந்து
நாணயங்கள் தானுரைத்தா னிராசாக்கள் முன்பாக
குதிரைக் கதிகாரி யிவனென்றார் கொற்றவர்கள்
அப்படிக்கே நல்லதென்று ஆனந்த வாழ்மார்பன்
கொள்பிடுங்கி கொட்டினன் புல்பிடுங்கி வாயிலிட்டான்
குதிரைகள் சாணிக் குவித்துண் டிருந்தானே
அவ்விருதை ஊத அசந்தானோ பேடிமகன்
உன்விருதும் என்விருது மூதஇவ ஞர்காணும்

## சகாதேவன்பேரில் இகழ்ச்சியாகக் கூறுவது

விண்ணோர் புகழும் விலாட நகரியிலே
தாம முடியான் சகாதேவ னோடிவந்து
இடைச்சி மனைகளெல்லா மிருந்ததொரு மாடுகளை
காடுகள் மேடுகள் கண்ட விடங்களெல்லாம்
மாட்டை மிகமடக்கி மன்னவனும் பால்கறந்து
மோருக்குக் கணக்குச்சொல்லி மொந்தைபால் பொம்மலுண்டு
இடைச்சி மனைகளிலே இச்சகங்கள் தான்பேசி
இச்சகங்கள் தான்பேசி இருந்தானே பேடிமகன்
அவ்விருதை ஊத அசந்தானோ பேடிமகன்
உன்விருதும் என்விருதும் ஊதஇவ னோர்காணும்
என்று-தேசத்தை யாளுந் திரியோ திரனுரைக்க

## கர்ணர் கோபித்துத் துரியனுக் கெடுத்துரைப்பது.

காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
நெஞ்சுலர்ந்து நாவரண்டு நித்திலங்கு பூமுடியான்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
கதிக்குக் கதிமண்டி கண்க ளெரிபறந்து
நீலவிழிக் கண்கள் நெருப்புத் தணலாகி
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குன்றிபோல் கண்சிவந்து கோப மதிகமதாய்
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
சூரிய மண்டலத்தைக் கிட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலயமாய்
மன்னன் மனஞ்சலித்து வார்த்தைக ளேதுசொல்வான்
சொல்மாற்றிச் சொல்லுரைப்பான் தோழன்முகங் கோணமல்
நீர்சொன்ன வார்த்தையது கேளுமையா ராசாவே
எப்படி யிருந்ததென்றால் இந்திர ராசாவே
நாராசங் காய்ச்சி நடுச்செவியிற் விட்டாற்போல்
ஈயத்தைக் காய்ச்சி இருசெவியில் விட்டாற்போல்

ஓடுருகக் காய்ச்சி உருக்கிக் கவிழ்த்தாற்போல்
உச்சி மயிர்பிளக்க உளிகொண் டடித்தாற்போல்
வாச்சுளிகள் கொண்டு மண்டை பிளந்தாற்போல்
இழைப்புளி யாலே எடுத்து இழைத்தாற்போல்
பஞ்சவர்கள் பட்ட பரிபோகம் நீரறிவீர்
ஐவர்கள் பட்டதொரு ஆடல்கள் நீரறிவீர்
அம்மாத்திர மானாலும் அறிந்து மனதடக்கும்
கொஞ்சமே யானாலும் கொண்டுமே மனதடக்கும்
பஞ்சவர்கள் கையாலே படுகிறபா டத்தனையும்
நாளைத் தெரியுதப்பா ராசாக்கள் கையாலே
பின்னைத் தெரியுதையா மன்னவர்கள் கையாலே
என்று மவனுரைத்து எழுந்தானே கர்ணராசன்
சிம்மா தனத்தைவிட்டுத் திகழக் குதித்திறங்கி
திரியன் முகம்நோக்கிச் சொல்லுவான் ஒருவார்த்தை

## கர்ணர் திரியனை மாளிகைக்குப் போக உத்தரவு கேட்பது.

மாளிகைக்குப் போய்வாறேன் மன்னவரே விடையருளும்
போகச் சிலவருளும் போய்வாறே னென்றுரைத்தான்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
அப்படிக்கே போகவென்று அரையன் விடைகொடுத்தான்
விடைபெற்றுக் கருணராசர் விடுபட்டு வாருரே
அம்பல வாசலது தாண்டியே மன்னவரும்
போரஞ்சா மன்னர் புலந்திரனைக் காணவென்று

## கர்ணர் புலந்திரரைக் காண வருகிறது.

எதிர்கொண்டு வாருரே எத்திலங்கு பூமுடியார்
மன்னர் படைநடுவே மறுமன்னர் கூட்டத்திலே
போரஞ்சா மன்னர் புலந்திரற்கு முன்பாக
நடந்தார் கர்ணராசர் நாலுதிக்குந் தானதிர
எப்படி நடந்தாராம் எதிரெரிக்குஞ் சூரியன்போல்
காஞ்சிநா டாளுங் கர்ணர் வருகிறதை

போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்பார்த்துத்
உற்றுற்றுப் பார்த்தானே உத்தமனார் சீர்வடிவை
பொன்னுமலே நாடாளும் அண்ணு முகம்நோக்கி
மாமா முகம்நோக்கி மன்னவனு மேதுசொல்வான்
அம்மான் முகம்நோக்கி ஆணழகன் ஏதுசொல்வான்
எதிர்காண வாறதொரு எத்திலங்கு பூமுடியான்
தருமர் திருமுகந் தார்வேந்தர் பூமுடியும்
அன்ன நடையும் அவர்போலத் தோணுது
தக்கப் புகழுடைய தருமரென் றெண்ணுகிறேன்
ஆர்வரவு மாமா அறிய வுரையுமென்றான்

## பொன்னுமலநாடான் கர்ணரென்று சொல்லுகிறது.

பொன்னுமலே நாடாளும் அண்ணவும் ஏதுசொல்வார்
ஆர்வரவு என்று நினைத்தீர்கா ணணழகா
கோணுத மாதவத்துக் குந்தியம்மாள் பெற்றெடுத்த
தருமருக்கு மூத்தவர்காண் ஆணழகா என்றுரைத்தார்
என்று மவனுரைக்க ஏதுசொல்வா ரிந்திரரும்
ஐவருக்கு மூத்ததொரு ஆணு லழகரென்றும்
குந்தியம்மாள் பெற்றெடுத்தக் குலக்கொழுந்து கர்ணரென்று
எனக்கும் பெரியதந்தை யிவரென் றுரைத்தீரே
ஐவருக்கு மூத்தவரா யிவரா யிருந்தாக்கால்
ஐவ ருடநகரம் அரசாண் டிருந்தாரோ
பஞ்சவர்கள் தன்னுடனே பாருல காளாமல்
திரிய னதுநகரஞ் சேர்ந்திருக்கக் காரணமேன்
மாற்று னுடநகரம் வந்திருக்கக் காரணமேன்
மர்மம் ஒளியாமல் மாமா உரையுமென்றான்

## பொன்னுமலநாடான் புலந்திரற்குக் கூறுவது.

பொன்னுமலே நாடாளும் அண்ணவுந் தான்கேட்டு
போரஞ்சா மன்னன் புலந்திரற் கேதுசொல்வார்
ஆனல்கேள் மன்னவனே அந்த வரலாறு
கோணுத மாதவத்துக் குந்தியம்மாள் நாயகியும்

அஞ்சு பிராயத்திலே அறியாத நாளையிலே
துருவாச மாமுனிக்குச் செய்தாள் பணிவிடைகள்
அந்தப் பணிவிடைக்கு மெச்சி மகாமுனியும்
ஐந்துமந் திரந்தன்னைக் கற்பித்தா ராசியர்க்கு
மந்திர வல்லமைக ளறியாள்காண் ஆச்சியரும்
அதிலேயொரு மந்திரத்தை தோத்தரித்தாள் அங்ஙனமே
சூரிய மந்திரத்தைச் சொன்னாளே வாயாலே
சொன்ன வுடனாகத் தோன்றினார் சூரியனும்
கோனாத மாதவத்துக் குந்தியம்மாள் தன்னையவர்
பருவம தூண்டுசெய்து பட்சமுடன் அவரோடு
கொஞ்சு மொழிபேசிக் குலவி விளையாடினார்
அப்போது கர்ப்பந் தரித்தது அழகாக

## குந்தி சொல்வது.

கோனாத மாதவத்துக் குந்தியம்மா ளதுகண்டு
அஞ்சு வயது அறியாத காலத்திலே
நானுமொரு பிள்ளைபெற்றால் நாடெல்லாம் ஏசாதோ
என்று மவளுரைத்து சொல்லிப் புலம்பினாள்
பானு குலத்துதித்த சூரியனு மேதுசொல்வார்
அஞ்சாதே பெண்மயிலே என்று மவரெழுந்து
ஆணழகர் வீரியரும் அறைந்தார் தவடையிலே
அறைந்த அறையாலே பிறந்தார் கர்ணரும்
கவசகுண்டலந் தன்னுடனே கன்னத்தில் தான்பிறந்தார்
கன்னத்தில் பிறக்கவே கர்ணரென்று பெயருமிட்டு
குந்தி தரித்திருந்த கோலவர்ணப் பட்டாடை
முன்தானை தன்னிலே கிழித்தா ளொருமுழந்தான்
ஒருமுழந் தான்கிழித்து உத்தமர்க்குத் தான்போர்த்து
பஞ்சவணர்ப் பேழையிலே குழந்தையை உள்ளடக்கி
சாத்தியே பூட்டுமிட்டு விட்டார்கள் ஆறதனில்
ஆற்றில் குழந்தைவிட்டுச் சூரியரும் போய்நடந்தார்
கோனாத மாதவத்துக் குந்தியம்மாள் போய்நடந்தாள்

### கருணர் பேழையில் மிதப்பது.

ஆற்றிலே பேழை யமர்ந்து மிகத்தளும்பி
அத்தி புரத்தை அடுத்தது அப்பேழை
தேசத்தை யாளுந் திரியோ திரன்தானும்
அவனுக்குத் தோழனவன் ஆணழகன் தச்சனவன்
ஆற்றங் கரையோரம் வந்தா ரிருவருமாய்
ஆற்றிலே பேழையது அடித்துவரக் கண்டார்கள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
பெட்டி வருகிறது பேழையது என்னதென்றான்
தாம முடியானுந் தச்சனவ னேதுசொல்வான்
பெட்டியது வுன்னதுகாண் பேழையத னுள்ளிருக்கும்
பேழையத னுள்ளிருக்கும் பூஷணங்க ளென்னதென்றான்
இப்படி யாகச்சொல்லி யிருந்தார்க ளிருவருமாய்
மேல்காற்று மங்கே மிகவெள்ளந் தான்பெருகி
ஆறுபொங்கி நீர்தளும்பி அப்பெட்டி தான்மிதந்து
ஆற்றின் கரையோரம் அமர்ந்தது பெட்டியது
குளத்தின் கரையோரங் கொண்டுமே தங்கியது

### தச்சனும் திரியனும் ஆற்றில் பேழையைக் கண்டெடுத்தது.

தச்சன் திரியனும் தானெடுத்தார் பேழைதன்னை
இருவருந் தூக்கி யிசைந்து வழிநடந்தார்
மாளிகையுள் நுழைந்தார்கள் மன்னவர்கள் தச்சனும்
பேழைதன்னை உளிகொண்டு தாள்திறந்தா னுத்தமனும்
பேழைதன் உள்ளிருக்கும் பிள்ளையைக் கண்டார்கள்
தச்ச னவனெடுத்துத் தானடந்தான் மாளிகைக்கு
குழந்தையை யவனிடுக்கிக் கொற்றவனுந் தானடந்தான்

### தச்சன் பிள்ளையை யெடுத்துக்கொண்டுபோய் வளர்த்துக்கொண்டிருந்தது.

மாளிகையில் கொண்டுவந்து மைந்தனை நீராட்டி
மைந்தனை நீராட்டி மலர்க்கண்ணின் மையெழுதி

கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டுமிட்டு
உச்சித மான வுடைமைகள் பலதிருத்தி
கோலவர்ணப் பூஷணங்கள் குழந்தைக்குத் தானணிந்து
வண்ணவண்ணப் பூஷணங்கள் மைந்தர்க் கலங்கரித்து
கொம்பிலே சிறுதேனும் கோதுபடாச் சர்க்கரையும்
மலேயில் சிறுதேனும் வங்காளச் சர்க்கரையும்
கூட்டிப் பிசைந்துமல்லோ கொற்றவர்க்குத் தானூட்டி
பன்னீரால் வாயலம்பிப் பட்டால் வாய்துடைத்து
ஈரம் உலர்த்தி யிழைசேர்ந்த பட்டுடுத்தி
மைந்தனேத் தானிடுக்கி வழிநடந்தான் மன்னவனும்
தெத்துத் தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
கடையுங் கடைத்தெருவுங் கருமார வீதிவிட்டு

## தச்சன் திரியோதிரன் மாளிகைக்குக் குழந்தையாகிய கர்ணரை யெடுத்துக்கொண்டு போனது.

மாநகர மாளும் மகாராசன் மாளிசென்றுன்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
அமுதுண்டு மண்டபத்தில் ஆணழகன் போய்நுழைந்தான்
செம்பொன் முக்கால்நிறுத்திச் செம்பொன் தளிகையிட்டார்
புலிமுகக் கால்நிறுத்திப் பொன்னுல் தடுக்கையிட்டார்
இட்டதொரு ஆசனத்தில் ஏறியவர் வீற்றிருந்தார்
அங்குமொரு தாதி அறிவுடையாள் அப்போது
மாணிக்கக் கிண்ணிகளை வைத்தா ரழகாக

## திரியோதிரன் முப்பத்திரண்டு கிண்ணியில் புசிப்பது.

முப்பத் திரண்டுகிண்ணி முடிமன்னர் கிட்டேவைத்தார்
அமுது படைத்தார்கள் ஆரணங்கு தாதியர்கள்
பத்து வகைக்கறியும் பாலடிசில் போசனமும்
மற்றும் வகைக்கறியும் வண்ணவண்ணப் போசனமும்
அத்தனையுங் கொண்டு அளித்தார்கள் தாதியர்கள்
போசனமும் வைத்துப் புத்துருக்கு நெய்சொரிந்து
காராவின் நெய்சொரிந்து கட்டித் தயிர்வார்த்தார்

தேசத்தை யாளுந் திரியோதிரப் பெருமான்
அமுது புசித்திருந்தார் அழகான ராசாவும்
அந்தநல்ல வேளையிலே வந்தானே தச்சனுந்தான்
மைந்தனைத் தானிடுக்கி வந்து புகுந்தானே
குழந்தையைத் தாழவிட்டான் கொற்றப்போர் வீரியனும்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
அமுதுண்ணுங் கிண்ணியிலே அனேக வதிசயங்கள்
ஒருபிடி அமுதெடுத்தால் மறுபிடியெல் லாம்புழுவாம்
மற்றுமொரு கிண்ணியிலே அள்ளிப் புசிப்பாரே
முப்பத் திரண்டுகிண்ணி முழுதும் புழுவாகும்
அந்தப் புழுக்களெல்லாங் கிண்ணியிலே மேய்ந்திருக்கும்

## திரியோதிரன் கலத்துப் புழுவை நீக்கின குழந்தையயாகிய கர்ணரை ஸ்வீகாரங் கோண்டது.

அப்போ குழந்தையது அங்கே விளையாடி
தண்டை யசையத் தவழ்ந்து விளையாடி
கிண்ணி'யருகில்வந்து மெள்ளெனவே கைதுவைக்க
கைதுவைத்த வேளையிலே கலத்துப் புழுவெல்லாம்
கலத்துப் புழுக்களெல்லாங் கண்டானே திரியோதிரன்
புழுக்களு மாறிப் போசனங்க ளாச்சுதங்கே
மற்றசிலக் கிண்ணிகளை வைத்தா ரெதிராக
அத்தனைக் கிண்ணிகளை அள்ளிற்று அக்குழந்தை
முப்பத் திரண்டுகிண்ணி முடிமன்னர் கையைவைக்க
புழுக்களு மாறிப் போசனங்க ளாச்சுதங்கே
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து

## திரியோதிரன் சந்தோஷிப்பது.

பூரித் திருதோளும் பொன்னு பரணமின்ன
திரேகங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
உள்ளங் குளிர்ந்து உடம்பெல்லாம் பூரித்து

மைந்தனை வாரி மடிமேலே கொண்டணைத்து
கைத்தலத்தைத் தானெடுத்துக் கண்ணிலே ஒற்றிக்கொண்டான்
உச்சி முகந்து உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கந் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே வைத்திருந்து
பிள்ளை முகம்பார்த்துப் பூரித்தான் திரியோதிரன்
தச்சன் முகம்நோக்கி தார்வேந்த னேதுசொல்வான்
அப்பூரவே சிற்பாசாரி அடியே னொருவார்த்தை
என்தன் மனதுக் கிசைந்தாப்போல் வாக்கருளும்
சிந்தையிலே யெண்ணிக் கேட்டதற்கு வாக்கருளும்
திராசுகொண்டு வந்து தட்டில் குழந்தைவைத்து
திறவுகோல் தானெடுத்து மைந்தரைத் தானிறுத்து
குழந்தை யளவுக்குக் கொட்டுகிறேன் ரத்தினங்கள்
பிள்ளை யளவுக்குப் போடுகிறேன் ரத்தினங்கள்
இந்தக் குழந்தையை யெனக்குத் தரவேண்டும்

## திரியோதிரன் தச்சனுக்குக் குழந்தையெடைக்கு இரத்தினங்கள் கொடுப்பது.

குறுக்கொன்றும் பேசாமல் குழந்தையை யீந்துவிடும்
மறுவார்த்தை சொல்லாமல் மைந்தரை யீந்துவிடும்
என்று மவனுரைக்க ஏதுசொல்வான் தச்சனவன்
மன்னவனார் கேட்டதற்கு மறுவார்த்தை சொல்லாமல்
அரண்மனையார் கேட்டதற்கு அஞ்சிப் பயந்தவனும்
செங்கோல் முறைமைக்குமுன் சங்கீத மேறுதென்றான்
சித்தத்துக் கேற்றபடிச் செய்தருளிக் கொள்ளுமென்றான்
உம்தம் மனதின்படி உகந்தருளிக் கொள்ளுமென்றான்
தேசத்தை யாளுந் திரியோதிரன் கேட்டு
சந்தோஷப் பட்டுச் சரீரங்கள் பூரித்து
எடைக்கெடை ரத்தினங்கள் எடுத்து நிறுத்தார்கள்
குழந்தை எடைகண்டு கொட்டினார் ரத்தினங்கள்
மைந்த னிடைகண்டு வாரி யெடுத்தார்கள்

## பிராமணரை யழைத்து நாமகரணஞ் சூட்டினது.

வேதப் பிராமணர் வேதியரைத் தாமழைத்து
சாஸ்திரங்கள் தான்பார்த்துச் சாதகங்கள் தாமெழுதி
நாளது கேட்டு நடுநாள் முகூர்த்தமிட்டு
நாம முடியானுக்கு நாமகரணம் பண்ணிவைத்து
காஞ்சிநா டாளுங் கர்ணரென்று பெயருமிட்டு
கலத்துப் புழுநீக்கின கர்ணரென்று பெயருமிட்டு
மூன்றும் வயதிலே முத்து முடிதரித்து
நாலாம் வயதிலே நாடாளச் செப்பனிட்டு
ஐந்தாம் வயதிலே ஆணழகர் கர்ணருக்கு
இராச்சிய முறைமைகளை நன்றாய்த் தெரியவைத்து
ஏழாம் வயதிலே இளையபட்டங் கட்டிவைத்து

## காசிநாட்டைக் கர்ணருக்குப் பட்டஞ் சமர்ப்பித்தது.

போதே வருந்தடங்கண் பொன்னுருவி நாயகியை
மாலை முடியார்க்கு மணமுகூர்த்தம் பண்ணிவைத்து
அன்றுமுத லின்றளவும் ஆண்டிருந்தார் ராச்சியத்தை
மனதுகுறை யில்லாமல் வையகத்தை யாண்டிருந்தார்
ஏதுங்குறை யில்லாமல் இனிதரசை யாண்டிருந்தார்
இழிகுலத்தான் மாளிகையில் இருந்த படியாலே
தேர்ப்பாக னென்றுசொல்லி எங்குமே பேராச்சு
காசிவள நாடாளுங் கர்ணர் பெருமாளும்
ஐவர்க்கு மூத்ததொரு ஆனந்த வாழ்மார்பர்
குந்தியம்மாள் பெற்றெடுத்தக் குலக்கொழுந்து இவர்காணும்
உனக்குப் பெரியதந்தை என்றூரே உத்தமனூர்

## புலந்திரர் கர்ணரைக் காணுகிறது.

போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
பூவும் புதுமலரும் பொன்னறுகும் அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருந் தானெடுத்து

காஞ்சிநா டாளுங் கர்ணருக் கெதிரேவந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டு
தந்தையார் சீர்பாதம் வணங்கினன் தார்வேந்தன்
வந்து பணிந்தவரைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து

## கர்ணர் புலந்திரனை வாழ்த்துகிறது.

வாழ்வீர் வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பி ரெந்நாளும்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டஞ் சூட்டிடுவீர்
சினத்தார் பூமுடியைச் செண்டாட்ட மாட்டிடுவீர்
பகைத்தார்கள் பூமுடியைப் பருந்தாட்ட மாட்டிடுவீர்
மாற்றான் படைநடுவில் மன்னர்களை வென்றிடுவீர்
மதுரைப் பதியாள மைந்தர்களைப் பெற்றிடுவீர்
அத்தி புரமாள ஆண்பிள்ளை பெற்றிடுவீர்
மாதர்களை மாலையிட்டு மைந்தர்களைப் பெற்றிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளைப் பெற்றிடுவீர்
பெண்களை மாலையிட்டுப் புத்திரரைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திருப்பீர்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினர்

வாழ்த்தி விடைகொடுத்து மாரோடே கொண்டணைத்து
காளை முகநோக்கிக் கட்டழக ரேதுசொல்வார்

### மறுபடியும் கர்ண ருரைப்பது.

தர்மர் வலுவிழந்தீர் தம்பிமார் தோளிழந்தீர்
வீமர் வலுவிழந்தீர் விசையனுர் தோளிழந்தீர்
ஒப்பிட்ட வாளை உரையுருவி விட்டாற்போல்
தப்பிவிட்டீர் நீருமிப்போ தம்பி புலந்திரரே
என்று-வாயார வாழ்த்தி மனதைப் பெரிதுபண்ணி
ஐயா புலந்திரரே ஆணழகா நீர்கேளும்
வந்த வகையறியேன் மன்னு புலந்திரரே
தேசத்தை யாளுந் திரியோ திரன்சபையில்
தாம முடியான் தைலாட்டா னங்கிருப்பான்
அவரைநீ கண்டாலே ஆசாரம் பண்ணுமென்றார்
ஆசாரம் பண்ணி அகலப்போய் நில்லுமென்றார்
கோணுத மாதவத்துக் குருக்களு மங்கிருப்பார்
அவரைநீ கண்டாலே ஆசாரஞ் செய்யுமென்றார்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
அம்பலத்து வாசலிலே ஆசனங்கள் செப்பனிட்டான்
நீ-வந்த விசேஷ மதுவறிந்து மன்னவனும்
ஆழமாய் மண்தோண்டி அமைத்தான் படுகுழிகள்
ஈட்டிபிடி மன்னவர்கள் எழுநூறு கோடியுண்டு
கத்திபிடி மன்னவர்கள் கத்திரியர் கோடியுண்டு
வாள்கத்தி சூலாயுதம் வளைவுதடி சக்கரங்கள்
இத்தனையுங் கொண்டு அமைத்தான் படுகுழியில்

### மறுபடியும் கர்ணர் புத்தி கூறுவது.

படுகுழிக்குமேலாகப் பச்சைத் துகில்விரித்து
பூவாலே ஆதனங்கள் போட்டாரே புலந்திரற்கு
ஆணழக னம்பலத்தில் ஆசனஞ் சென்றேருதே
தட்டோடே வெற்றிலையும் சாதிக்காய் லவுங்கமுமே

கொத்தோடே பழக்குலையும் குடுமியுள்ள தேங்காயும்
மல்லிகைப்பூ மாலைகளும் மார்நிறைந்த தாவடமும்
கச்சாய வர்க்கமெல்லாங் கட்டழகன் தானெடுத்து
உன்னை எதிர்காண வருவார்கா ணுத்தமனே
மன்னவன் கையிலே மாலை தரித்தாலே
மாலை தரித்தாலே மைந்தா புலந்திரனே
கச்சாயந் தீண்டாதே கட்டழகா வீரியனே
என்று இத்தனையுஞ் சொல்லி யிருந்தாரே கர்ணரவர்
போரஞ்சா மன்னன் புலந்திரனும் அதுகேட்டு
அப்படிக்கே நல்லதென்று அடிவணங்கித் தெண்டனிட்டான்
தெண்டனிட்ட மைந்தனைக் கண்டு கர்ணருமே
ஏற்குமோ ஏற்குமோ இழிகுலத்தா னைவற்கு
ஏற்குமோ எந்தனுக்கு உன்தனுட கும்பிடுதான்
சாதிகெட்ட வேந்தனுக்கு உன்தனுட கும்பிடுதான்
ஐயா புலந்திரனே ஆகாது என்றுரைத்து
என்ற வுரைக்கேட்டு ஏதுசொல்வா னிந்திரனும்

## புலந்திரர் கர்ணருக்குச் சோல்வது.

அதேது என்னையா அதிசயமாய் நீருரைத்தீர்
இவருக்கு மூத்தவாநீர் அப்படிக்குச் சொல்லலாமோ
என்று மவனுரைத்து யிந்திர ராசாவும்
சிவசிவா வென்று திருச்செவியில் கையைவைத்து
அரகரா வென்று அரற்றி அலைதாான்
ஐயாவே நீர்கேளும் அடியே னொருவார்த்தை
என்னையா நீர்கேளும் இன்னமொரு வாக்கியத்தை
ஐயருட ராச்சியத்தை யாளுங்கா ணுத்தமனே
மதுரைப்பெரும் பட்டணத்தை யாளுமென்றான் மன்னவனும்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியை
மாற னருளாலே மன்னவனே நானறுப்பேன்
சொக்க ரருளாலே அறுப்பே னொருக்ஷணத்தில்
அவர்கள்குடி வேரறுத்து அரசாள வைப்பேன்யான்

அத்தி புரத்தை அரசாளு மையாவே
இவரும் நீரும் அரசாண் டிருந்தாக்கால்
தர்மரும் வீமரும் தார்வேந்த ரர்ச்சுனரும்
நகுல சகாதேவ ராசாக்க ளைவருமே
உமக்குக்-கைகட்டி வாய்புதைத்துக் கட்டழகர் தாமிருப்பார்
அடிக்கீழ் முடிசாய்ப்பார் ஐவர்பஞ்ச பாண்டவர்கள்
அப்படிக்கே நீரிருந்து ஆளுமென்றான் ராச்சியத்தை
காஞ்சிநா டாளுங் கர்ண ரதுகேட்டு
மைந்தர் முகம்நோக்கி மறுவார்த்தை யேதுசொல்வார்

## கர்ணர் புலந்திரற்கு உரைப்பது.

ஐயா புலந்திரனே அவ்வார்த்தை சொல்லுறேன்கேள்
தேசத்தை யாளுந் திரியோ திரராசன்
என்னை-வளர்த்த அருமைகளும் வைத்திருந்த நேர்த்திகளும்
பிள்ளை யருமைகளும் பேரிட்ட நேர்த்திகளும்
எனக்காகப் பட்டதிவ ரெத்தனையோ கோடியுண்டு
நான்-வேட்டைக்குப் போனாலே வேல்பொருதுங் கண்ணனும்
மாளிவந்து சேருமட்டும் மண்டபம்சென் றேறான்காண்
எனக்காகப் பட்டவதம் எத்தனையோ கோடியுண்டு
எழுத முடியாது ஏட்டி லடங்காது
போதே வருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு
மாலை தரிப்பதற்கு மன்னவர்கள் தாமறிய
ஐம்பத்தாறு தேசத்தில் அறைந்தார் பறையோசை
மண்டலத்து ராசாக்கள் வந்தார்கள் பந்தலுக்கு
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
என்னை வரவழைத்து எனக்குமிக வலங்கரித்து
என்னை யழைத்து நடந்தார்காண் பந்தலுக்கு

## இழிகுலத்தா னென்றுசொல்லி கர்ணரை யிகழ்ந்தது.

ஆசாரிப் பிள்ளையென்று அனைவோரு மாகாதென்றார்
தச்சனுட பிள்ளையென்று தள்ளிவிட்டா ரென்னையவர்
அப்போ திரியோதிரன் அரசாளும் ராசமன்னன்

சிம்மா சனமேறித் தேன்மொழியார் வீற்றிருந்தார்
என்னையவர் தள்ளிவிட்ட சேதி யவரறிந்து
மண்டலத்தார் தாமறிய மடிமேலே கொண்டணைத்தார்
மண்டலத்து ராசாக்கள் வந்த சபைநடுவே
தேசத்து ராசாக்கள் இருக்கும் சபைநடுவே
போதே வருந்தடங்கண் பொன்னுருவி யுன்னுச்சி
மாத ரிளங்கொடியாள் மாலை சுழற்றிவந்தாள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
மாலை பிடுங்கவென்று மாயவரைத் தானழைத்தான்
மாயர் பெருமாளும் மாயமாய் வந்துவிட்டார்

## ஸ்ரீ கிருஷ்ணர் வந்தது.

கருடன் வடிவெடுத்துக் கர்ச்சனை யிட்டுமல்லோ
மாதினிட கைமாலை பறித்தாரே மாயவரும்
மாலை யவர்பறித்த சேதி யிவனறிந்து
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
கணையாழி மோதிரத்தைக் கழற்றிவிட்டார் பூமியிலே
என்னைக் குனிந்து எடுமென்றார் மோதிரத்தை
குனிந்து எடுக்கையிலே கோபாலர் மைத்துனரும்
மாலை நழுகவிட்டார் வந்து விழுந்ததுகாண்
என்த னுடகழுத்தில் விழுந்தது பூமாலை
அங்கிருக்கும் ராசாக்கள் அனைவோருந் தாம்பார்த்து
இழிகுலத்தான் தன்கழுத்தில் விழுந்தது மாலையென்று
தட்டி நகைத்துமல்லோ தார்வேந்தர் போய்நடந்தார்
கைகட்டி வாய்புதைத்துக் கட்டழகர் போய்நடந்தார்
போதே வருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு
ஐம்பதுபே ரையன்மார் ஆச்சிமா ரைம்பதுபேர்
அத்தண்ட பேர்களும் அனைவோரு மேதுசெய்தார்

## பொன்னுருவி தாய்தகப்பன்மார் புறக்கடையாலோடுகிறது.

அடிசில் சமைத்திருக்க அனைவருந் தாமெடுத்து
மண்ணைவெட்டித் தான்புதைத்து மன்னவர்கள் ஓடலுற்றார்

புறக்கடை வீதியிலே போய்நடந்தார் மன்னவர்கள்
அன்றுமுத லின்றளவும் அவர்க ளுதவியில்லை
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
போதே வருந்தடங்கண் பொன்னுருவி நாயகிக்கு
ஐயன்மார் சீர்போல நடத்தினு னணழகன்
ஏதுங்குறை யில்லாமல் இன்றளவுந் தான்பட்டான்
எனக்காகப் பட்டதவம் எத்தனையோ கோடியுண்டு
மனமாரப் பட்டதவம் மன்னவனே கோடியுண்டு
மற்று மொருநாளில் மன்னவரே யென்தனுக்கு
காய்ச்ச லடிக்கிறதும் கண்ணைச் சொருகிறதும்
விக்க லெடுக்கிறதும் வில்லாட்டம் வாடுறதும்
எட்டுநாள் லங்கணமா யிருந்தேன் பசிக்கையிலே
பத்தியங்க ளுண்டு படுக்கவே யாகாதென்று
பேடைமயிற் கண்ணுள் பெருந்திருவாள் நாயகியும்
திரியோதிரன் பஞ்சணைமேல் தாமிருவர் வீற்றிருந்து
சொக்கட்டான் சூது சதுரங்க மாடினேங்காண்
திரியோ திரன்தேவி தோற்றுள் பெருந்திருவாள்
மாலை முடியானும் மறைந்தோடிப் போகவென்று
எழுந்து நடக்கையிலே எத்திலங்கு பூமுடியாள்
அவள்-முன்தானை பற்றி யிழுத்தேன்காண் மன்னவனே
துகிலாடை பற்றி யிழுத்து மிருக்கையிலே
முத்தாலே கோர்த்த துகிலாடை யத்தனையும்
பற்றி யிழுக்கையிலே பலபலென்று தான்விழுந்து
கோத்தநூ லற்றுக் குலைந்தன முத்துகள்தாம்
முத்தாடை யிழந்த முடிமன்னன் தேவி
மானங் குலைந்து மறைவாக ஓடுகிறுள்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
மாலை முடியானும் வனவேட்டை யாடியல்லோ
மான்வேட்டை யாடியல்லோ வந்தா ரரண்மனைக்கு
அங்கே நடந்த அதிசய முள்ளவெல்லாம்
சொக்கட்டான் சூது சதுரங்க மாடினதும்

கோத்தமுத்துத் தாவ்டங்கள் குவிந்து கிடக்கிறதும்
ஆடை யிழந்துமவள் அவமான மடைந்ததுவும்
மாலை முடியாள் மறைந்தோடிப் போனதுவும்
அத்தனையுங் கண்டானே ஆணு லழகுமன்னன்
அங்கிருக்குந் தாதியர்கள் அனேகம்பே ரேதுசொல்வார்

## தாதிகள் சொல்வது.

இன்றுமே கர்ணர் மடிந்திடுவா ரென்பார்கள்
செத்தான் கர்ணனென்று சொல்வார்க ளேகம்பேர்
மாண்டான் கர்ணனென்று மண்டலத்தார் சொல்லிடுவார்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
தன்மே லிருந்த துகிலாடை தான்களைந்து
மாலைக் குழலாட்கு மங்கையர்க்குத் தான்கொடுத்து
பெற்றதொரு புத்திரனார் பிள்ளைக்கோ போயொளித்தாய்
வாருங்காண் மங்கையரே என்று மனந்தேற்றி
மாலைக் குழலாளை மடிமேலே கொண்டணைத்து
என்தன் முகம்நோக்கி எனக்கிதவு தானுரைத்தார்
அந்தச் சகாயம் அதுதான் மறப்பேனோ
எனக்காகப் பட்டதவம் எத்தனையோ கோடியுண்டு
படவேணும் படவேணும் பார்த்தன்கை யம்பாலே
இன்னம் படவேணும் எழில்விசைய னம்பாலே
தேசத்தை யாளுந் திரியோ திரனார்க்கு
செஞ்சோற்றுக் கடன்கழிக்க வேணுங்கா ணிந்திரரே
என்று மவருரைத்து எழுந்திருந்தார் கர்ணராசர்
போகவிடை தாருமென்று போர்க்கருணர் தாம்கேட்க
கைதொழுது இந்திரனும் கட்டழக னேதுசொல்வான்
போய்வாரு மென்றுசொல்லிப் பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
விடைபெற்று தானெழுந்தார் வேந்தர் கர்ணராசன்
கர்ணரவர் போனபின்பு கட்டழக னிந்திரனும்

## புலந்திரன் போவது.

மற்றோர் படிகடந்தான் மன்னன் படைஅடைந்தான்
மற்றோர் படிகடந்து மன்னவன் போகலுற்றான்

காஞ்சி வளநாடாளுங் கர்ணர் பெருமானும்
அம்பலஞ் சென்றேறி ஆனந்த வாழ்மார்பன்
தேசத்தை யாளுந் திரியோ திரன்தெருவில்
வந்துமிவர் வீற்றிருந்தார் மன்னவர் கர்ணரங்கே
தேசத்தை யாளுந் திரியோதிர ராசருக்கு
காஞ்சிநா டாளுங் கர்ணரவ ரேதுசொல்வார்

### கர்ணர் திரியனுக்குச் சொல்வது.

மதுரைப் பதியாளும் வாழ்பாண்டி நாட்டானும்
தம்பி பறிகொடுத்து வந்தானே தார்வேந்தன்
எதிரேபோய் காணுமென்றான் எத்திலங்கு பூமுடியான்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
கச்சாயம் பூமலருங் கனம்பெறவே தாமெடுத்து
தட்டோடே வெற்றிலையுஞ் சாதிக்கா யேலங்களும்
கொத்தோடே பழவகையும் கொற்றவனர் தானெடுத்து
ஆளின் தலையி லெடுப்பித்தா னணழகன்
மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூ சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூச் சுங்குவிட்டு
அத்தண்ட வீரருடன் வாறானே திரியோதிரன்
அம்பலத்து வாசல்விட்டு வாறானே ஆணழகன்
போரஞ்சா மன்னன் புலந்திரன் முன்னேவந்து
ஐயர் வரவுகண்டு ஆணழக னிந்திரனும்

### புலந்திரன் யானையின்மேலிருந்து வினவுகிறது.

ஆனையின் மேல்தானே யிருந்த படியாக
வாளெடுத்து முன்வைத்து வணங்கினன் மன்னவனும்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
சரியானை மேலிருந்து தார்வேந்த னேதுசொல்வான்
கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
பத்திய நாகம் பவளம்போற் கண்சிவந்து
குன்றிபோற் கண்சிவந்து கோப மதிகரித்து

நெற்றிப் புருவம் நெருப்பா யனலண்டி
சூரிய மண்டலத்தைச் சுற்றி வருவதுபோல்
அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலயமாய்
போரஞ்சா மன்னர் புலந்திரரைத் தான்பார்த்து
தேசத்தை யாளுந் திரியோதிர னேதுசொல்வான்

## திரியோதிரன் சொல்வது.

ஐவர்கள் பெற்றெடுத்த ஆணழகர் வீரியரே
காளையவர் பெற்றெடுத்தக் கட்டழக ரிந்திரரே
அழகியசீர் கொம்பனையா ளல்லித் திருமகரே
யானைவிட்டுக் கீழிறங்கி அடிபணிந்தா லாகாதோ
குதிரைவிட்டுக் கீழிறங்கிக் கும்பிட்டா லாகாதோ
வாளெடுத்துக் கீழிறங்கி வணங்கின லாகாதோ
ஐவருட வம்சத்துக் காகாதோ மன்னவரே
குருகுலத்தார் வங்கிஷத்துக் கொவ்வாதோ மன்னவரே
என்று மவனுரைத்து ஏதுசொல்வான் திரியோதிரன்
கொண்டுவந்த கச்சாயங்கள் கொற்றவர்க்கு முன்னேவைத்து
இந்திரன் முகம்நோக்கி ஏதுசொல்வான் திரியோதிரன்

## மறுபடியும் திரியோதிரன் சொல்வது.

தம்பி வலிவிழந்தீர் தம்பிமார் சீரிழந்தீர்
வீமர் வலிவிழந்தீர் விஜயனார் சீரிழந்தீர்
ஒப்பிட்ட வாளை யுறையுருவி விட்டாற்போல்
தப்பிவிட்டீர் நீருமிப்போ தம்பி தனஞ்சயரே
ஆளப் பிறந்த அபிமர் முடியிழந்தீர்
அத்தாலுந் தீராத அரவான் முடியிழந்தீர்
தாம முடியான் கடோற்கஜன் முடியிழந்தீர்
ஆறிவிடும் ஆறிவிடும் அப்பாவே ஆறிவிடும்
தேறிவிடுந் தேறிவிடும் தேவரே தேறிவிடும்
கச்சாயங் கொண்டுவந்தேன் காளை புசியுமென்றான்
பலகாரங் கொண்டுவந்தேன் பாலகரே புசியுமென்றான்

உண்டு பசியாறும் உத்தமனூர் வீரியரே
தின்று பசியாறும் காளையுட புத்திரரே
இந்தாரு மென்று எடுத்துமவன் கைநீட்டி

## புலந்திரன் சொல்வது.

போரஞ்சா மன்னன் புலந்திரனு மேதுசொல்வான்
தம்பியை நான்கொடுத்துத் தற்சோர்ந்து நிற்கையிலே
உடற்பிறப்பை நான்தோற்று உயிர்சோர்ந்து நிற்கையிலே
ஒருவருட தன்மனையில் உண்ணேனென்றான் பாலமிர்தம்
சூதகங்கள் தீராதே தின்னேன்காண் பாலமிர்தம்
மாலை தரிப்பதில்லை மன்னர் பெருமானே
தக்கோலந் தின்பதில்லை தனஞ்சயரே யென்றுரைத்தான்
தேசத்தை யாளுந் திரியோதிரன் தான்கேட்டு
மகுட முடியசக்கி மர்ம முரையாமல்
அம்பலத்து வாசலிலே ஆணழகன் வந்தாலே
மண்டை யுடைத்திடுவேன் வல்லுயிரை வாங்கிடுவேன்
பொய்யா தனமிடுவோம் பொய்கைவளர் பாண்டியற்கு
அத்தாலுஞ் சாகாமல் தப்பிப் பிழைத்தாரேல்
தப்பிப் பிழைத்தாரேல் தார்வேந்தர் பூமுடியை
எந்தவித மானாலும் இறக்கவழி தேடுவோம்
என்று மனதிலெண்ணி ஏகி நடக்கலுற்றான்

## திரியோதிரன் சிம்மாசனம் வந்துவிட்டது.

தென்ன முடிவேந்தன் திரியோ திரன்திரும்பி
அம்பலத்து வாசலிலே ஆணழகன் வந்துநின்று
எரிநாகங் கொண்டவனும் ஏறினன் சிம்மாசனம்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
புத்திரரைக் காண நடந்தீரே புண்ணியரே
மைந்தரைக் கண்டு புகழ்ந்துஉற வாடினதும்
அத்தனையுஞ் சொல்லுமென்றார் அங்கிருக்கும் வீரியர்கள்
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு

போனதுவும் வந்ததுவும் புத்திரரைக் கண்டதுவும்
அங்கே நடந்த விசேஷங்க ளத்தனையும்
சொல்லிக் குதித்தானே துரைகளுக்கு முன்பாக
அத்தண்ட பேரும் அனைவோருந் தான்கேட்டு
நல்லதென்று வீற்றிருந்தார் நாம முடியார்கள்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
சாமத் துரோகி சகுனியைத் தானழைத்து

## திரியோதிரன் சகுனிக்கு எடுத்துரைப்பது.

அம்மான் முகநோக்கி ஆணழக னேதுசொல்வான்
வையை வளநாட்டான் வாருன் கொலுவுக்கு
வளநாட்டாள் புத்திரனும் வாருன் கொலுக்காண
கொம்பனையாள் புத்திரனைக் கொல்ல வகைதேடும்
மாயன் மருமகனும் மாளவழி தேடுமென்றுன்
சாமத் துரோகி சகுனி யவன்கேட்டு
மருமகன் முகநோக்கி மன்னவ னேதுசொல்வான்
வளநாடி புத்திரனைக் கொல்லவே வேணுமென்றுன்
அர்ச்சுனனுர் புத்திரனை யழகு புலந்திரனை
அவனையே கொல்லுதற்கு அனேகம்பேர் வேணுமோ
பொய்யா தனமிடுங்காண் பொய்கைவள நாடனுக்கு
ஆதனஞ்சென் றேறினல் அதிலே யழிந்திடுவான்
உள்ளிருக்கு மன்னவர்கள் செல்லா யரித்திடுவார்
செத்து மடிந்திடுவான் சிவலோகஞ் சேர்ந்திடுவான்
மாண்டு மடிந்திடுவான் வைகுண்டஞ் சேர்ந்திடுவான்
என்று மவருரைக்க யெழில்நாகன் தான்கேட்டு
அங்கிருக்குந் தூதுவரை ஆணழகன் தானழைத்து

## தூதுவர்கள் குழிவெட்டி சூதுமார்க்கமா யிறங்கி மருந்துகள் புதைப்பது.

ஆழக் குழிதோண்டி யமையுமென்றுன் மன்னவரை
பாதாள லோகமட்டும் படுகுழி வெட்டுகிறுர்

ஆழக் குழிதோண்டி ஆச்சுதென்று தெண்டனிட்டார்
வண்ணலட்ச மன்னர்களை விட்டா னதில்நிரப்பி
ஈட்டித்துப் பாக்கிகளும் ஈயக்குண்டு சக்கரமும்
வாங்குநல்ல ஆயுதமும் வளைதடி சக்கரமும்
கத்தித்துப் பாக்கிகளும் கத்திரியர் சேனைகளும்
அத்தனையுங் கொண்டு நிறைத்தார் படுகுழியை
படுகுழிமே லாதனங்கள் செப்பனிட்டா ரிந்திரற்கு
வச்சிர மிழைத்து முகப்புக்குக் கல்லிழைத்து
முத்துமுடி யாதனங்கள் செப்பனிட்டா ரிந்திரற்கு
ஆதனங்கள் சோடித்து ஆச்சுதென்று தெண்டனிட்டார்
நாகக் கொடிவேந்தன் கேட்டு மனமகிழ்ந்து
நிறைந்த கொலுமுகத்தில் இருந்தான் திரியோதிரன்
இப்படி யாக இவனிருக்கும் வேளையிலே
போரஞ்சா மன்னன் புலந்திர ராசாவும்
மற்றோர் படிகடந்தான் மன்னவன் படியுயர்ந்தான்
மற்றோர் படிகடந்து வாறானே மன்னவனும்
நின்றால் நிலாவெரிக்கும் நீலக்கால் மண்டபமும்
பார்த்தால் நிலாவெரிக்கும் பவளநல்ல கோபுரமும்
முத்தாலே கால்நிறுத்தி முழுதிலுஞ் செப்பனிட்டு
பளிங்குமா மண்டபங்கள் பவளத்தால் செப்பனிட்டு
எங்கும் நிலாவெறிக்கும் எத்திசையும் நீர்தெளித்து
கண்கொள்ளாச் சேர்வையுடன் இருக்குமா மண்டபந்தான்
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்பார்த்து
யாரது யாரது என்று னலேதாரன்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரையரெல்லாம்
தாதைக்குத் தாதை தைலாட்டான் மண்டபங்காண்
என்று மவருரைக்க இந்திரருந் தான்கேட்டு

## புலந்திரன் தைலாட்டானைத் தொழுகிறது.

ஆனைவிட்டுக் கீழிறங்கி யானந்த வாழ்மார்பன்
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்

பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
தாம முடியான் தைலாட்டான் முன்னேவந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
தெண்டனிட்ட மன்னவனைக் கண்டுமே தைலாட்டான்
நீ-ஆர்கா ணும் மன்னவனே அறிய வுரைத்திடென்றான்
கண்ணில்லான் என்தனுக்குக் காண வுரையுமென்றான்
விழியில்லான் எந்தனுக்கு விளங்க வுரையுமென்றான்

## பொன்னுமலை நாட்டான் சொல்வது.

பொன்னுமலை நாடாளும் அண்ணவு மேதுசொல்வார்
மதுரை யறுகாதம் வாழ்மதுரை முக்காதம்
பொய்கை யறுகாதம் பூமதுரை முக்காதம்
ஐம்பத் தறுகாதம் ஆண்டிருந்தார் பாண்டியர்கள்
மைந்தனு மில்லாதே மலைமேற் றவமிருந்தார்
மாளுகிறோ மென்று மலைமேற்றவமிருந்தார்
மாளாதீ ரென்று மலரி லவதரித்தாள்
ஏழு பிராயத்திலே யெதிர்த்துவந்த நீன்முகனை
நீன்முகனைக் கொன்று நீலிபட்ட மாண்டவர்காண்
மன்னன் விசையன் மடலூர்ந்த மாதேவி
காளை விசையன் கட்டழகன் மாதேவி
மதுரைப் பதியாளும் வையை வளநாட்டான்
வையைவள நாட்டாள் வளநாடி யல்லியரும்
அல்லி பயந்தெடுத்த அழகு புலந்திரனார்
காண்டா வனமெரித்த காளையுட புத்திரனார்
என்று மவனுரைக்க விழியில்லான் தான்கேட்டு

## தைலாட்டா னுரைப்பது.

ஐயா புலந்திரரே அழகுள்ள கண்மணியே
ஐவர்க்கும் நூற்றுவர்க்கும் அழகுள்ள கண்மணியே

எங்கள் குலம்விளங்க வந்துதித்த ரத்தினமே
ஐயா வருக அழகுள்ள கண்மணியே
என்று மவருரைக்க யிந்திரனுந் தான்பார்த்து
பாட்டன் திருவடியைப் பணிந்தானே பாண்டியனும்
காண்கிறே னென்றுசொல்லிக் கால்மேல் முடிசாய்த்தான்
கண்ணில்லான் தான்பார்த்துக் கடுகெனவே வாழ்த்தலுற்றுன்
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திரிப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல விளங்க அரசாள்வீர்
என்னைப் பெறுவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டஞ் சூட்டிடுவீர்
சினத்தார்கள் பூமுடியைச் செண்டாட்ட மாட்டிடுவீர்
பகைத்தார்கள் பூமுடியைப் பருந்தாட்ட மாட்டிடுவீர்
மாற்ருன் படைநடுவில் மன்னர்களை வென்றிடுவீர்
அத்தி புரமாள ஆண்பிள்ளை பெற்றிடுவீர்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்கா ணென்று மனமார வாழ்த்திஞர்
வாழ்ந்திடுவீ ரென்று மனங்குளிர வாழ்த்திஞர்
வாயார வாழ்த்தியபின் விழியில்லான் தான்பார்த்து
எங்கிருந்தா யிந்திரரே யென்றுமவன் வாருனே
அங்கு மொருதூணை அடைவாகக் காண்பித்து
மற்றுமொரு தூணில் மறைந்தாரே யிந்திரரும்

## குருடன் தூணைக்கட்டி நொரித்தல்.

கண்ணில்லான் தானெழுந்து காவலனுந் தான்பார்த்து
புலந்திரனைக் கட்டி யணைப்பதுபோல் புண்ணியனும்
தூணைக்கட்டித் தான்பிடித்தான் துன்னீலக் கண்ணனும்

அப்பா மகனேயென்று யணைத்தானே கற்றூணை
அணைத்துப் பிடித்து அழுத்தி நெரித்தானே
இவன்-கட்டி நெரித்ததினால் கற்றூணும் நெரித்ததுகாண்
சேர்த்துப் பிடித்ததினா லற்றது கற்றூணும்
கற்றூணு மிற்றுக் கலங்கிறது மண்டபங்கள்
நாடு கலங்கி நகருகள் தத்தளித்துப்
பூமி கலங்கிப் புழுதி பறக்கிறது
அண்டாண்டந் தானதிர ஆகாய மிற்றுவிழ
கண்டகண்ட மன்னரெல்லாம் கைகள் நடுங்கலுற்றார்
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்பார்த்து
தாதைக்குத் தாதை தைலாட்டா னேதுசொல்வான்
பாட்டன் முகம்நோக்கி பாண்டியனு மேதுசொல்வான்
என்னையா நீர்கேளும் என்னுடைய நல்வார்த்தை
ஆணழகர் பஞ்சவரை ஐவரையுந் தானழைத்து
வெற்றி மதயானை மைந்தருக்கு எண்ணெயிட்டு
முழுகுங் குளந்தன்னில் முழுதுமே வாசிநட்டு
குளிக்குந் துறைதனிலே கொண்டமட்டும் நட்டீரே
அத்தாலுந் தப்பி பிழைத்தார்க ளாணழகர்
மாயனுட புண்ணியத்தால் மன்னர் பிழைத்தார்கள்
அன்ன மிடவழைத்து அன்னத்தில் நஞ்சையிட்டீர்
மதகரியான் வீமராசன் வாரியல்லோ வுண்டானே
உண்டு மடிந்தானே உத்தமனார் வீரியனும்
மாயரொரு சந்நியாசி வேஷ மெடுத்துமல்லோ
மருந்துப்பை தோளில்வைத்து மன்னவரை யெழுப்பிவிட
அத்தாலுந் தப்பிப் பிழைத்தார்க ளாணழகர்
மாயனுட புண்ணியத்தால் மன்னர் பிழைத்தார்கள்
ஆயருட புண்ணியத்தால் ஐவர் பிழைத்தார்கள்
ஐவரையுந் தானழைத்து அம்பலங்க ளேற்றிவைத்து
மாயத்தால் சூதாடி மண்ணிழக்க மண்பறித்து
மாதைத் துகிலுரிந்து மன்னவரைக் காடோட்டி
கோதைத் துகிலுரிந்து கொற்றவரைக் காடோட்டி

பருக்கல் உறுத்தப் பனிவந் தலைமோத
ஓடும் பருக்கையும் உள்ளங்கால் தானுறுத்த
கவிழ்ந்த மரத்தடியில் கண்பள்ளி கொண்டிருந்தார்
ஐவ ருயிர்பறிக்க புண்ணியரே மன்னவரே
பஞ்சவர்கள் மாள நினைத்தீர்கள் பாவிகளே
அப்படிக்கே என்னை நெரிக்க நினைந்தீரே
நீர்-கண்ணில்லா ரானதினால் கலியுகத்தில் வாசம்பண்ணீர்
விழியில்லா ராகையினால் இருந்தீரோ விண்ணுலகில்

## மறுபடியும் புலந்திரன் சொல்வது.

உன்தனது புத்திரர்கள் நூற்றொருவ ரல்லாது
நூற்றொருவ ரல்லாது வேற்றொருவ ராகாதோ
எல்லாரை யுங்கொன்று ஆளணுமோ ராச்சியத்தை
என்று மவனுரைத்து எழுந்திருந்தா னிந்திரனும்
படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பம் தட்டி முதுகின்மேல் கையைவைத்து
கைத்தலத்தைத் தட்டிக் கறுத்தானை யேறினான்
அம்மானுந் தானும் அழகானை ஏறினான்
மாமாவுந் தானும் மதயானை யேறினார்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனஞ்சென் றேறினார்
மற்றோர் படிகடந்து வாறானே மன்னவனும்

## புலந்திரன் திரியோதிரன் சிம்மாதனம் வருவது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்கொலுவில்
அம்பலத்துச் சேர்வைகளும் அழகுள்ள மன்னர்களும்
அம்பலத்து வாசலிலே அனைவோரும் வீற்றிருந்தார்
தேசத்தை யாளுந் திரியோ திரனாரும்
செண்டாடு மன்னன் திரியோ திரனழகும்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் ராசர்களும்
பாட்டனார் வீஷ்டுமரும் பாரிய துரோணரும்
சிற்றப்பா விதுரனுஞ் சீருள்ள காங்கயனும்

காஞ்சிநா டாளுங் கர்ண சிகாமணியும்
தங்கை மணவாளன் தறுதலையான் வீரியனும்
அம்மான் சகுனி யவன்தோழ னனவனும்
ஈட்டிபிடி மன்னர் யிருபுறமுஞ் சூழ்ந்துநிற்க
கத்திபிடி மன்னவர்கள் கத்திரியர் சூழ்ந்துநிற்க
முத்து முடிதரித்த முடிமன்ன ரங்கிருக்க
ரத்தின முடிதரித்த ராசாக்க ளங்கிருந்தார்
மகுட முடிதரித்த மந்திரிக ளங்கிருந்தார்
இவரைச்சுற்றி சூழ்ந்திருப்பார் அக்ரோணி சேனைகளும்
வெளிப்புறத்தில் வீற்றிருப்பார் அனேககோடி மன்னவர்கள்
அந்தச் சமையத்தில் அழகு புலந்திரனர்
வந்துவெள்ளம் சேனையுடன் வந்துமெள்ள உள்நுழைந்தார்

## புலந்திரன் திரியோதிரன் சபையில் வந்தது.

ஆனைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
வாளுருவிக் கைபிடித்து வல்லயத்தைத் தோளிலிட்டு
கத்தி யுருவி நடந்தானே கட்டழகன்
போரஞ்சா மன்னன் புலந்திரனு முள்நுழைந்தான்
நிறைந்த கொலுநடுவே நித்திலங்கு பூமுடியான்
வந்துமங்கே நின்றானே மைந்தன் புலந்திரனும்
அங்கிருக்கு மன்னவர்கள் அரையர் துரையரெல்லாம்
எழுந்துவந்து கைகொடுத்தா ரிந்திர னனவற்கு
போரஞ்சா மன்னன் புலந்திர ராசாவும்
பூவும் புதுமலரும் பொன்னறுகும் அட்சதையும்
கோணுத மாதவத்துக் குருக்களுக்கு முன்னேவந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து மூவிருகால் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டு
தெண்டனிட்ட மன்னன் திரும்பி யெழுந்திருந்து
மோதிர மின்ன முடிமேலே கைதொழுதான்

கோணுத மாதவத்துக் குருக்க ளவர்பார்த்து
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்துமவர் மார்போடே தானணைத்து
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திரிப்பீர்
நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போலக் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல விளங்க அரசாள்வீர்
போருக்குப் போவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
மாதர்களை மாலையிட்டு மைந்தரைப் பெற்றிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளைப் பெற்றிடுவீர்
பெண்களை மாலையிட்டுப் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்
பெற்றிடுவீர் பெற்றிடுவீர் பிள்ளை பதினாறும்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல் சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்கா ணென்று மனங்குளிர வாழ்த்தினர்
அட்சதையும் பூவுமல்லோ அள்ளியவர் கைகொடுத்தார்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
ஒருகையால் வாங்காம லிருகையால் தான்வாங்கி
இருகையால் தாம்வாங்கி யிந்திரருந் தான்தரித்தார்
பாட்டனர் வீஷ்டுமரைப் பாதம் பணியலுற்றார்
அட்சதையும் பூவுமிட்டு அடிவணங்கித் தெண்டனிட்டார்
வந்து பணிந்தவரைக் கண்டு மனமகிழ்ந்து
வாயார வாழ்த்தி மாரோ டறவணைத்து
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்து
உச்சி முகந்துபிள்ளை உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கம் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
கைத்தலத்தைத் தானெடுத்துக் கண்ணிலே ஒற்றிக்கொண்டு
அர்ச்சுனனர் புத்திரனை யாணு லழகுமன்னன்
வந்த கருமம் வகையேது சொல்லுமென்றார்

## புலந்திரன் சொல்லல்.

அப்போ புலந்திரரும் ஆணழக ரேதுசொல்வார்
ஐவ ரரையரும் ஆழி யுசந்தவரும்
பேர்பெற் றுடைய பெருமாளும் பாண்டவர்கள்
வேந்தர் பெருமாளும் வெளிமண்டபத்தில் வந்திருந்து
பேரப்பா ரப்பா பெரியப்பா தங்களுக்குத்
தூதுரைக்க வந்தேனென்று சொல்லி யவனுரைத்தான்
பாட்டனுர் வீஷ்டுமரும் கேட்டு மனமகிழ்ந்து
வந்த கருமம் முடியுங்காண் மன்னவனே
அந்த வுரைகேட்டு ஆணழகன் போய்நடந்தான்
சிற்றப்பா விதுரருக்குச் சீரடியில் தெண்டனிட்டான்
மலர்போட்டுத் தெண்டனிட்டான் மன்னவனுர் சீர்பாதம்

## விதுரர் வாழ்த்துவது.

வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
அப்படியே நல்லதென்று ஆணழகன் போய்நடந்து
காங்கையன் சீர்பாதம் கட்டழகன் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
ஆயிரம் பாண்டியர்க ளையன்மார் தாஞ்சுகமோ
வளநாடி யல்லியரும் மாது சுகமோதான்
போரஞ்சா மன்னர் புலந்திரனு ரேதுசொல்வார்
ஆண்டவனுர் புண்ணியத்தால் அனைவோருந் தான்சுகமே
என்று மவருரைத்து இருக்கின்ற வேளையிலே

## திரியோதிரன் கர்ணரை பார்த்துரைப்பது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து
கர்ணர் முகம்நோக்கிக் கட்டழக னேதுசொல்வான்
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் சீர்முகமும்
காஞ்சிநா டாளுங் கர்ணரே உம்முகமும்

இருமுகமும் ஒருமுகமா யிருக்குதே உந்தமக்கு
மதுரைக் கொருபயணம் மன்னவரே போனீரோ
மாதரசி அல்லியவள் முழுகிக் குளிக்கையிலே
முழுகிக் குளிக்கையிலே முகத்தில் விழித்தீரோ
முகத்தில் விழித்தாளோ வயிற்றி லடைந்தானோ
உன்தன் முகம்பார்த்துப் பெற்றாளோ புத்திரனை
போரஞ்சா மன்னன் புலந்திரனைப் பெற்றாளோ
என்று மவனுரைத்து இருந்தான் சபைநடுவே

## கர்ணர் திரியோதிரனைப் பார்த்துக் கோபித்தல்.

காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்பார்த்து
கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
குன்றிபோல் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
சூரிய மண்டலத்தைக் கிட்டச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலயமாய்
தோழன் முகம்பார்த்துச் சொல்வா ரொருவார்த்தை
ஆடம் பலத்தே அவ்வையர் சபைநடுவே
இப்பெரிய ராச ரிருக்கும் சபைநடுவே
இராசாக்கள் முன்பாக நாடாத வார்த்தைசொன்னீர்
மன்னவர்கள் முன்பாக மதியாத வார்த்தைசொன்னீர்
அறியாத நாளையிலே அடியேனைக் கொண்டுவந்து
தெரியாத நாளையிலே தேடி யெனையெடுத்துப்
பாலமிர்தந் தானூட்டி வளர்த்தீ ரழகாக
நெய்யமிர்த மூட்டி வளர்த்தீ ரழகாக
மூன்று பிராயத்திலே முத்து முடிதரித்தீர்
நாலு வயதுதனில் நாகக் கணைகொடுத்தீர்
ஐந்து வயதுதனில் அப்பியாச வித்தைபண்ணீர்
ஆறு வயதுதனில் ஆனைமே லேற்றிவைத்தீர்
எட்டாம் வயதுதனில் எனக்குள்ள வித்தையவை
ஒன்பதுங் கற்றுக் கொத்தீரே உத்தமரே

பத்தாம் வயதுதனில் பாருலக மாளவைத்தீர்
அன்றுமுதி லின்றொருநாள் அடாதபழி வந்ததில்லை
என்னைக் கடுமுகமாய் உரைத்ததில்லை உத்தமரே
இன்று பழிபாவம் என்னமோ நானறியேன்
என்று மனஞ்சலித்து இருந்தா ரொருபுறமாய்
மன்னர் மனஞ்சலித்து மர்மமாய் வீற்றிருந்தார்

## புலந்திரன் திரியோதிரன் முன்பாக வந்தது.

போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
மன்னர் சபைதாண்டித் திரும்பினா ரிந்தமுகம்
தேசத்தை யாளுந் திரியோதிரன் முன்னேவந்தான்
ஆதனத்தைத் தட்டி அதின்பேரில் வீற்றிரென்றான்
காஞ்சிநா டாளுங் கர்ணர் பெருமானும்
கண்சாடை காட்டினார் காவலர்ப்பூ வீரியரும்
அப்பெரிய சாடை யறிந்தந்த இந்திரனார்
சிம்மா சனத்தருகே திரும்பினா ரிந்திரரும்
உற்றுற்றுப் பார்த்தாரே ஒளிபறந்த கண்ணாலே
அப்பெரிய ஆதனத்தை ஆணழக னேதுசெய்தான்

## புலந்திரன் தனக்கிட்ட சிம்மாதனத்தை எற்றி எறிகிறது.

வாளாலே ஏந்தி எறிந்தானே வல்லாயன்
கத்தியா லெற்றி எறிந்தானே வல்லாயன்
எற்றி எறிந்தவுடன் கத்தி வெளியாச்சு
கத்தி வெளியாச்சு கத்திரியர் வந்துவிட்டார்
ஈட்டி வெளியாக்கி இடிமன்னர் வந்துவிட்டார்
செட்டிகளு மல்லர்களுஞ் சேர வெளியானார்
அத்தண்ட பேரையெல்லாம் ஆணழகன் தான்பார்த்து
என்த னுயிர்வாங்க இருந்தீர் குழிதனிலே
வல்லுயிர் வாங்கவென்று வந்தீரோ மன்னர்களே
உங்களது எண்ணம் உத்தமரே முடியாது

மன்னவனு ரெண்ணம் மாளாது மன்னவரே
சுற்றி யெறிந்திடுவேன் சற்றுமனங் கோணுமல்
ஏமன் பதிதனிலே இப்போ தனுப்பிடுவேன்
நமனு ரிடபதிக்கு நானே அனுப்பிடுவேன்
செத்து மடிந்திடுவீர் சிவலோகஞ் சேர்ந்திடுவீர்
மாண்டு மடிந்திடுவீர் வைகுண்டஞ் சேர்ந்திடுவீர்
என்று மவருரைத்து இந்திர ராசாவும்

## புலந்திரன் சொக்கரை நினைத்துச் சிம்மாதனங் கேட்டது.

சோலை மலையுடைய சொக்கரைத் தானினைந்து
ஆனை மலையுடைய அம்மனைத் தானினைந்து
ஏழுலக மாளுகிற பெருமாளைத் தானினைந்து
சோலை மலையுடைய சொக்கரே என்குருவே
அன்றொருநாள் வேளையிலே ஆதி கைலைவிட்டு
அல்லிமலர் நாயகியைக் காத்தீரே கர்த்தாவே
ஆச்சியைக் காத்ததுபோல் அடியேனைக் காருமையா
மாதாவைக் காத்ததுபோல் மைந்தனைக் காருமையா
மாற்றான்தன் வாசலிலே மண்டபஞ் சென்றேன்காண்
எதிராளி வாசலிலே ஆதனஞ் சென்றேன்காண்
வண்ணத்துகி லாசனங்கள் வரவனுப்ப வேண்டுமையா
என்று மிகத்தொழுதா னிந்திர ராசாவும்
புலந்திரனர் தோத்தரிக்கப் புண்ணியருந் தாமறிந்து

## சொக்கர் அம்மனுக் குரைப்பது.

சொக்கர் மனமகிழ்ந்து தோகையர்க் கேதுசொல்வார்
அம்மன் முகநோக்கி ஆதிசிவ னேதுசொல்வார்
போரஞ்சா மன்னன் புலந்திர வீரியனும்
தூதுரைக்கப் போனனே சுந்தரப் பூமுடியான்
எதிராளி வாசலிலே சென்றானே பூமுடியான்
ஆதனங்க ளில்லாமல் ஆணழகர் நின்றுவிட்டார்

அங்கயற்கண் சுந்தரியே ஆதன மனுப்புமென்றார்
அங்கயற்கண் மீனாட்சி அம்மை மனமகிழ்ந்து
வண்ணலட்சம் பூதங்களை வரவழைத்தா ளக்ஷணமே
மாணிக்கச் சிம்மாதனம் மன்னவர்க்குச் செப்பனிட்டு
தங்கத்தால் சிம்மாதனம் மன்னவர்க்குச் செப்பனிட்டுப்
பூதங்கள் கைகொடுத்துப் போவென்று ளத்திபுரம்

## பூதங்கள் சிம்மாதன மெடுத்துக்கொண்டு வருகிறது.

அத்தண்ட பூதங்களும் அம்ம னுரைகேட்டு
சுவாமி திருமுடிக்குச் சாஷ்டாங்க தெண்டனிட்டு
அம்மன் திருவடிக்கு அடிவணங்கித் தெண்டனிட்டு
சிம்மா சனமெடுத்துத் திரும்புற பூதமெல்லாம்
ஆகாய மார்க்கத்திலே அத்தண்ட பூதமெல்லாம்
மேலே யெழும்பி விசய ரிடத்துக்கு
காற்றோடு மேகங் கலந்துவரும் பாவனைபோல்
ஆற்றிலே வெள்ளம் அடித்து வருவதுபோல்
காற்றாய்ப் பறந்து கடுக வழிநடந்து
போரஞ்சா மன்னர் புலந்திரனார் முன்னேவந்து
இட்டன ஆதனங்கள் ஏழுலகந் தத்தளிக்க
போட்டன ஆதனங்கள் பூமி கிடுகிடென்ன
அண்டரண்டந் தானதிர ஆசனங்கள் போட்டனவே

## புலந்திரன் மனக்களிப்புடன் சிம்மாசன மேறியது.

போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்பயந்து
சிம்மா சனந்தன்னைக் கண்டு மனமகிழ்ந்து
சோலை மலையுடைய சொக்கரைக் கைதொழுது
ஆனை மலையுடைய அம்மனைத் தெண்டனிட்டு
ஏழுலக மாளுகிற எம்பெருமா ளடிவணங்கி
அம்மனுக் கருளென்று ஆசனஞ்சென் றேறினான்
இட்டசிம் மாசனத்தி லேறியவன் வீற்றிருந்தான்

அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
திரியன் முகம்நோக்கி சொல்லுவா ரொருவார்த்தை
மைந்தர் புலந்திரனுர் வந்தாரே அத்திபுரம்
பிள்ளை புலந்திரனுர் வந்தாரே அத்திபுரம்
வந்த வகையறிந்து வார்த்தைகளை நீருரைத்து
சிந்தையி லுள்ளவெல்லாந் திறமாகத் தானுரைத்து
உரைக்கு உரைகொடுத்து உத்தமரே போகவிடும்
என்று மவருரைக்க ஏதுசொல்வான் திரியோதிரன்
காண்டா வனமெரித்த காளையுட புத்திரனே
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தருட சீர்மகனே
ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவும்
பகையாளி பேரில் படையெடுத்து வந்தானே
முன்னையும் பூசை முதல்பூசை தன்னதென்றுன்
முத்துமுடி பாண்டியனும் பட்டு விழுந்தானே
ஆளப் பிறந்த அபிமன்னன் தேவியவள்
விலாட புரத்தரசன் புத்திரியா ளுத்தரையும்
உன்-தம்பியுட தேவி தார்குழலாள் மாதருக்கு
தாலி கழற்றினையோ சன்னல்பின்னல் வாங்கினையோ
ஆரங் கழற்றினையோ ஆபரணம் வாங்கினையோ
கொப்பு கழற்றினையோ கோர்வைமணி வாங்கினையோ
வளையல் கழற்றினையோ வாங்கினையோ பூஷணங்கள்
ஏது கருமம் எனக்கறியச் சொல்லுமென்றுன்
ஒன்று மொளிபாதே உரையுமென்று னென்தனக்குப்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
கதிக்குக் கதிமண்டி கண்கள் பொறிபறந்து
நீலவிழிக் கண்கள் நெருப்புத் தணலாகி
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
முத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
கோபித்துக் கண்சிவந்து கோப மதிகரித்து
குன்றிபோல் கண்சிவந்து கோப மதிகரித்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனலண்டி

சூரிய மண்டலத்தைக் கிட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை அடுத்துச் சுவாலயமாய்
வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி
தேசத்தை யாளுந் திரியோதிர ராசருக்கு

## புலந்திரன் திரியோதிரனுக்குத் தூதுரைப்பது.

போரஞ்சா மன்னர் புலந்திரரு மேதுசொல்வார்
பதினாறு நாளையிலே படைமன்னர் சண்டையிலே
பாரத மென்று படைபொருதும் வேளையிலே
ஆளப் பிறந்த அபிமன்ன ராசாவும்
முன்னேயும் பூசை முதல்பூசை தன்னதென்று
முத்துமுடி பாண்டியனும் பட்டு விழுந்தானே
ஆளப் பிறந்த அபிமன்னன் தேவியர்க்கு
தாலி கழற்றினேம் சன்னல்பின்னல் வாங்கினேம்
ஆரங் கழற்றினேம் தாவடங்கள் வாங்கினேம்
கொப்பு கழற்றினேம் கோர்வைமணி வாங்கினேம்
வளையல் கழற்றினேம் வார்கொப்பு வாங்கினேம்
மாலை கழற்றினேம் மண்டப மேற்றிவைத்தோம்
அவளைச்சுற்றிப் பெண்டுகள் அணியிழைமார் காத்திருந்தார்
வைத்துச் சிறைகாக்க மண்டலத்தில் கோடியுண்டு
எங்கள்-தேனின் முடியாளுஞ் சிறைகாத் திருப்பாள்காண்
நாளை-பதினைந்தாம் நாளையிலே படைபொருதுஞ் சண்டையிலே
பாரத மென்று படைபொருதும் வேளையிலே
ஆடி யலக்கும் அமர்செய் சமர்க்களத்தில்
இரத்தாறு ஓடுகிற வேளையிலே யுத்தமனும்
இரத்தக் களரியிலே ராசாக்கள் கூட்டத்திலே
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தன்கை யம்பாலே
வில்லாளி பார்த்தன் விஜயன்கை யம்பாலே
உன்-தங்கை மணவாளன் தறுதலையன் பட்டாலே
யுத்த களத்திலே வெட்டி யறுப்பார்கள்

உன்-தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடியை
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் தங்களுக்குத்
தோகை மயிலனையாள் தூர்ச்சடையாள் நாயகிக்குத்
தாலி கழற்றாதே சன்னல்பின்னல் வாங்காதே
பாரப் பதக்கமும் பருத்தமுத்துத் தாவடமும்
தாலிப் பதக்கமுஞ் சன்னல்பின்னல் தாவடமும்
கோர்வைப் பதக்கமுங் குடைமுத்துத் தாவடமும்
கொப்புங் கழற்றாதே கோர்வைமணி வாங்காதே
வளையல் கழற்றாதே வாங்காதே பூஷணங்கள்
மாலை முடியாளை மஞ்சள் குளிக்கவைத்து
வாரிய கூந்தலது வண்ணவிதக் கொண்டையிட்டு
சீவி மயிர்முடித்துச் சிமிழ்போலக் கொண்டையிட்டு
கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டுமிட்டு
அவள்-நீலவிழிக் கண்களுக்கு நிறக்கவே மைதீட்டி
கருங்குருவி வாலதுபோல் கண்ணுக்கு மையெழுதி
மங்கைநல்லாள் பூமுடிக்கு மல்லிகைப்பூ மாலைசூட்டி
கொப்பு மிகத்திருத்திக் கோர்வை மிகத்திருத்தி
வளையல் திருத்தியல்லோ மற்றும் பணிதிருத்திப்
பச்சை வடந்திருத்திப் பாவாடை யுள்திருத்திக்
கொப்புவடம் பச்சைவடம் உத்தமிக்கு மிகசாத்தி
அத்தர் கதம்பப்பொடி அள்ளியே மேல்பூசி
சாதிக்கா யேலந் தனிமணமுங் கொண்டுவந்து
வாடா யிலைச்சுருளும் வண்ணத் துவர்ப்பாக்கும்
கோர்வை யிலைச்சுருளும் வண்ணத் துவர்ப்பாக்கும்
ஏலம் லவுங்கம் இன்பக் களிப்பாக்கும்
சாதிப் பெருங்கடலில் சங்குசுட்ட சுண்ணாம்பும்
சுருளைச் சுருள்மடித்துச் சுண்ணாம்பைச் சூடசமிட்டு
சுற்றிவிட்ட பொன்மடலுக் குள்ளே சுருளயர்த்தி
மாத ரிளங்கொடிக்கு மங்கையர்க்கு நீர்கொடுத்து
மற்றுமுள்ள மன்னவரைச் சுற்றிலுங் காவல்வைத்து
நீங்கள்-நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் ராசர்களும்

தூங்க-வையுந் தெருத்திண்ணையில் வாங்குமென்றான் வட்டக்காசு
வட்டக்காசு வாங்கியல்லோ வட்டிக்கு மாறுமென்றான்
என்றுவிட்டா னொருதூது மண்ணதிர விண்ணதிர
மண்ணதிர விண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
விண்ணதிர மண்குலுங்க வேந்தர் திடுக்கிடவே
தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
மன்னன் மனஞ்சலித்து மர்மமாய்த் தானிருந்தான்

## புலந்திரன் மறுபடியுந் தூதுரைப்பது.

போரஞ்சா மன்னன் புலந்திர ராசாவும்
மற்று மொருதூது மன்னவனுங் கேட்கலுற்றான்
ஆணழகர் பஞ்சவரை ஐவரையுந் தானழைத்து
உருவ மதயானை உத்தமர்க ளைவரையும்
மாயத்தில் சூதாடி மண்பறிக்க மண்பறித்து
மாதைத் துகிலுரிந்து மன்னவரைக் காடோட்டி
கோதைத் துகிலுரிந்து கொற்றவரைக் காடேற்றி
பருக்கல் உறுத்தப் பனிவந் தலைமோத
ஓடும் பருக்கலும் உள்ளங்கால் தானுறுத்த
கவிந்த மரத்தடியில் கண்பள்ளி கொண்டிருந்தார்
இன்னமின்னங் காடுறைய மாட்டார்கள் பஞ்சவர்கள்
அரக்குமா மாளிகையில் ஐவரையுஞ் சுட்டெரித்தீர்
அத்தாலுந் தப்பிப் பிழைத்தார்க ளாணழகர்
மாயருட புண்ணியத்தால் மன்னர் பிழைத்தார்கள்
நடக்கும் வழிதனிலே நட்டுவைத்தாய் வாளதனை
குளிக்கும் குளந்தனிலே கொடிஊசி நட்டுவைத்தாய்
முழுகும் குளந்தனிலே முட்களை நட்டுவைத்தாய்
அத்தாலுந் தப்பிப் பிழைத்தார்க ளாணழகர்
எண்ணையிட்டுக் கொள்ளுமென்று மல்லர்களைத் தூதுவிட்டாய்
கொல்லவந்த மல்லர்கள் கூண்டோடே தான்மடிந்தார்
சோற்றிலே நஞ்சையிட்டுச் சூஸ்திரமாய்க் கொல்லவந்தாய்
தண்ணீரில் நஞ்சையிட்டாய்த் தாம முடியார்க்கு

உண்கிற சோற்றிலே வசநாபி தான்கலந்தாய்
வசநாபி யென்றுசொல்லி மதித்துஅதைப் பாராமல்
வெற்றி மதயானை வீமன் மதகரியான்
அத்தனையுங் கூட்டி அமுது புசித்தானே
அலைகொண்ட தன்மயக்கந் தார்வேந்தர் தான்கொண்டார்
வெற்றி மதயானை வீமரவர் மாண்டாரே
மாயனொரு சந்நியாசி வேஷ மதுவெடுத்து
மருந்துப்பை தோளில்வைத்து வந்தாரே மாயவரும்
வெற்றி மதயானை வீமரை யெழுப்பிவிட்டார்
அத்தா லுந் தப்பிப் பிழைத்தார்க ளைவர்களும்
மாய ரருளாலே மன்னர் பிழைத்தார்கள்
ஆய ரருளாலே ஐவர்களுந் தாம்பிழைத்தார்
படுகுழி யாதனங்கள் பஞ்சவர்க்குச் செப்பனிட்டு
ஆழக் குழிதோண்டி ஆகாயங் கோட்டைகட்டி
மேலே குழிதோண்டி விஷநாகக் கோட்டைகட்டி
எட்டுத் தலைவாசல் படைமன்ன ருள்ளேவைத்து
பத்துத் தலைவாசல் படைமன்ன ருள்ளேவைத்து
நண்டுகளுந் தேளுகளுந் நல்லவிஷப் பாம்புகளுந்
பாம்புகளுந் தேளுகளும் படுகுழியில் ரப்பிவைத்து
ஐவரும் விற்றிருக்க ஆசனங்கள் செப்பனிட்டாய்
பொய்யா சனங்களிட்டாய் புண்ணியர்கள் வீற்றிருக்க
அத்தா லுந் தப்பிப் பிழைத்தாரே ஐவர்களும்
மாய ரருளாலே மன்னர் பிழைத்தார்கள்
ஆய ரருளாலே ஐவர் பிழைத்தார்கள்
இன்னமின்னங் காடுறைய மாட்டார்கள் மன்னவனே

## புலந்திரன் கோபித்துத் திரும்பியது.

நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியும்
தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடியும்
சாமத் துரோகி சகுனியுட பூமுடியும்
தோரா வடிவழகி துரௌபதையாள் நாயகியைத்

தொட்டுத் துகிலுரிந்த துஷ்டோதிரன் பூமுடியும்
பாவை யிளங்கொடியாள் பாஞ்சாலன் சீர்மகளை
பற்றித் துகிலுரிந்த படுபாவி பூமுடியும்
நாளை-பதினெட்டா நாளையிலே படைமன்னர் கையாலே
பாரதம் என்று படைபொருதும் வேளையிலே
ஆடிப் பறக்கும் அமர்செய் சமர்க்களத்தில்
வீமர்கை தண்டாலும் விசையர்கை யம்பாலும்
பஞ்சவர்க ளம்பாலே பட்டு மடிவானே
பங்குவிட்ட நாளும் பகுந்தரசு தாருமென்றான்
பாதித் திருநாடும் பகுந்தரசு தாருமென்றான்
விட்டா னொருதூது மண்ணதிர விண்குலுங்க
மாற்றான் திடுக்கிடவே மறுமன்னர் சத்தமிட

## திரியோதிரன் புலந்திரனைப் பார்த்துரைப்பது.

தேசத்தை யாளுந் திரியோ திரன்கேட்டு
கதித்துக் கதிமண்டி கண்க ளெரிபறந்து
நீலவிழிக் கண்கள் நெருப்புத் தணலாகி
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குன்றுபோல் கண்சிவந்து கோப மதிகரித்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
இந்திரரைப் பார்த்து எடுத்துரைப்பான் திரியோதிரன்
மன்ன னுயிரிழந்து மாண்டுதான் போனாலும்
செத்து மடிந்தாலும் சிவலோகஞ் சேர்ந்தாலும்
மாண்டு மடிந்தாலும் வைகுந்தஞ் சேர்ந்தாலும்
எள்ளளவு சீவ னிருக்கிற காலமட்டும்
கடுகளவு சீவ னிருக்கிற காலமட்டும்
பகையாளி பஞ்சவர்க்குப் பாதிநா டில்லையென்றான்
பங்கிட்ட நாடும் பகுந்தரசு மில்லையென்றான்
பஞ்சவர்கள் சீமை பகுந்தரசு மில்லையென்றான்

## புலந்திரன் மறுபடியுங் கோபித்துரைப்பது

போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்கேட்டு
சிற்றுடம்பு வேர்த்துச் சிறுகண் சிவப்பேறி

வேர்த்து விரிவிரித்து மீசை சுருண்டேறி
போரஞ்சா மன்னர் புலந்திரரு மேதுசொல்வார்
தர்மருக் கிப்போ சனியன் தொலைந்தது
எங்கள்-வீமருக் கிப்போ விடுதி யொழிந்தது
ஐவருக்கு மிப்போ தடுத்தது நற்காலம்
மாது மயிர்முடிக்க நாளாச்சு மன்னவரே
கோதிக் குழல்முடிக்க நாளாச்சு கொற்றவரே
பத்தினியாள் சாபம் பலித்தது இவர்களுக்கு
உத்தமியாள் சாபம் உடனே பலித்தது
பார்த்தன்கை யம்பாலே படுவது நிச்சயந்தான்
எழில்விசைய னம்பாலே படுவார்கள் படுவார்கள்
வேசி மகனுற்கு விடுபடக் காலமில்லை
தாசி மகனுற்கு தானிருக்கக் காலமில்லை
உடன்பெற்ற பிள்ளையெல்லாம் கொத்தோடே மாண்டிடுவார்
அந்தகனுர் பெற்றபிள்ளை அடங்கலு மாண்டிடுவார்
இப்படிக்குச் சொல்லி யெடுத்துரைத்தா னிந்திரனும்
விட்டா னொருபாணம் மண்ணதிர விண்குலுங்க
மாற்றுன் திடுக்கிடவே மறுமன்னர் கொக்கரிக்க
நாகக் கொடிவேந்தன் கேட்டா னவ்வார்த்தை
இந்திரனுர் சொன்னதெல்லாம் எரிநாகன் தான்கேட்டு

## திரியோதிரன் புலந்திரனுக் குரைப்பது.

கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
பத்திய நாகம் பவளம்போல் கண்சிவந்து
குன்றிபோல் கண்சிவந்து கோப மதிகரித்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனலண்டி
சூரிய மண்டலத்தை எட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை யடுத்துச் சுவாலயமாய்
போரஞ்சா மன்னன் புலந்திரற் கேதுசொல்வான்
வேசியென்றுந் தாசியென்றும் விஸ்தாரஞ் சொல்லுகிறுன்
தாசிபெற்ற பிள்ளையென்றும் தளர்ச்சியாய்ச் சொல்லுகிறுன்
இந்தச் சபைநடுவே யெடுத்தெறிந்து பேசுகிறுன்

தாசிபிள்ளை யென்றவனைத் தலையைப் பிளந்திடுவேன்
வேசிமக னென்றவனை வெட்டி யெறிந்திடுவேன்
உலகத்தில் வாழும்பெண்கள் ஒருவனுக்குக் கைகொடுப்பாள்
இன்னஞ்சில வேசியர்கள் இருவருக்குக் கைகொடுப்பார்
ஆரழகி துரௌபதைக்கு ஐந்துபேர் மாப்பிள்ளைமார்
ஐவருக்குங் கைகொடுப்பாள் அவள்தானே வேசியல்லோ
இப்படிக்குச் சொல்லிநின்றான் எரிநாகங் கொண்டவனும்
அங்கிருக்கு மன்னவர்கள் அரையர் துரைகளெல்லாம்
பாட்டனார் வீஷ்டுமரும் பாரிய துரோணருமே
சிற்றப்பா விதுரருந்தான் சீருள்ள காங்கெயரும்
காஞ்சிநா டாளுங் கருணர் பெருமாளும்
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மன்னர் மனஞ்சலித்து மர்மமாய்த் தானிருந்தார்

## விகர்ண னுரைப்பது.

வில்லில் பெரிய விகர்ன்ன னு மேதுரைப்பான்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர்க் கேயிளைஞன்
விகர்னப் பெருமாள் எடுத்துமிக வுரைப்பான்
அண்ணன் முகம்நோக்கி ஆணழக னேதுசொல்வான்
அண்ணாவே கேளும் அடியே னொருவார்த்தை
என்னண்ணா நீர்கேளும் இன்ன மொருவார்த்தை
பஞ்சவர்க ளைவரையும் பார்மன்னர் சபைநடுவே
மாதுநல்லாள் துரௌபதையை மன்னர் சபைநடுவே
துரௌபதையைக் கொண்டுவந்து துகிலு முரிந்தீரே
பாவை யழகியரைப் பாஞ்சாலன் சீர்மகளை
உரிந்த துகில்வளர்ந்த துத்தமியாள் நாயகிக்கு
அத்தா னுஞ் சாடை யறியாமற் போனீரே
பெண்ணை யுரிந்ததுகில் போராக் குவிந்தது
மாதை யுரிந்ததுகில் மலையாய் வளர்ந்தது
அத்தா னுஞ் சாடை யறியாமற் போனீர்கள்
பத்தினியா ளென்றுசொல்லிப் பாராமற் போனீர்கள்
அரண்மனைப் பெண்டுகளை அனைவரையுந் தானழைத்து

எடுத்து உடுங்களென்றீர் எத்திலங்கு பூமுடியீர்
அந்த விசேஷ மதுகேட்டு மங்கையர்கள்

## திரியோதிரன் பெண்டுகள் மானங்குலைந்தது.

அத்தண்ட சேலையெல்லாம் அவர்களெடுத்துடுத்தி
வர்ணவிதச் சேலையெல்லாம் மாதர்கள் தானுடுத்தி
அம்பலத்து வாசலிலே ஆரணங்கார் பெண்டுகளும்
மானங் குலைந்தார்கள் மதிகுலைந்து போனார்கள்
வெட்கங் குலைந்தார்கள் வெட்கி நடந்தார்கள்
பத்தினியாள் சாபம் பலித்ததே நம்பளுக்கு
உத்தமியாள் சாப முடனே பலித்ததல்லோ
அத்தாலுஞ் சாடை யறியாமற் போனீரே
பத்தினியா ளென்றுசொல்லிப் பாராமற் போனீரே
இப்பெரிய நாடும் எழில்பெரிய ஆதினமும்
அத்தி புரமும் அடங்கலும் நம்மதென்றான்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் தம்மோடு
எல்லை யுலகங்கள் இருந்தரசு ஆள்வோமென்று
எண்ணி யிருந்தீரே அண்ணுவே நீர்கேளும்
பதினெட்டா நாளையிலே படைமன்னர் சண்டையிலே
பாரத மென்று படைபொருதும் வேளையிலே
ஆடிப் பறக்கும் அமர்செய் சமர்க்களத்தில்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியை
வெற்றி மதயானை வீமரது தண்டாலே
பட்டு விழுந்தாலே படைமன்னர் சபைநடுவே
தோரா வடிவழகி துரௌபதை நாயகியாள்
உன்மேலே யேறி மயிரை முடிக்கவென்று
குடல்மாலை தானெடுத்துக் கொண்டைக் கயிறாக்கி
மார்பெலும்பைத் தானெடுத்து வண்ணவிதச் சீப்பாக்கி
மாருதிரந் தானெடுத்து மயிர்க்கூந்த லில்தடவி
சம்பங்கி யெண்ணையது போலே தடவியவள்
வாரி மயிர்முடிக்க நாளாச்சே மன்னவரே
கோதிக் குழல்முடிக்க நாளாச்சே கொற்றவரே

இன்னம் மனதில் வைராக்கியங் வேண்டாங்காண்
பங்குவிட்டு நாடும் பகுந்தரசு தந்துவிடும்
பாதி நகரமல்லோ பஞ்சவர்க்கு நீர்கொடுத்து
ஒத்துப் பிழையுமென்று னுத்தமனுர் வீரியனும்
கலந்து பிழையுமென்றுன் கட்டழகன் வீரியனும்

## திரியோதிரன் கோபித்து விகர்னருக் குரைப்பது.

இவன்சொன்ன வார்த்தையெல்லாம் பெரிநாகன் தான்கேட்டு
விகர்னனுட னுரைப்பதற்கு வேண்டு மனங்கொதித்து
தம்பி முகம்நோக்கித் தார்வேந்த னேதுசொல்வான்
தூதுரைக்க வந்தானே துன்னீலங் கண்ணனும்
வேசிபெற்ற பிள்ளை விடுபட்டு வந்தானே
தாசிபெற்ற பிள்ளையிவன் தனதுரைக்க வந்தானே
அவனுடனே நீகூடி அடுத்துப்போர் செய்தாலும்
நீங்கள்-ஒருமிக்கக் கூடியல்லோ யுத்தங்கள் செய்தாலும்
என்தன் முடிசிந்தி யிறந்துநான் போனுலும்
மகுடமுடி சிந்தி மாண்டு மடிந்தாலும்
மாண்டு மடிந்தாலும் வைகுண்டஞ் சேர்ந்தாலும்
செத்து மடிந்தாலுஞ் சிவலோகஞ் சேர்ந்தாலும்
பஞ்சவர்களைவருக்கும் பாதிநா டில்லையென்றுன்
பாதியே நாடும் பகுந்தரசு இல்லையென்றுன்
உத்தமர்களைவருக்கு மொன்றுங் கொடுப்பதில்லை
அவர்களா லானமட்டும் கண்டுவிடச் சொல்லுமென்றுன்
பார்த்தனு லானமட்டும் பார்த்துவிடச் சொல்லுமென்றுன்
வீமனு லானமட்டும் வீம்பு செலுத்துமென்றுன்
போரஞ்சா மன்னன் புலந்திரனு லானமட்டும்
புலந்திரனு லானமட்டும் போர்கொடுத்து வெல்லுமென்றுன்

## புலந்திரர் கோபித்துரைப்பது.

பொங்கி மனந்தளர்ந்து போரஞ்சாப் புத்திரனும்
அங்கிருக்கு மன்னர் அரையர் முகம் நோக்கி
தேசத்தை யாளுந் திரியோ திரன்தானும்

இப்படிக்குச் சொன்னமட்டும் இனிபொறுக்க மாட்டேனையா
வெற்றி மதயானை வீமர் சபதமது
மன்னன் பெருஞ்சபதம் மாளட்டு மென்றிருந்தேன்
இவனுக்குக் காலம் முடிந்தது மன்னர்களே
ஏம னுயரவந்து யிவனைவா வென்றழைக்க
நமனு ருயரவந்து நாடி யழைத்திருக்க
சிறைபட்ட இந்திரனுங் குறைவிட்டுத் தானழைக்க
எரிநாகங் கொண்டவனுக் கிருக்கப் பதமில்லை
என்று மவனெழுந்து எடுத்தானே வில்லதனை
வில்லெடுத்து நாணிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
வில்லைக் குணத்தொனித்து வில்மாரி தான்பொழிய
சண்டைக்கு முஸ்தீபாய் நின்றனே யிந்திரனும்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து

## திரியோதிரன் சண்டைக்கு ஆயத்தப்பட்டது.

வில்லெடுத்து வாளெடுத்து வில்லைக் குணத்தொனித்து
வாடா பயலேயுன்னை வாரி யறைந்திடுவேன்
வேசி மகனேயுன்னை வெட்டிப் பிளந்திடுவேன்
தாசி மகனேயுன்னைத் தலையை யுடைத்திடுவேன்
என்று எழுந்தானே எழில்நாகங் கொண்டவனும்
வேசி மகனென்று விஸ்தாரஞ் சொன்னதெல்லாம்
வேசிமக னனதெல்லாம் வெளியாகக் காண்பிப்பேன்
தாசிமக னென்பதெல்லாந் தானே தெரியுதுபார்
என்று திரியோதிரன் இடும்பா யுரைக்கையிலே
போரஞ்சா மன்னர் புலந்திர ராசருக்கு
மீசை துடித்துவிழ முன்மீசை யொப்பமிட

## புலந்திரன் திரியோதிர னுபரணங்களைத் தவிடுபோடிசெய்தது.

கண்கள் பொறிபறக்கக் காந்தாள மாகுதங்கே
வில்லெடுத்து நாரிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
மன்னர் சபைநடுவே உன்தன் முடிதறிப்பேன்

என்று-விட்டா னொருபாணம் மண்ணதிர விண்ணதிர
மண்ணதிர விண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
மாற்றான் திடுக்கிடவே மறுமன்னர் கொக்கரிக்க
மற்று மொருகணையை மறுகணையைத் தான்தொடுத்தான்
தேசத்தை யாளுந் திரியோதிரன் வீற்றிருக்கும்
சிம்மா சனங்களெல்லாம் தவிடுபொடி யாகுதங்கே
முத்து முடிகளெல்லாம் முறிபட்டுத் தாமுதிர
தங்க முடிகளெல்லாந் தரையில் புரண்டுருள
வாள்கத்தி யம்புகளும் வளைதடி சக்கரமும்
அத்தனையு மூற்றுவிழ மற்றுங் கணைதொடுத்தான்
மற்று மொருகணையை மறுகணையைத் தான்தொடுத்தான்
சரமேற் சரம்பொழிந்தான் சாமர்த்திய முள்ளவனும்
இப்படி யாக யிவன்விடும் பாணமெல்லாம்
தேசத்தை யாளுந் திரியோ திரன்பார்த்து

## திரியோதிரன் கோபித்துப் புலந்திரனைப் பார்த்துரைப்பது.

கோபித்துக் கண்சிவந்து கொல்லும் புலியதுபோல்
பத்திய நாகம் பவளம்போற் கண்சிவந்து
நெற்றிப் புருவம் நெருப்பா யனல்பறந்து
சூரிய மண்டலத்தைக் கிட்டிச் சுவாலயமாய்
அக்கினி மண்டலத்தை யடுத்துச் சுவாலயமாய்
குன்றிபோல் கண்சிவந்து கோப மதிகரித்து
மீசை துடிதுடிக்க விழிகள் பொறிபறக்க
கண்கள் பொறிபறக்கக் காந்தாளம் பொங்கிவர
இந்திரனைப் பார்த்து எடுத்துரைப்பான் திரியனுமே
சாணுண்டு பையாஉன் சாமர்த்தியம் நானழிப்பேன்
சௌரியத்தை நான்குலைத்துத் தலையை யுடைத்திடுவேன்
நாகக் கணையாலே நானே தலையுடைப்பேன்
அறுதலை பெற்றபிள்ளை ஆட்டிவைப்பே னம்பலத்தில்
என்று கணையெடுத்தா னிந்திரன் மேலேவிட

இவனுரைத்த வார்த்தையெல்லாம் இந்திரனுந் தான்கேட்டு
தேசத்தை யாளுந் திரியனுக் கேதுசொல்வான்

## புலந்திரன் திரியனுக்குரைப்பது.

பச்சை மடல்விரியும் பாளைவிரி பூமணக்கும்
பாஞ்சால மகாராசன் சுயம்வரப் பந்தலிலே
தோரா வடிவழகி துரௌபதை நாயகியை
மாலையிட வந்தவர்கள் வண்ணலட்சம் ராசாக்கள்
அவர்க ளுடனாக வந்தாயே ஆணழகா
மெல்லியாள் துரோபதைதன் வில்வளைத்த நாளையிலே
வில்லை வளைப்பதற்கு உன்தனா லாகாதே
வேந்தர் சபைநடுவே வெட்கங்கெட்ட மன்னவனே
மன்னர் சபைநடுவே மானங் குலைந்தாயே
அன்றுபட்ட பாடு மறந்தாயோ ஆணழகா
இன்னமு மென்தனுடன் எதிர்நின்று பேசவந்தாய்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் யாகம் வளர்த்தினார்கள்
யாகமது பார்க்க வந்தாயே ஆணழகா
சந்தனச் சேற்றில் நடக்க வறியாமல்
சவுரியங்க ளற்று சறுக்கி விழுந்தாயே
ஆண்மைக ளற்றுமல்லோ அங்கே விழுந்தாயே
மன்னர் சபைநடுவே மானங் குலைந்தாயே
தோரா வடிவழகி துரௌபதையா ளென்னுச்சி
பாங்கியர்க்கு முன்பாகப் பார்த்து நகைத்தாரே
அத்தாலுஞ் சாகிலையே ஆணழகா உன்னுடம்பு
நீ-ஆண்பிள்ளை போல அமருக்கு வந்தாயே
வில்லெடுத்து யுத்தம்பண்ண வந்தாயே வேந்தர்முன்னே
கைதனிலே வில்லெடுக்க அறிவாயோ கட்டழகா
சாணுண்டு பையலவன் சாமர்த்திபம் பார்த்திடென்றான்

## திரியோதிரன் பேரில் பாணம் விட்டது.

விட்டா னொருபாணம் மண்ணதிர விண்ணதிர
மண்ணதிர விண்ணதிர மாற்றான் திடுக்கிடவே

எதிரி திடுக்கிடவே யெல்லை யதிர்ந்துவிழ
மற்றுமொரு கணையை மறுகணையைத் தானெடுத்தான்
மற்று மொருகணையும் மன்னனுட கைத்தலத்தில்
அந்த வொருபாணம் வந்து விழுமனேகம்
திரியோ திரன்முடிமேல் இருக்கும் சிங்காரங்களும்
அவன்கையி லாயுதமும் அத்தனையுந் தான்பார்த்து
வந்து விழுந்தது மன்னனுட கைத்தலத்தில்
மற்று மொருகணையும் மன்னனுட கைத்தலத்தில்
திரியோதிர னுதினமுஞ் சேனைத் திரள்படையும்
அத்தனையுந் தெத்தி நடந்ததே பாணமது
போரஞ்சா மன்னர் புலந்திர னு ரேதுசொல்வார்.

## புலந்திரன் சோல்வது.

பஞ்சவர்க ளைவரும் பார வனந்தேடி
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆரணியம் சென்றாரே
பன்னிரண்டு தன்வருஷம் ஆண்டாரே கானகத்தில்
அவர்களைத் தேடியல்லோ அனுப்பினுர் மல்லர்களை
மல்லர்களை விட்டவரைக் கொல்லுமென்று வாக்களித்தார்
அவர்களைக் காணும லலுத்துவந்தார் மல்லர்களும்
துருவாச மாமுனியைத் தொழுது தவம்புரிந்து
ஆணழகர் பஞ்சவரை அவனைவிட்டுக் கொல்லுமென்றார்
ஐவரைத் தேடி நடந்தார் வனம்நோக்கி
ஐவரையுங் கண்டாரே அப்பெரிய துருவாசர்
ஐவர்பஞ்ச பாண்டவரும் மாமுனியைக் கண்டவுடன்
மாமுனி யானவர்க்கு மன்னர்பஞ்ச பாண்டவரும்
ஆசனங்கள் தாம்போட்டு அவர்க்களித்தார் போசனங்கள்
பலாயிலையில் போசனங்கள் படைத்தாரே மாமுனிக்கு
அமுதுண்டு மாமுனியும் ஆவித் தவர்மறந்து
ஐவரையும் வாழ்த்தி நடந்தாரே கானகத்தில்
மற்று மொருவனத்தில் மன்ன ரொளித்திருந்தார்
தங்கை மணவாளன் தறுதலையைத் தானழைத்து

ஐவர்பஞ்ச பாண்டவர்க்கும் அபிஷேகப் பத்தினியாள்
அபிஷேகப் பத்தினியாள் ஆரணங்கு துரௌபதையும்
அவளழகு மொப்பனையும் ஆருமில்லை வையகத்தில்
துரௌபதையைக் கொண்டு தூங்குமஞ்ச மேற்றிவைத்தால்
இப்பெரிய நாடு மெழில்பெரிய ஆதனமும்
உன்னுடைய நாடுங் கர்ணர்பதி ஆதினமும்
அத்தனையுந் தாரேனென்றார் ஆனந்த மார்பனுக்கு
நல்லதென்று சம்மதித்தா னும் முடியானும்
ஒளித்திருக்கும் வனத்தில் உத்தமியைத் தான்தேடி
பத்தினியைத் தேடியல்லோ வந்தானே கானகத்தில்
சூதுரைத்துத் துரௌபதையைத் தூக்கி நடந்தானே
கபட மவனுரைத்துக் கட்டழகன் போய்நடந்தான்
ஆரணங்கு போனதை ஐவர்களுந் தாமறிய
பாதகன் கொண்டுபோற சேதி யவரறிந்து
தேரை யுடைத்தவர்கள் செம்புரவி துண்டித்து
இரதத்தை யவருடைத்து நல்புரவி துண்டித்து
பாவை யழகியரைப் பத்தினியைக் கொண்டுவந்து

## சயிந்தவனைக் கழுதை வடிவாக்கினது.

கட்டழகன் சயிந்தவனைக் கழுதை வடிவாக்கி
கழுதையைத் தொட்டதொரு கட்டழக ரானவர்
திட்டி வருகவென்று இட்டாள் பெருஞ்சாபம்
என்-வம்சத்தார் தொட்டாலே விட்டுவிட வேணுமென்றாள்
மிருக வடிவாக்கி யனுப்பினா ருங்களண்டை
கட்டழகர் மைத்துனனைக் கழுதைவடி வாக்கிவிட்டார்
அன்றுமே காண்டாயே அவருடைய வீரியத்தை
இன்னமுங் காண்பாய்காண் எங்களுட சௌரியங்கள்
மற்று மொருவனத்தில் வாசம்பண்ணார் மன்னவர்கள்
இன்னஞ் சிலகாலம் சென்ற பிறகாக
ஆகாய கெந்தருவன் அவனுமிழ்ந்தான் தம்பலங்கள்
மாயரிட கைத்தலத்தில் வந்து விழுந்ததது

அவன் தலையை வாங்கிவைக்க ஆயரவ ரெழுந்திருந்தார்
ஆகாய் கெந்தருவன் அவன்பயந்து ஓடிவந்து
அருச்சுன ராசரண்டை அபயமிட் டோடிவந்தான்
அந்த விசேஷம் அறிந்தந்த மாயவரும்
மன்னர் மனதறிய மாயர் படையெடுத்தார்
உன்தன் கெருவம் அடக்க மனதிலெண்ணி
அத்தானுஞ் சாடை அறியாமற் போனாயே
மாயனுக்கு மெங்களுக்கும் மச்சான் முறைகளுண்டு
உன்படையு மவர்படையு மொன்றாகக் கூட்டினார்
ஐவர்மேல் சண்டைபண்ண வந்தீர்க ளெல்லோரும்
வெற்றி மதயானை வீம ரருச்சுனரும்
உந்தன் படைத்தளத்தை ஒருமிக்க வேரறுத்து
மாயன் படையையெல்லாம் மண்ணுக்கிரை யாக்கிவிட்டார்

## மாயர் அருச்சுனன்மேல் சந்தோஷப் பட்டது.

மாய ரதுதெரிந்து மர்மம் வெளிவிடாமல்
தேரைவிட்டுக் கீழிறங்கி நடந்தந்த மாயவரும்
வீமருக்கு மருச்சுனர்க்கும் எதிராக வந்துமிவர்
அர்ச்சுனரைக் கட்டி யணைத்து உறவாடி
வீமரைக் கட்டி வெகுவா யுறவாடி
மாய னருச்சுனனும் மனங்குளி ரன்னேரங்
ஆயரும் வீமரும் அங்கே மனங்குளிர்ந்தார்
அத்தானுஞ் சாடை யறியாமற் போனாயோ
இன்னமின்னம் பார்க்கணுமோ எங்களுட வீரியங்கள்

## திரியோதிரன் மாடுபிடிசண்டையில் முதுகுகொடுத்து ஓடினது.

மாடுபிடி சண்டையிலே மன்னவரே வந்தீர்கள்
பேடியவர் சண்டையிலே பின்னிடைந்து ஓடினீர்கள்
அர்ச்சுனனார் சண்டையிலே ஆண்மை குலைந்தீர்கள்
வீமனார் சண்டையிலே வெற்றி குலைந்தீர்கள்
யானைபெருஞ் சேனைகளும் அத்தனையும் நீர்தோற்று

சேனை யொருவெள்ளம் திரள்வேந்தர் கையைவிட்டு
முடிதரித்த ராசாக்கள் முதுகிட்டு ஓடினீர்கள்
கணைபிடித்த ராசாக்கள் கால்நடுங்கி ஓடினீரே
அறியாத பையனுட ஆண்மைகளைக் கண்டீரே
தெரியாத என்னுடைய சௌரியத்தைப் பார்த்தீரே
இன்னமின்ன மென்னுடைய சௌரியங்கள் பார்க்கணுமோ
பார்த்தமட்டும் போதாதோ பாம்புக்கொடியோனே
பதினெட்டா நாளையிலே படைபொருதுஞ் சண்டையிலே
ஆடிப் பறக்கும் அமர்செய் சமர்க்களத்தில்
யுத்த மிகநடந்து ரத்தாறு ஓடையிலே
உங்கள் முடிகளெல்லாஞ் சிதறி யுடைகையிலே
காணாத சௌரியங்கள் காண்பாயுன் கண்ணாலே
பாராத வீரியங்கள் பார்த்திடுவாய் முன்னாலே
இந்தக் கணையாலே உன்தனிட தலையுடைப்பேன்
என்று மனங்கொதித்து இந்திர ராசாவும்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரையரெல்லாம்
பாட்டனார் வீஷ்டுமரும் பாரறிய துரோணரும்
சிற்றப்பா விதுரனுஞ் சீருள்ள காங்கெயனும்
காஞ்சிநா டாளுங் கர்ண சிகாமணியும்
வில்லில் திறமுடைய விகர்னப் பெருமாளும்
இந்தக் கணையாலே எற்றிடுவான் பூமுடியை
இந்திரன் வாளாலே இற்றுவிடும் பூமுடிதான்
இவன்தலை யற்றாலே என்னப்படுமோ உன்வாசல்
வெற்றி மதயானை வீமனது சபதங்களும்
தோரா வடிவழகி துரௌபதை நாயகியாள்
இட்ட பெருஞ்சபதம் இதுமுடிக்க வேணுமென்று
பாட்டனார் வீஷ்டுமரும் பாரறி துரோணரும்
எல்லவருங் கூடி யின்பமா யெழுந்திருந்து

**புலந்திரன் திரியோதிரன்பேரில் பாணம்விட்டது.**

வில்லெடுத்து நாரிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
விட்டான் சரபாணம் மேனியெல்லாங் கொப்பளிக்க

மன்னதிர விண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
மாற்றான் திடுக்கிடவே யிருந்தமன்னர் கொக்கரிக்க
பாணம் வரும்வேகம் பார்க்கமுடி போகாது
அம்புவரும் வேகம் ஆற்றமுடி போகாது
சிற்றப்பா விதுரனுஞ் சீருள்ள காங்கெயனும்
காசிநா டாளுங் கர்ண சிகாமணியும்

## கர்ணர், விதுரர், வீஷ்டுமேர், விகர்னன் சகுனியிவர்கள் திரயோதிரனுக்குக் கோபந்தணித்தது.

தேசத்தை யாளுந் திரியோதிரன் முன்னேவந்து
அமையு மமையுமையா ஆனந்த வாழ்மார்பா
தூதுரைக்க வந்தவனைத் தொடர்ந்துகொல்ல ஞாயமுண்டோ
வார்த்தைசொல்ல வந்தவனை வாளெடுத்துக் கொல்லலாமோ
புத்திரரைக் கொல்வாரும் உண்டோ வுலகுதனில்
மைந்தரைக் கொல்வாரும் உண்டோதான் வையகத்தில்
என்று மனந்தேற்றி எத்திலங்கு பூமுடியார்
கொற்றவனார் கோபம் குணப்படுத்திக் கொண்டார்கள்
மன்னவனார் கோபம் வசப்படுத்தி யானபின்பு
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
ஆறினான் கோபம் அமர்ந்தான் கொலுமுகத்தில்
தேறினான் கோபந் தெளிந்தே கொலுதனிலே
எரிநாகங் கொண்டவனு மிருக்கின்ற வேளையிலே

## கர்ணர், விதுரர், வீஷ்டுமேர், துரோணர் இவர்கள் புலந்திரனுக்குச் சமாதான வார்த்தைகூறல்.

தங்கைமேல் பாணம் எடுப்பாரோ தார்வேந்தா
ஐயர்மேல் பாணம் எடுப்பாரோ ஆணழகா
மன்னர்மேல் பாணம் எடுப்பாரோ மந்திரியே
அமையு மமையுமென்று ஆணழக ரிந்திரரை

## புலந்திரனை குருக்களணைத்துச் சமாதானங்கூறல்.

கோணாத மாதவத்துக் குருக்களவர் ஓடிவந்து
ஆனந்த மார்பனை அணைத்து மடியில்வைத்து

உச்சி முகந்துமவர் உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கந் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
கைதுடைத்து வாய்துடைத்து கனிவாய் முகந்துடைத்து
கொற்றவனூர் கோபம் குணப்படுத்திக் கொண்டார்கள்
மன்னவனூர் கோபம் வசப்படுத்திக் கொண்டார்கள்
அனுப்பின பாணத்தை யழைத்துறையி லிடுமென்று
போரஞ்சா மன்னர் புலந்திரர்க்கு முன்னேவந்து
இந்திர ராசருக்கு ஏதுசொல்வார் மன்னவர்கள்
அமையு மமையுமையா இவருட புத்திரரே
சண்டை யமையுமையா இந்திர ராசாவே
போரை யடக்குமையா புலந்திர வீரியரே
பாணம் விலக்குமையா மாயர் மருமகரே
மாயர் மருமகரே மாது மணவாளரே
சொல்லிவிட்ட பாணமதைச் சேர அழைத்துவிடும்
என்று மவருரைக்க யேதுசொல்வா ரிந்திரரும்
உங்களது பாணம்போல் எண்ணுதீ ரென்கணையை
உங்களது வில்லதுபோல் எண்ணுதீ ரென்வில்லை
போவென்றால் போய்விடும் வாவென்றால் வந்துவிடும்
நில்லென்றால் நின்றுவிடும் நீங்கள் பிடித்தபாணம்
வல்லுயிர்க ளற்றவர்க்கும் பாணத் திறமுண்டோ
மந்திர வல்லமைகள் இல்லாத பேர்களுக்கு
பாணத் திறமுமில்லை படைமன்னர் பயமுமில்லை
வில்லுத் திறமுமில்லை வேந்தர் பகையுமில்லை
உங்களது பாணம்போல் என்னை நினைத்தீர்களோ
என்தனுட கைபாணம் இதின்வலுயை சொல்லுகிறேன்

## புலந்திரன் பாணத்தின் மகிமைகூறல்.

எதிரிகுறி காணுதே வுறைசொல்ல மாட்டாதே
உதிரங்கள் கண்டாலே வுறைவந்து சேர்ந்துவிடும்
இரத்தக் குறிகண்டாலே உறைவந்து சேர்ந்துவிடும்
என்-பாணத்தின் தன்மகிமை யறியீரோ மன்னர்களே

என்னுடைய வில்திறத்தை யறியீரோ மன்னவரே
இரத்தக்குறி காட்டுமே உத்தமரே யென்றுரைத்தார்
உதிரக்குறி காட்டுமென்றார் உத்தமனு ரிந்திரரும்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
கேட்ட புலந்திரற்கு கேள்விசொல்ல மாட்டாமல்
நெஞ்சுலர்ந்து நாவரண்டு நித்திலங்கு பூமுடியார்
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
மன்னர் முகம்பார்த்து மர்மமாய் வீற்றிருந்தார்

## கர்ணர் புலந்திரனுக்குத் திரியோதிர னுயிர்த்தூணைக் கண்சாடையாய்க் காட்டினது.

காஞ்சிநா டாளுங் கர்ண சிகாமணியும்
மன்னர் முகம்நோக்கி மர்மமா யேதுசொல்வார்
தேசத்தை யாளுந் திரியோதிரன் முன்பாக
இருக்கு முயிர்த்தூணை நித்திலங்கு பூமுடியார்
கண்சாடை காட்டினர் கர்ண சிகாமணியும்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்பார்த்து
காளையிட புத்திரரும் கைபாணம் நழுகவிட்டு
வேந்தனுட கைபாணம் வீறிட் டெழுந்தது
புலந்திரன் பாணமது பொறிபறக்கத் தானெழுந்து
ஆகாய வீதியெல்லாம் அங்கே சுழன்றுவிழ
உயிர்த்தூணை வெட்டி உறைவந்து சேர்ந்ததப்போ
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
ஆறினர் கோபம் அமர்ந்தார் கொலுமேடை
தேறினர் கோபம் தெளிந்தார் கொலுமேடை
கொற்றவனர் கோபம் குளிர்ந்தசலம் போலானர்
மன்னவனர் கோபம் மனதாறி வீற்றிருந்தார்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
உயிர்த்தூணும் போனவுடன் உற்ற பலமிழந்தான்

## திரியோதிரன் ஆங்காரபல மிழந்தது.

வாடி மனந்தளர்ந்தான் வலுமன்ன ராசாவும்
கைசோர்ந்தான் மெய்சோர்ந்தான் கையில் கணைசோர்ந்தான்
உற்ற பலங்குறைந்து ஓங்கி மனந்தளர்ந்து
எரிநாகங் கொண்டவனும் இருந்த சபைநடுவே
மூர்ச்சை யடைந்தானே முடிமன்ன ராசர்கள்முன்
களையாகி வீழ்ந்தானே கட்டழகன் வீரியனும்
இப்படி யாக யிருக்கின்ற வேளையிலே

## திரியோதிரனுக்குக் களைமாறச் செய்தது.

சாதிமணிக் கவரி சந்தனத்தா லூதுவத்தி
கோலமணிக் கவரி குங்குமத்தா லூதுவத்தி
வீசினார் தூதுவர்கள் வேல்புருவக் கண்ணனுக்கும்
திறவாத கண்கள் ரண்டுந் திறந்து மவன்பார்த்து
முழியாத கண்கள்ரெண்டும் முழித்தான் திரியோதிரன்
தாகமது கொண்டல்லவோ தார்வேந்தன் வீற்றிருந்தார்
இப்படி யாக யிவனிருக்கும் வேளையிலே

## புலந்திரன் உத்தரவு கேட்கிறது.

போரஞ்சா மன்னர் புலந்திரனு ரப்போது
வந்துமிகப் பொழுதாச்சு மன்னர் பெரியவரே
போக விடைதாரும் என்று மவர்தொழுதார்
பாட்டனுக்கும் வீஷ்டுமருக்கும் பாராளுந் துரோணருக்கும்
சிற்றப்பா விதுரனுக்கும் சீருள்ள காங்கெயர்க்கும்
காஞ்சிநா டாளுங் கர்ணர் பெருமாளுக்கும்
தேசத்தை யாளுந் திரியோ திரனுற்கும்
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டார்
அங்கிருக்கு மன்னர் அரையர் துரைகளெல்லாம்
தெண்டனிட்ட மன்னவரை வாரி யெடுத்தணைத்து
வாரி யெடுத்தணைத்து மார்மேலே கொண்டணைத்து
போய்வாரு மையா புலந்திர ராசாவே

ஆறுயிரம் பாண்டியர்க்கும் ஐயன்மார் பாண்டவர்க்கும்
ஐவர்பஞ்ச பாண்டவர்க்கும் அல்லித்திரு நாயகிக்கும்
எங்களது க்ஷேமம் எடுத்துரையு மிந்திரரே
போய்வாரு மென்று பொருந்தி விடைகொடுத்தார்
போரஞ்சா மன்னன் புலந்திர ராசாவும்

## பேரிகை முழங்குவது.

அந்தத்தெரு வீதியிலே அடித்தார்கள் பேரிகை
ஊதினன் சின்னம் உலகேழுந் தானதிர
செம்பொன்னாற் காளந் திசைவிளங்க வூதினன்
பொன்னினாற் காளம் பொருந்திநின் றூதினன்
இந்திரனன் போறேனென்று எடுத்தான் விருதோசை
செயம்பெற்று வாறேனென்று ஊதினன் சங்கெடுத்து
காஞ்சிநா டாளுங் கர்ணரவர் பெற்றெடுத்த
வேல்பொருதுங் கண்ணனும் விஸ்வகேது தான்கேட்டு

## கர்ணர்குமாரன் விசுவகேது யுத்தத்துக்குப் புறப்பட்டது.

எந்தவூர் ராசாவோ எவ்விடத்து மந்திரியோ
கொச்சிதேச மாளுங் குணமுள்ள ராசாவோ
மாற்றான் படையோதா னிவ்வீதி வந்ததென்ன
எதிராளி படையோதா னிவ்வீதி வந்ததென்ன
செயம்பெற்று வந்தோமென்று ரணபேரி யடிபடுது
வந்ததொரு ராசாக்கள் மன்னரைநாம் பார்ப்போமென்று
சென்றதொரு ராசாக்கள் சேவகத்தைக் காண்போமென்று
சினத்து மவனெழுந்து தேர்விசையன் செல்வனுமே
தேர்ப்பா கனையழைத்து தேர்கொண்டு வாருமென்றார்
அப்படியே நல்லதென்று ஆணழக னோடிவந்து
தேரை யலங்கரித்துத் தேர்ப்பாகன் கொண்டுவந்தான்
தேர்வந்த தென்றுசொல்லித் தீர்க்கமுடன் தெண்டனிட்டான்
வேல்பொருவுங் கண்ணனும் விஸ்வகேது தான்கேட்டு

மண்டியிடுங் கால்களுக்கு மாதளம்பூச் சல்லடமாம்
தூக்கிவைக்குங் கால்களுக்குத் துத்திப்பூச் சல்லடமாம்
குந்தியிடுங் கால்களுக்குக் குறிஞ்சிப்பூச் சல்லடமாம்
தட்டி வரிந்துகட்டித் தாமரைப்பூ சுங்குவிட்டு
சிவசிவா வென்றுசொல்லித் திருநீற்றுக் காப்பணிந்து
கமலத் திருமுகத்தில் கஸ்தூரிப் பொட்டுமிட்டு
வாளெடுத்து வில்லெடுத்து வளைதடி கையெடுத்து
அம்பெடுத்து வில்லெடுத்து அம்பறுத்தூணி தானெடுத்து
அரண்மனை யேழுகட்டும் அந்தப் புரந்தாண்டி
மாலை முடியானும் மணிரதத்தின் முன்னேவந்து
தேரைச்சுற்றித் தெண்டனிட்டுத் தேரின்மேலேறினன்
பச்சைக் குடையாம் பவள நெடுங்குடையாம்
வச்சிரக் குடையாம் வைடூரியப் பொற்குடையாம்
முத்துக் குடைபிடிக்க முடிமன்னர் தேர்நடக்க
பவளக் குடைபிடிக்கப் பார்மன்னர் தேர்நடக்க
ரத்தினக் குடைபிடிக்க ராசாக்கள் தேர்நடக்க
போரஞ்சா மன்னர் புலந்திரருஞ் சேவகரும்
அர்ச்சுனனர் புத்திரரும் அவருடைய சேனைகளும்
அம்பலத்து வாசல் நடந்தா ரழகாக
குருடனுட வாசலெல்லாந் தாண்டியந்தக் கொற்றவரும்
பத்துப் படித்தளமும் பதினெட்டு மண்டபமும்
எட்டுப் படித்தளமும் இராசர்கள் மண்டபமும்
அத்தனையுந் தாண்டிவந்தார் ஆணழக ரிந்திரரும்
வாசலதைக் காக்கின்ற வார்கொள்ளி முன்னேவந்தார்

## வார்கொள்ளி புலந்திரனைச் செய்தி கேட்பது.

வாசல் தடைக்காரி வார்கொள்ளி யேதுசொல்வாள்
வானவர் புத்திரனே வந்தீரே தூதுரைக்க
மாது மணவாளர் தூதுரைத்து மீண்டீரே
தூதுரைத்து வந்ததெல்லாம் சொல்லுமையா வென்றனுக்கு [டாள்
சொல்லுமையா வென்றுசொல்லித் தொழுதிறைஞ்சித் தெண்டனிட்

பேரஞ்சா மன்னர் புலந்திரனு ரேதுசொல்வார்
போன விசேஷம் புதுமை நடந்ததுவும்
தாம முடியான் தைலாட்டான் பட்டதுவும்
நாலிரண்டு வார்த்தையாய் நடப்பித்தா ரிந்திரரும்
அந்த விசேஷம் அதுகேட்டு வார்கொள்ளி
கேட்டு மனமகிழ்ந்து கிளிபவளச் செவ்வாயாள்

## வார்கோள்ளி யுரைப்பது.

அத்தி புரத்தை அரசாள வாருமைபா
அங்க வளநாடு அரசாள வாருமையா
உங்கள்-ஐவருட சீமை முழுதுமே யாளுமென்று
போய்வாரு மென்றுசொல்லிப் பொன்னடிக்குத் தெண்டனிட்டாள்
போரஞ்சா மன்னர் புலந்திரரு மேதுசொல்வார்
மூன்றுநா ளறுபொழுது முடிமன்ன ராளுவது
நாலாநா ளெங்களது ஆகுதுகாண் ராச்சியங்கள்
ரெட்டிப்புச் சம்பளங்கள் நானே தருகிறேன்
ஏதுக்கு மஞ்சாதே யிளங்கொடியே வீற்றிரென்றான்
என்று-சொல்லித் திரும்பினான் துன்னீலங் கண்ணனும்
அத்தி புரத்தில் நெடுவீதி வாறானே

## திரியோதிரனைப் புலந்திரனுத்தரவு கேட்டதற்கு மௌனமாய்த் தலையை யசைத்தது.

தேசத்தை யாளுந் திரியோதிரன் முன்னேவந்து
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவனை வாழ்த்திவிடை தாராமல்
வாரி யெடுக்காமல் வண்ணமுடி வைக்காமல்
மகுட முடியசைக்கி மௌனமாய்த் தானிருந்தான்
முத்து முடியசைக்கி மெத்தெனவே தானிருந்தான்
பார முடியான் பராமுகமாய்த் தானிருந்தான்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
ஆகட்டு மென்றுசொல்லி ஆணழகர் சொல்லலுற்றார்
படிபடி யென்றுசொல்லப் படிந்தது அவ்வானை

முக்கம்பம் தட்டி முதுகின்மேல் கையைவைத்து
கைத்தலத்தைத் தட்டிக் கறுத்தானே யேறினர்

## புலந்திரன் பிரயாணப்பட்டுவேர எதிரே விஸ்வகேது வருகிறது.

மத்தகத்தைத் தட்டி மதயானை யேறினர்
அம்மானுந் தானும் மதயானை யேறினர்
மாமாவுந் தானும் மதயானை யேறினர்
சிலமன்ன ரெல்லோரும் திடுக்கிட் டெழுந்திருந்து
சரியானை யேறினர் தன்னேடொத்த ராசாக்கள்
முன்னானை யேறினர் மூன்றுலட்சம் ராசாக்கள்
பின்னானை யேறினர் பேருலக ராசாக்கள்
முன்னை முரசெடுத்து முன்னானை மேல்போட்டார்
பின்னை முரசெடுத்துப் பின்னானை மேல்போட்டார்
சிலமன்ன ரெல்லோரும் தேறின்மே லேறினர்
பலமன்ன ரெல்லோரும் பல்லக்கில் ஏறினர்
குலமன்ன ரெல்லோரும் குதிரையின்மே லேறினர்
அழகான மன்னரெல்லாம் ஆனைமே லேறினர்கள்
பாட்டர் புலவர் பதினெட்டு மந்திரிகள்
சித்தர் புலவர் சிறப்பான மந்திரிகள்
சிங்கங் கரடிபுலி சேர முழங்கினர்
யானை கரடிபுலி யருகில்வந்து முழங்கினர்
அவரவர்கள் வாகனத்தில் அவரவர்க ளேறினர்
ஏறின போதே எடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடைகள் முழுவயிரப் பொற்கொடியாம்
தங்கக் குடையாம் தவள நெடுங்குடையாம்
சிவ-சங்கரா வென்றுசொல்லித் தேரின்மே லேறினர்
அப்போ-தொருஅக்ரோணி சேனையுடன் விஸ்வகேது வாருரே
சிலமன்ன ரெல்லாம் தேறின்மே லேறினர்
பலமன்ன ரெல்லோரும் பல்லக்கி லேறினர்கள்
தன்னேடொத்த ராசாக்கள் அழகானை யேறினர்
அழகானை யேறினர் ஐந்துலட்சம் ராசாக்கள்

## குடையின் சிறப்பு.

ஏறின போதே எடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடையாம் முழுவைரப் பொற்குடையாம்
தங்கக் குடையாம் தவள நெடுங்குடையாம்
பச்சைக் குடையாம் பவள நெடுங்குடையாம்
எடுத்து நிறைத்தார்கள் எண்ணு யிரங்கோடி
சுற்றி நிறைத்தார்கள் சூரியனைக் கண்மறைக்க
பக்கம் நிறைந்தார்கள் பகவானைக் கண்மறைக்க
ஒற்றைக் குடைநடுவில் வாருனே வீரியனும்
காஞ்சிநா ட ரனுங் கர்ணர் சிகாமணியே
வேல்பொருவுங் கண்ணனும் விஸ்வகேது வாருனென்று

## விஸ்வகேது விருது முழங்கினது.

விஸ்வகேது வாருனென்று விருது முழங்கிவிட்டான்
சண்டைக்கு வந்தேனென்று ஊதினுன் தாரைசின்னம்
ரணங்கள் ரணங்களென்று ரணபேரி யடிபடுது
சண்டைசண்டை யென்றுசொல்லி சண்டைபேரி யடிபடுது
வெற்றிவெற்றி யென்றுசொல்லி வெற்றிநக ரடிபடுது
நடந்தானே விஸ்வகேது நாலுதிக்குந் தானதிர
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவை
வந்து வளைந்தானே வல்லிடிபோல் விஸ்வகேது
போரஞ்சா மன்னர் புலந்திரரைத் தான்பார்த்து
கட்டழகன் விஸ்வகேது காளையவர்க் கேதுரைப்பான்
ஆரடா மன்னவனே அறிவுகெட்ட பாதகனே
எந்தவூர் சண்டைபண்ணி யிந்தவூர் செயிக்கவந்தாய்
நில்லடா மன்னவனே நிமிஷத்தில் வென்றிடுவேன்
வாளா லுயிர்பிளந்து வல்லுயிரைக் கொள்ளைகொண்டு
எமனுலகு தேடி யிப்போ தனுப்பிடுவேன்
நமனு ருலகத்துக்கு நானே யனுப்பிடுவேன்
என்றுமவன் வில்லெடுத்தா னித்திலங்கு பூமுடியான்

## புலந்திரனுக்கும் விஸ்வகேதுவுக்கும் யுத்தம்.

வில்லைக் குணத்தொனித்து விட்டா னொருபாணம்
விட்டா னொருபாணம் விண்ணதிர மண்ணதிர
மண்ணதிர விண்குலுங்க மாற்றான் படைநடுங்க
எதிரி திடுக்கிடவே எல்லை யதிர்ந்துவிழ
இப்பெரிய இடியை யிந்திரனார் தாம்பார்த்து
இவனார்காண் மூளியென்று ஆணழக னெச்சரித்து
வில்லெடுத்து நாரிபூட்டி வில்லைக் குணத்தொனித்து
வில்லைக் குணத்தொனித்து விட்டான் சரபாணம்
விட்டான் சரபாணம் விண்ணதிர மண்குலுங்க
விண்ணதிர மண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
மாற்றான் திடுக்கிடவே மறுமன்னர் கொக்கரிக்க
எதிரி திடுக்கிடவே இடிமன்னர் கொக்கரிக்க
இப்படிக்குச் சண்டைபண்ணு ரிருநிலத்து ராசாக்கள்
இவருடைய சண்டைகளில் தும்பி பறக்காது
குருவி பறக்காது கோட்டானும் நாடாது
ஆகாய வீதியெல்லாம் ஆணழகர் பந்தலிட்டார்
பாதாள லோகமெல்லாம் பாணத்தால் பந்தலிட்டார்
அம்பு வரும்விதங்கள் ஆற்றமுடி போகாது
பாணம் வரும்விதங்கள் பார்க்கமுடி போகாது
கோடான கோடியுண்டு கொற்றவர்கள் பாணமவை
கண்டு முடியாது கணக்கி லடங்காது
சொல்ல முடியாது சுந்தரனார் பாணமவை
ஒருவர் விடும்பாணம் ஒருவர் விலக்கிடுவார்
வேல்பொருவுங் கண்ணனும் விஸ்வகேது பாணம்விட்டான்
போரஞ்சா மன்னர் புலந்திரனார் முன்னேவந்து
மல்லிகைப் பூவாய் வணங்குது பாணமது
போரஞ்சா மன்னர் புலந்திரனார் பாணம்விட்டார்
மல்லிகைப் பூவாய் வணங்கு தவர்பாணம்
மீட்டும்-வேல்பொருவுங் கண்ணனும் விஸ்வகேது பாணம்விட்டார்
வந்து வணங்குது மன்னவர் பாணங்கள்

## புலந்திரன் அம்மான் பொன்னுமலை நாடானுக் குரைப்பது.

போரஞ்சா மன்னர் புலந்திரனர் தாம்பார்த்து
பொன்னுமலை நாடாளும் அண்ணர் முகம்நோக்கி
போரஞ்சா மன்னர் புலந்திரனு மேதுசொல்வார்
அவன்விடும் பாணமெல்லாம் ஐயாவே வணங்குதுகாண்
நான்விடும் பாணமெல்லாம் அவனை வணங்குவது
ஏது கருமம் எனக்கறியச் சொல்லுமென்றான்

## பொன்னுமலை நாடான் சொல்வது.

பொன்னுமலை நாடாளும் அண்ண வெடுத்துரைப்பார்
அவனூரும் பேரும் அதிசயங்கள் கேளுமென்றார்
நாடும் புதுமைகளும் ராசனுட தன்பேரும்
அத்தனையுங் கேட்டால் தெரியுங்கா ணழகா
என்று மவருரைக்க இந்திரரும் தாம்கேட்டு
ஆர்காணும் ராசாவே ஆண லழகுமன்ன
ஊரென்ன பேரென்ன வுத்தமனே சொல்லுமென்றார்
உன்னைப்பெற்ற தந்தையர் பேருரையு மென்றனே
வேல்பொருவுங் கண்ணன் விஸ்வகேது தான்கேட்டு
பேர்கேட்டு வேர்பிடுங்க வந்தீரோ மன்னவரே
உன்னை-சண்டைபண்ணி நான்செலித்துச் சவுரியங்கள் காண்பித்து
என்-தேருக்கால் தன்னுடனே சேர்த்துநா னுன்னைக்கட்டி
என்-ரதத்தின்கால் தன்னுடனே உன்னைக்கட்டி போகையிலே
அப்போது நானுரைப்பே னடையாளங் கேளுமென்றார்
அந்த விசேஷம் அதுகேட்டு இந்திரரும்
எடுத்தாரே வில்லதனை ஏழுலகந் தத்தளிக்க

## புலந்திரன் பாணம்விட்டது.

அண்டரண்டந் தானதிர ஆகாயம் அற்றுவிழ
விட்டான் சரபாணம் மேனியெல்லாந் தான்மறைய
மற்று மொருகணையை மறுகணையைத் தான்தொடுத்தான்

வேல்பொருவுங் கண்ணனும் விஸ்வகேது தான்பார்த்து
படபடென்று பற்கடித்துப் பதறியங்கே வில்லெடுத்து
வில்லைக் குணத்தொனித்து வீரனவன் வில்லதனால்
விட்டான் சரபாணம் பூமியெல்லாந் தானதிர
இருதரத்தார் பாணமது எண்ண முடியாது
தும்பி பறக்கிறது சூரியனைக் கப்புறது
கருந்தூளுஞ் செந்தூளுங் கலந்து பறக்கிறது
இப்படிக்கா சண்டைபண்ணார் இருதரத்து ராசாக்கள்
காஞ்சிநா டாளுங் கர்ணர் பெருமாளும்

## கர்ணர் பிள்ளைகளிடம் வருகிறது.

அம்பலத்து வாசல்விட்டு ஆணழகர் தாமெழுந்து
அமுதுண்ணப் போறேனென்று ஆணழகர் வாருரே
சண்டைசண்டை யென்றுசொல்லி சண்டைநகா ரடிபடுது
ரணங்கள் ரணங்களென்று ரணபேரி யடிபடுது
உற்றுற்றுக் கேட்டாரே உத்தமனர் கர்ணராசர்
எவ்வுலக ராசாக்கள் இங்கேவந்தார் சண்டைசெய்ய
ஆள்பெருஞ் சேவகரை யனுப்பியவர் பாருமென்றார்
தூதுவர்க ளோடிவந்து துரிதமுடன் கண்டார்கள்
இருதரத்து சேனைகளும் இந்திர ராசாவும்
காஞ்சிநா டாளுங் கர்ணருட புத்திரனும்
இவர்களுடன் சண்டையென்று எழுந்து மிகநடந்து
காஞ்சிநா டாளுங் கர்ணருக்குத் தெண்டனிட்டு
உன்தன் குமாரனும் ஒளியுள்ள இந்திரனும்
விஸ்வகேது ராசாவும் விஜயனுட புத்திரனும்
இருவருட சண்டையென்று இணையடி கைதொழுதார்
காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
இவனு ரவனர் இருதரத்துச் சேனைகளும்
என்று மனதிலெண்ணி எழுந்திருந்து ஓடிவந்து
யுத்த முகந்தனிலே வந்துநின்று ருத்தமரும்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தான்பார்த்து

## புலந்திரன் கர்ணரைக் காண்கிறது.

யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருந் தானெடுத்து
காஞ்சிநா டாளுங் கர்ணருக்கு முன்னேவந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்து
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டு
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
தெண்டனிட்ட மன்னவனைக் கண்டாரே சீர்கர்ணர்
வாரி யெடுத்து மடிமேலே கொண்டணைத்து
உச்சி முகந்துபிள்ளை உள்ளங்கால் முத்தமிட்டு
பக்கந் தடவிப் பவளவாய் முத்தமிட்டு
பலபடியாய்ப் பேசி இருக்கின்ற வேளையிலே

## விசுவகேது தகப்பனாகிய கர்ணரைக் காண்கிறது.

தேரேறிச் சண்டைபண்ணும் விஸ்வகேதுந் தான்பார்த்து
தன்னைப்பெற்ற தந்தை கர்ணரங்கே வந்ததுவும்
அவர்-யானைவிட்டுக் கீழிறங்கி ஆணழகர் வந்ததுவும்
புண்ணியனார் பாதம் பூப்போட்டுத் தொழுததுவும்
வாரி யெடுத்துமல்லோ மார்போ டணைத்ததுவும்
அத்தனையுங் கண்டானே ஆணழகன் விஸ்வகேது
தேரைவிட் டிறங்கித் துருசாகத் தானடந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகும் அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
பன்னீரால் காலலம்பிப் பட்டா லடிதுவட்டி
கொண்டுவந்த பூமலரைக் குபுகுபென்று தான்சொரிந்தான்
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
நாற்கால் வலம்வந்து நமஸ்கரித்துத் தெண்டனிட்டான்
காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்பார்த்து
வந்து பணிந்தவனை கண்டு மனமகிழ்ந்து

வாயார வாழ்த்தி மனது மிகக்குளிர்ந்து
மைந்தரைக் கொஞ்சி மடிமேலே கொண்டணைத்து
இருவரையுங் கொஞ்சி யிருதொடையில் கொண்டணைத்தார்
அந்தச் சமயத்தில் விஸ்வகேது ஏதுசொல்வான்
தன்-ஐயர் முகம்நோக்கி ஆணழகன் ஏதுசொல்வான்
மாற்றானைக் கொண்டு மடிமே லணைத்தீரே
சண்டைபண்ண வந்தவனைத் தூக்கி மடியில்வைத்தீர்
இவன்-ஆர்காணும் ஐயாவே அடியேனுக் குரையுமென்றான்
காஞ்சிநா டாளும் கர்ண ரவர்கேட்டு

## கருணர் தன்பிள்ளையாகிய விசுவகேதுக்குத் தன்னுடைய கோத்திர வரலாறு கூறல்.

கோணாத மாதவத்துக் குந்தியம்மாள் என்னாச்சி
அறியாத நாளையிலே ஆச்சியரு மென்னைப் பெற்றாள்
தெரியாத காலத்திலே தேவியரு மென்னைப்பெற்றாள்
கண்டார் நகைப்பாரென்று கட்டழகி யென்னாச்சி
பேழை தனிலேவைத்து ஆற்றில் அலையவிட்டாள்
தேசத் தழகன் திரியோ திரன்பார்த்து
என்னை வளர்த்தவனும் எனக்குப்பட்டங் கட்டினான்
இந்தப் பெருமையா யிருந்திட்டேன் நானுமப்போ
கோணாத மாதவத்துக் குந்தியம்மா ளாச்சியரும்
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆணழகர் தம்பியென்று
ஆனந்த வாழ்மார்பா அறியாமல் நானிருந்தேன்
இப்போது என்தனுக்கு எல்லாம் தெளிவாச்சு
தக்கப் புகழுடைய தருமரவ ருன்தாதை
வெற்றி மதயானை வீமரவ ருன்தாதை
காண்டா வனமெரித்தக் காளையவ ருன்தாதை
நாம முடியானும் நகுலனும் உன்தாதை
தாம முடியானும் சகாதேவன் உன்தாதை
ஆனந்த மார்பாஉனக் காறுபேர் தாதையென்றான்
தோரா வடிவழகி துரோபதை உன்னாச்சி

சேரார வளநங்கை சுபத்திரையாள் உன்னுச்சி
மேகம் படிந்தெடுத்த மின்னொளியா ளுன்னுச்சி
நாகம் பயின்றெடுத்த நாககன்னி உன்னுச்சி
பொருகயற் கண்ணி போகவதி யுன்னுச்சி
பிறவா முடிதரித்த பெண்பெருமா ளுன்னுச்சி
பங்கயஞ்சீர் கண்ணுள் பவளக்கொடி உன்னுச்சி
போதே வருந்தடங்கண் பொன்னுருவி தன்னுடனே
ஈரலர்ப்பூந் தாரார் எட்டுப்பே ருன்னுச்சி
இவர்-யார்காணும் என்று கேட்டாயே ஆணழகா

## கருணர் விசுவகேதுவுக்குப் புலந்திரன் வரலாறு சொல்லல்.

யாருமல்ல என்தனுக்கு அழகான கண்மணியே
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தனுட புத்திரன்காண்
காண்டா வனமெரித்த காளையுட புத்திரன்காண்
அழகியசீர் கொம்பனையாள் அல்லியுட புத்திரன்காண்
தோகை மயிலனையாள் துற்சடையாள் மருமகன்காண்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி நாயகன்காண்
அஞ்சு வயதுடைய அர்ச்சுனற்குத் தந்தையிவன்
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் புத்திரன்காண்
உன்தனுக்குத் தம்பியென்று உரைத்தார் கர்ணராஜர்
அந்த உரைகேட்டு ஆனந்த வாழ்மார்பன்
போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தானெழுந்து
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னின் செம்பிலே பன்னீருங் கொண்டுவந்து
கொண்டுவந்த பூமலரை குபுகுபென்று தான்சொரிந்தான்
முக்கால் வலம்வந்து முடிவணங்கித் தெண்டனிட்டான்
அப்போது விஸ்வகேது ஆணழக னேதுசொல்வான்

## விசுவகேது புலந்திரனை ஆசீர்வதிக்கிறது.

வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாழ்வீர் வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீ ருத்திரிப்பீர்

நிற்பீர் நிலைதரிப்பீர் நீரரசை யாண்டிடுவீர்
கற்பதித்த தூண்போல் கலங்கா தரசாள்வீர்
விற்பதித்த தூண்போல் விளங்க அரசாள்வீர்
மாற்றானைக் கொன்று மறுபட்ட மாண்டிடுவீர்
என்னைப் பொருவீர் எதிர்த்தார் முடிபெறுவீர்
பிள்ளை பெறுவீர் பெருமாள் பதம்பெறுவீர்
போருக்குப் போய்விடுவீர் பொழுதோடே வென்றிடுவீர்
வென்ற களரியிலே வீரபட்டங் கட்டிடுவீர்
சினத்துவந்தார் பூமுடியைச் செண்டாட்ட மாட்டிடுவீர்
பகைத்துவந்தார் பூமுடியைப் பருந்தாட்ட மாட்டிடுவீர்
கன்னிகளை மாலையிட்டுக் காளைகளை ஈன்றிடுவீர்
மங்கையரை மாலையிட்டு மைந்தர்களை ஈன்றிடுவீர்
பெண்களை மாலையிட்டுப் பிள்ளைகளைப் பெற்றிடுவீர்
அத்தி புரமாள அரசாள ஆண்பெறுவீர்
மதுரை நகராள மைந்தர்களைப் பெற்றிடுவீர்
பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்ந்திடுவீர்
ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போல சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காண் என்று வாயார வாழ்த்தினர்
வாழ்ந்திருப்பீ ரென்று மனதார வாழ்த்தினர்
தம்பியை வாழ்த்தியல்லோ தார்வேந்த னேதுசொல்வான்
தம்பி தனஞ்சயனே சமர்த்துள்ள வீரியனே
அரண்மனைக்கு வந்து அமுது புசியுமென்றான்

## புலந்திரன் விசுவகேதுக்குச் சொல்வது.

போரஞ்சா மன்னன் புலந்திரனுந் தான்கேட்டு
அண்ணன் முகம்நோக்கி ஆணழக னேதுசொல்வான்
தமயன் முகம்நோக்கித் தார்வேந்த னேதுசொல்வான்
இன்னம்-மூன்றுநா ளறுபொழுது முடிமன்ன ராளுவது
நாலாநாள் நம்மது ஆகுதுகாண் ராச்சியங்கள்
மன்னர் பெருமைகளும் மறுமன்னர் சேவகமும்

திரியன் பெருமைகளும் சேனைபேர் சேவகமும்
மூன்றுநாள் தன்னிலே சாயுதுகாண் அண்ணவே
நூலார் கடுந்திரளார் நூற்றெருவர் பூமுடியும்
நூற்றெருவர் பூமுடியும் நொறுங்க அடித்தபின்பு
சகுனி தலையுடைத்துத் தார்வேந்தர் போட்டபின்பு
நமதெண்ணம் முடிந்தபின்பு எத்திலங்கு பூமுடியும்
போதே வருந்தடங்கண் பொன்னுருவி யென்னுச்சி
நமதாச்சி யரண்மனையில் எல்ல வருங்கூடி
ஒத்துக் கலந்து புசிப்போங்காண் மன்னவரே
கூடக் கலந்து புசிப்போங்காண் மன்னவரே
இப்போ-மாற்றான்தன் வாசலிலே பாலமிர்த முண்ணலாமோ
எதிரி யரண்மனையில் இருந்தமிர்த முண்ணலாமோ
என்று உரைத்தானே யிந்திர ராசாவும்
விஸ்வகேது தான்கேட்டு மெத்த மனமகிழ்ந்து
இருவர்களுங் கொஞ்சி யிருந்தார்க ளன்னேரம்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவை

## கருணர் புலந்திரனைப் பார்த்துச் சொல்வது.

கர்ண ரவர்பார்த்துக் கட்டழக ரேதுசொல்வார்
எம-தஞ்சுபேர் தம்பியரும் அவருடைய புத்திரரும்
மன்னவர்கள் ஐந்துபேரும் மன்னர்பஞ்ச பாண்டவரும்
கோணுத மாதவத்துக் குந்தியம்மாள் என்தாயும்
யானும்என் புத்திரனும் என்னுடைய தேவியரும்
ஒக்கக் கலந்து ஒருகலத்தி லுண்போமோ
கூட விருந்துநாம் கூட்டமு துண்போமோ
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் அரசாளுங் கோலமதை
என்-கண்ணாலே கண்டு களிப்பேனே கட்டழகா
மனதாரப் பார்த்து மகிழ்வேனே மன்னவனே
என்று மவருரைத்து ஏங்கி மனந்தளர்ந்து
இற்றிற்று மன்னன் இருகண்ணும் முத்துதிர்த்தான்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தாம்பார்த்து

ஐவர்பஞ்ச பாண்டவரும் அவராளும் அரசுகளும்
மதுரை வளநாடும் வைகைப் பெரும்பதியும்
அத்தி புரமும் அடங்கலும் உம்மதுகாண்
அங்கவள நாடும் அடங்கலும் உம்மதுகாண்
மன்னவர்கள் பஞ்சவர்கள் வனமே திரிந்திடட்டும்
ஐயாவே நீரிருந்து அரசாள லாகாதோ
மன்னவரே நீரிருந்து வையகத்தை யாளொணுதோ
என்ன-காஞ்சிநா டாளுங் கர்ணர் பெருமாளும்
மன்னர்பஞ்ச பாண்டவர்க்கு உடற்பிறப்பு என்றுலே
உங்களுக்கு முன்பிறந்த உத்தமனுர் என்றுசொன்னுல்
காவலர்க ளைவர்களும் காடே திரிவார்கள்
ஐயாவே நீரிருந்து அரசாள லாகாதோ
நீரும் அவருமென நிஷ்டூரம் வேறுமுண்டோ
அண்ணர் பதியாண்டால் ஆகாதோ ஐவருக்கும்
நீர்-மன்னர் பதியாண்டால் மனங்கொள்ள மாட்டாரோ
வந்து பதிசேரு மென்றுசொல்லித் தெண்டனிட்டான்

## கருணர் புலந்திரனுக்குச் சொல்வது.

காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு
போரஞ்சா மன்னர் புலந்திரர்க்கு ஏதுசொல்வார்
ஐயாவே நீர்கேளும் அடியே ஞெருவார்த்தை
இந்திரரே நீர்கேளும் என்னுடைய நல்வார்த்தை
காவலனுர் பஞ்சவர் கட்டழகர் ஐவருக்கும்
என்-மாதா பயந்தெடுத்த மன்னவர்க ளைவர்க்கும்
என்தனுட சேதி யெடுத்தொன்றுஞ் சொல்லாதீர்
கர்ணருட சேதியவர் காதிலேயும் போடாதீர்
மன்னர்பஞ்ச பாண்டவர்கள் என்வரலா றறிந்தாலே
ஐவர்களும் பூமிவிட்டுக் கானகத்தில் செல்வார்கள்
அவர்-தோன்றிய நாளுந் தொலைத்தார் வனந்தனிலே
அவர்-ஊழியுள்ள காலமட்டும் உழன்றார் வனந்தனிலே
ஐவர்பஞ்ச பாண்டவரும் அரசாள வேணுமப்பா

நான்-படவேணும் படவேணும் பார்த்தன்கை யம்பாலே
இன்னம் படவேணும் எழில்விசைய னம்பாலே
போரஞ்சா மன்னர் புலந்திரரே நீர்கேளும்
பாரதம் என்று படைபொருந்தும் வேளையிலே
பதினெட்டாம் நாளையிலே படைபொருந்தும் சண்டையிலே
ஆடிப் பறக்கும் அமர்செய் சமர்க்களத்தில்
தேடி யுலாவுந் திரள்வேந்தர் கூட்டத்திலே
பத்மயூ கம்பிரித்து சண்டைபண்ணும் வேளையிலே.
ஆயனொரு சாரதியாய் அர்ச்சுனன் தேரேறி
மாயனொரு சூரதியாய் மச்சு ரதமேறி
ஆணு லழகுமன்னன் அர்ச்சுன ராசதுரை
வாளெடுத்து வில்லெடுத்து வளைவுதடி கையெடுத்து
அர்ச்சுனன் தானும் அடித்துமவன் சண்டைபண்ண
நாகக் கணைதொடுக்க நடுங்கி யதுவொடிய
இருவரும் யுத்தம்பண்ணும் வேளையிலே இந்திரரே
அர்ச்சுனன் கைப்பாணம் அறுக்குமே என்தலையை
பார்த்தன்கை யம்பதுதான் படுக்கென் றறுத்துவிடும்
பட்டு விழுவேன் பார்த்தன்கை யம்பாலே
அற்று விழுவேனுன் அர்ச்சுனன்கை யம்பாலே
கருணனைக் கொன்று விருதுபெற்றே னென்றுசொல்லி
அர்ச்சுன ராசனவ னூதுவான் சங்கெடுத்து
அந்தத் தொனிகேட்டு என்னுச்சி குந்தியார்
என்னுச்சி குந்தியம்மாள் உன்னுச்சி அல்லியரும்
அர்ச்சுனனுர் பெண்டுகள் ஐந்திரண்டு ஏழுபேரும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அவர்களுட தேவியரும்
அத்தனை பேரும் அடியே னெதிரில் வந்து
என்னை-எடுத்தடக்கஞ் செய்ய வேணுங்கா ணிந்திரனே
போதே வருந்தடங்கண் பொன்னுருவி நாயகமும்
வேல் பொருவுங் கண்ணனும் விஸ்வகேது ராசாவும்
இருவரையுந் தேடி இங்கே யழைக்கவேணும்
தேசத்தை யாளுந் திரியோதிரன் மாளிகையில்

என்-தேவியும் புத்திரரும் இருக்கவே ஆகாது
ஐவரிடஞ் சேர்ப்பேனென்று ஆணையிடு மிந்திரரே
என்ன-போரஞ்சா மன்னர் புலந்திரருந் தாம்கேட்டு

## புலந்திரன் ஆசைப்படுவேது.

சிவசிவா வென்றுசொல்லிச் செவிதனிலே கையைவைத்து
ஈயத்தைக் காய்ச்சி இருசெவியில் விட்டாற்போல்
நாராசங் காய்ச்சி நடுச்செவியில் விட்டாற்போல்
சிந்தை கலங்கித் திடுக்கிட்டு மெய்மறந்து
பச்சை முகங்கருகிப் பால்முகம் வேறுபட்டு
மன்னன் மனஞ்சலித்து மறுவார்த்தை யெடுத்துரைப்பான்
ஐயர் முகம்நோக்கி ஆணழகன் ஏதுசொல்வான்
ஐயாவே கேளும் அடியே னொருவார்த்தை
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் பூமுடியை
நூற்றொருவர் பூமுடியை நொறுங்க அடித்திடுவேன்
சகுனி தலையைத் தவிடுபொடி யாக்கிடுவேன்
தைலாட்டான் பூமுடியைத் தண்டா லடித்திடுவேன்
தங்கை மணவாளன் தறுதலையன் பூமுடியை
அரைநாழிக் கொள்ளையிலே அனலா யெரித்திடுவேன்
வாய்திறந்து நீருரைத்தால் வண்ணமுடி சங்கரிப்பேன்
ஐவர்பஞ்ச பாண்டவரும் ஐயாவே நீருமல்லோ
ஒக்க விருந்து அரசாளு மையாவே
என்ன-காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு

## கர்ணர் புலந்திரனை ஆசீர்வதிப்பது.

போரஞ்சா மன்னர் புலந்திரரைத் தாமெடுத்து
கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டு
என்னையா புலந்திரனே என்னழகுள்ள கண்மணியே
கட்டிக் கரும்பே கணுவில்லா செங்கரும்பே
முத்து முடிதரித்த முடிமன்னர் புலந்திரரே
பொன்னின் முடிதரித்த புலந்திர ராசாவே

நீர்-சொன்னது போதாதோ சூழ்ந்தரசை யாளனுமோ
பேசினது போதாதோ பேருலக மாளனுமோ
வாய்திறந்து சொன்னீரே மன்னர் பெருமாளும்
ஐவர்பஞ்ச பாண்டவரும் அடியேனுங் கூடியிருந்தால்
அரசாண்ட பாவனைபோல் ஆச்சுதுகா ணிந்திரரே
ஆண்மையுள்ள புத்திரரே அழகான இந்திரரே
என்-தேவியும்உன் அண்ணனையும் சேர்க்கிறே னென்றுசொல்லி
உம்மாச்சி அண்ணனையும் ஐவருடன் சேர்ப்பேனென்று
ஆணை யிடுங்காணும் ஆணழகா ராசமன்னு
என்று மவருரைக்க ஏதுசொல்வா ரிந்திரரும்
சிவசிவா வென்று திருச்செவியில் கையைவைத்து

## புலந்திரன் ஆணை கூறுவது

சோலை மலையுடைய சொக்கர் திருவாணை
ஆனை மலையுடைய அம்மன் திருவாணை
ஏழுலக மாளுகிற எம்பெருமா ளவராணை
ஆதி சிவனாணை ஆயர்மேல் தானாணை
பரம சிவனாணை பார்வதியாள் தன்னாணை
கோணாத மாதவத்துக் குந்தியம்மாள் தன்னாணை
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆணழகர் தம்மாணை
ஐயாவே உம்மீதி லாணை பெரிதுகண்டீர்
தோரா வடிவழகி துரோபதை தன்னாணை
போதே வருந்தடங்கண் பொன்னுருவி மேலாணை
பிறவா முடிதரித்தப் பெண்பெருமாள் மேலாணை
சோரா வளநங்கை சுபத்திரையாள் மேலாணை
மேகம் பயந்தெடுத்த மின்னொளியாள் தன்னாணை
நாகம் பயந்தெடுத்த நாககன்னி தன்னாணை
அகஸ்தியனார் பெற்றெடுத்த போகவதி தன்னாணை
மலரி லவதரித்த அல்லியம்மாள் தன்னாணை
சேராம்பு ராசன்பெற்ற செல்வவதியாள் தன்னாணை
அஞ்சு வயதுடைய அருச்சுனனார் மேலாணை

மைந்தர் அர்ச்சுனனார் மன்னவனார் மேலாணை
ஆச்சியையும் அண்ணனையும் ஐவரிடஞ் சேர்த்திடுவேன்
நானே யுடனிருந்து ராஜனுடன் சேர்த்திடுவேன்
அஞ்சாதீர் அஞ்சாதீர் ஆணழகா அஞ்சாதீர்
எதுக்கும் அஞ்சாதீர் என்னுடைய ஐயாவே
ஆணைவிடு மென்றுசொல்லி ஆணழகன் தெண்டனிட்டான்
காஞ்சிநா டாளுங் கருண ரவர்பார்த்து
ஆணைவிட்டேன் தோஷமில்லை ஆனந்த வாழ்மார்பீர்
ஓட்டுவிட்டேன் தோஷமில்லை உத்தமனார் புத்திரரே
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவே
ஆணைவிட்டே னென்றவுடன் ஆணழக னேதுசொல்வான்
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டான்
விடைதாரு மென்றுசொல்லி வணங்கின னிந்திரனும்
காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்கேட்டு
மதுரைக்குப் போறீரோ மன்னர் பெருமாளே
ஆயிரம் பாண்டியர்க்கும் அல்லிமலர் நாயகிக்கும்
என்-க்ஷேம முரையுமென்றார் செல்வனார் புத்திரனார்
அடியே னுடசேதி யனைவர்க்கு முரையுமென்றார்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தாம்கேட்டு
அப்படிக்கே நல்லதென்றார் ஆனந்த வாழமார்பர்

## கர்ணர் சொல்வது.

காஞ்சிநா டாளுங் கர்ண ரெடுத்துரைப்பார்
பருவ மதயானைப் பஞ்சவர்க ளவர்கட்கும்
உருவ மதயானை உத்தமர்க ளவர்கட்கும்
என்சேதி யொன்றும் உரையாதே ஆணழகா
என்-வரலாறுக ளொன்றும் முரையாதே மன்னவனே
ஐவர்க்குஞ் சொன்னாலே ஆரணியஞ் சென்றிடுவார்
மன்னவர்க்குச் சொன்னாலே வண்கா டுறைந்திடுவார்
என்னை யரசாள வைத்து மவர்நடப்பார்
வீமன் சபதம் முடியாது மன்னவனே

அர்ச்சுனனுர் சபதம் முடியாது மன்னவனே
இரட்டைகள் தன்சபதம் முடியாது மன்னவனே
பாஞ்சாலன் பெற்றெடுத்த பத்தினியாள் துரௌபதையும்
மாது சபதம் முடியாது மன்னவனே
மாது மயிர்முடிக்க வேணுங்காண் மன்னவனே
கோதிக் குழல்முடிக்க வேணுங்காண் கொற்றவனே
ஒன்று முரையாதே உத்தமர்கள் புத்திரனே
என்சேதி யொன்றும் எடுத்துரைக்க வேண்டாங்காண்
இங்கேநீ வந்ததுவும் இவர்களைக் கண்டதுவும்
திரிய னுடனுகைச் சபதங்கள் பேசினதும்
அத்தனையும் நீரெடுத்து அவர்க்கு உரைத்திடென்றார்
போரஞ்சா மன்னர் புலந்திரருந் தாம்கேட்டு
ஆகட்டு மென்றுசொல்லி அப்படிக்கே நல்லதென்று
வந்துமிகப் போதாச்சு என்தனுட ஐயாவே
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டார்
காஞ்சிநா டாளுங் கர்ண ரவர்பார்த்து

## புலந்திரன் கர்ணரை விடைகேட்பது.

போய்வாரு மிந்திரனே புத்தியுள்ள கண்மணியே
அல்லி திருமகனே அழகுள்ள கண்மணியே
என்று-கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டு
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தார் வேந்தர் பெருமானும்
காஞ்சிநா டாளுங் கர்ணர் முகம்நோக்கி
அங்கிருக்கு மன்னவர்கள் அனைவோருங் கைதொழுதார்
கூடவே கைதொழுதார் கொற்றப்பூ வீரியரும்
பொன்னுமலை நாடாளும் அண்ணவுங் கைதொழுதார்
போய்வாரோ மென்றுசொல்லிப் போர்மன்னர் தாம்கேட்க
காஞ்சிநா டாளுங் கருணர் பெருமாளும்
அப்படியே நல்லதென்று அனைவருக்கும் விடைகொடுத்தார்
போய்வாரு மென்றுசொல்லிப் பொருந்தி விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தார்கள் வேந்தருட சேனையெல்லாம்

## புலந்திரன் சேனையுடன் புறப்பட்டது.

போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
யானை யருகில்வந்து ஆனந்த வாழ்மார்பர்
வென்றுகெலித்தோமே வேந்தர் பெருமாளே
பாசுபதம் பேறுபெற்ற பார்த்தர் பெருமாளே
படிபடி யென்றான் படிந்தது அவ்வானை
முக்கம்பந் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
கைத்தலத்தைத் தட்டிக் கறுத்தானை யேறினார்
மத்தகத்தைத் தட்டி மதயானை ஏறினார்
அம்மா னுடன்தாமும் அழகானை ஏறினார்
மாமனுந் தாமுமாய் மதயானை ஏறினார்
வந்தவந்த பேர்களெல்லாம் மதயானை ஏறினார்
மூன்னானை ஏறினார் மூன்றுலட்சம் ராசாக்கள்
சரியானை ஏறினார் சரியொத்த ராசாக்கள்
பாங்கானை யேறினார் பத்துலட்சம் ராசாக்கள்
அருகானை ஏறினார் அஞ்சுலட்சம் ராசாக்கள்
முன்னே முரசெடுத்து முன்னானை மேல்போட்டார்
பின்னே முரசெடுத்துப் பின்னானை மேல்போட்டார்
சிலமன்ன ரெல்லோருந் தேரின்மே லேறினார்
குலமன்ன ரெல்லோருங் குதிரையி லேறினார்
பலமன்ன ரெல்லோரும் பல்லக்கி லேறினார்
அழகான மன்னரெல்லாம் அழகானை ஏறினார்
பட்டர் புலவர் பதினெட்டு மந்திரிகள்
சித்தர் புலவர் சிலராச மந்திரிகள்
சிங்கங் கரடிபுலி சேர முழங்கிவர
யாளி புலிகரடி அருகில் முழங்கிவர
தங்கள்தங்கள் வாகனத்தில் தார்வேந்த ரேறினார்

## குடையின் பெருமை.

ஏறின போதே எடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக் குடையாம் முழுமாணிக்கப் பொற்குடையாம்

தங்கக் குடையாம் தவள நெடுங்குடையாம்
பட்டுக் குடையாம் பவள நெடுங்குடையாம்
ரத்தினக் குடையாம் ராஜாக்கள் நற்குடையாம்
வச்சிரக் குடையாம் வைடூரியப் பொற்குடையாம்
எடுத்து நிறைத்தார்கள் எண்ணு யிரங்குடைகள்
சுத்தி நிறைத்தார்கள் சூரியனைக் காணுமல்
பக்கம் நிறைத்தார்கள் பகவானைக் கண்மறைக்க
ஒற்றைக் குடைநடுவில் இருந்தந்த உத்தமரும்
பூச்சக்ரக் குடைநடுவில் புண்ணியரும் வாருரே
முத்துக் குடைபிடிக்க முடிமன்னர் தேர்நடக்க
ரத்தினக் குடைபிடிக்க ராசாக்கள் தேர்நடக்க
பச்சைக் குடைபிடிக்கப் படைமன்னர் தேர்நடக்க

## புலந்திரன் தூதுரைத்து திரியோதிரனை செயித்தேனென்று சின்ன மூதுவது.

ஏறினு ரானை எடுத்தார் விருதோசை
ஊதினுர் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினுர் காளம் உலகு தலைதுமுக்க
செம்பொன்னுற் காளம் பொருந்துமென் றூதினுர்
தங்கத் திருக்காளம் தானெடுத்து ஊதினுர்
வென்றுவந்தே னென்றுசொல்லி விருதெடுத் தூதினுர்
சாதித்து வந்தேனென்று சங்கெடுத் தூதினுர்
செயங்கள் செயங்களென்று ஜெயபேரி யடிபடுது
ஜெயித்து வந்தேனென்று அடித்தான் ரணபேரி
அத்தி புரத்து நெடுவீதி வருகையிலே

## புலந்திரன் அத்திபுரத்து வீதியிலே வருகிறபோது சனங்கள்பார்த்துப் பேசிக்கோள்வது.

அங்கிருக்கு மங்கையர்கள் அணியிழைமா ரேதுசொல்வார்
கொம்பனையா ரெல்லோருங் கூடியொன்றுய்ப் பேசிக்கொள்வார்
மாயன் மருமகன்காண் மகாதேவன் புத்திரன்காண்
சீதை மருமகன்காண் தேவருட புத்திரன்காண்

பாண்டியர்க்குப் பேரனிவன் பஞ்சவர்க்குப் புத்திரன்காண்
ஆறுயிரம் பாண்டியர்க்கு அருமையுள்ள பேரனிவன்
ஐவருக்கும் நூற்றுவர்க்கும் ஆனதொரு புத்திரன்காண்
கருநீலப் பூங்குழலாள் கலந்தாரி நாயகண்டி
தோகை மயிலனையாள் துற்சடையாள் மருமகண்டி
நூலார் கடுந்திரளார் நூற்றொருவர் மன்னவர்க்கும்
பாட்டனுர் வீஷ்மருக்கும் பாரறியத் துரோணருக்கும்
சிற்றப்பா விதுரருக்குஞ் சீருள்ள காங்கெயர்க்கும்
காஞ்சிநா டாளுங் கர்ணர் பெருமாளுக்கும்
சாமத்துரோகி சகுனியவன் தோழனுக்கும்
மாமன் சகுனியர்க்கும் மற்றுமுள்ள மன்னவர்க்கும்
அம்மான் சகுனி யவன்தோழ னனவற்கும்
தங்கை மணவாளன் தறுதலைய னனவர்க்கும்
அங்குள்ள சேனையர்க்கும் அதிகமாய்த் தான்பேசி
எதிரா யிருந்துமல்லோ எத்திலங்கு பூமுடியான்
சரியா யிருந்துமல்லோ சாதித்தான் மன்னர்களை
வல்லமை யுள்ள புருஷ னிவன்தாண்டி
இவனழகுஞ் சவுரியமும் ஆண்மைகளு முள்ளவண்டி
கலந்தாரி நாயகிக்கு வாய்த்த மணவாளன்
தோகை மயிலனையாள் துற்சடையாள் பெற்றெடுத்த
ஏலக் குழலாளுக்கு ஏற்றதொரு மணவாளன்
அவளழகுக் கேற்றாப்போல் அர்ச்சுனனுர் பெற்றெடுத்தார்
இவரழகுக் கொப்பானுர் இந்திரரு மீடலவே
மன்னர் அழகுக்கு மன்மதனு மீடலவே
இப்படி யாகச்சொல்லி யெல்லோரு மாயிருந்தார்
கொம்பனைமா ரெல்லோருங் கூட்டமாய்ப் பேசினுர்
இப்படியாய்ச் சொல்லி இருக்கின்ற வேளையிலே

## புலந்திரன் வேறுவீதி வருகிறது.

போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
அவ்வீதி வீதி நடந்தார் அழகாக

மற்றுமொரு வீதியிலே வாருரே மன்னவரும்
அந்தத்தெரு வீதியிலே வாழுகின்ற மன்னரெல்லாம்
இந்திரனுர் தம்முகத்தை ஏறெடுத்துப் பார்த்துமல்லோ
அர்ச்சுனனுர் பெற்றபிள்ளை அழகுடையா னென்பார்கள்
இவருட புத்திரன்இவன் ஆண்மையுள்ளா னென்பார்கள்
இவ ரழகுமிங்கே பெற்றுவந்தா னென்பார்கள்
தூதுரைத்து மீண்டானே சுந்தரப் பூமுடியான்
எதிராக வாதாடி வென்முன்கா ணெண்பார்கள்
இப்படி யாகச்சொல்லி யிருக்கின்ற வேளையிலே
போரஞ்சா மன்னர் புலந்திரனுர் வீரியரும்
அந்தத் தெருத்தாண்டி வாருரே ஆணழகர்
மற்றுமொரு வீதியிலே மன்னர் நடக்கையிலே
அந்தத் தெருவுதனில் வாழுகின்ற மன்னவர்கள்

## புலந்திரனைப்பார்த்து ஜனங்கள் பேசுகிறது.

மாயனது மருமகனை மதிலேறிப் பார்ப்பார்கள்
எட்டி நடைநடந்து கிட்டவந்து பார்ப்பார்கள்
உயர்ந்த மதிலேறி உற்றுற்றுப் பார்ப்பார்கள்
சன்னல் கதவைத் திறந்துமெள்ளப் பார்ப்பார்கள்
ஆணு லழகுமன்னன் அர்ச்சுன ராசனவன்
அவனழகுக் கேற்றதுபோல் ஆண்பிள்ளை பெற்ருனென்ருர்
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியரும்
தன்னழகுக் கேற்ருப்போல் தான்பெற்ருர் பிள்ளையென்ருர்
இப்படியாய்ப் பேசி யிருக்கின்ற வேளையிலே
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
அவ்வீதி நடந்தார் அழகாகத் தாமுமல்லோ
தெத்துத் தெருதாண்டி தேரோடும் வீதிவிட்டு
சித்திர வீதி தெருவும் பலதாண்டி
அங்காடி வீதிகளும் அரண்மனையுந் தான்தாண்டி
கடையுங் கடைத்தெருவும் கருமார வீதிவிட்டு
அத்திபுர பட்டணந் தாண்டியந்த ஆணழகன்
வனமா வனம்நுழைந்து வாருனே தென்மதுரை

## புலந்திரன் மதுரை வருகிறது.

ஓங்கி வளர்ந்தொரு மூங்கில் வனந்தாண்டி
இருண்ட வனந்தாண்டி எலுமிச்சந் தோப்புவிட்டு
சிங்கம் உலாத்துகின்ற கருநாய் வனந்தாண்டி
கோங்கு பெருத்தவனங் கொன்றைக்கா பூத்தவனம்
பாதிரி முல்லை பருத்த வனந்தாண்டி
இஞ்சி வனந்தாண்டி எலுமிச்சந் தோப்புவிட்டு
மஞ்சள் வனந்தாண்டி மாதளந் தோப்புவிட்டு
தேசத்தை யாளுந் திரியோதிரன் தோப்புவிட்டு
காஞ்சிநா டாளுங் கர்ணருட காவல்விட்டு
ஐவர்பஞ்ச பாண்டவர்கள் ஆண்டபெருஞ் சோலைவிட்டு
மாலை முடியாரும் மதுரைத் திசைநோக்கி
மதுரைத் திசைநோக்கி வாரார் புலந்திரரும்

## ஐவரும் மண்டபத்தில் வீற்றிருந்து இந்திரனைக் காணுகிறது.

வேந்தர் பெருமாளும் வெளிமண்டபத்தில் வீற்றிருக்க
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
வேந்தர் பெருமாளும் விலாடபுரம் விட்டலவோ
விலாடபுரம் திவிட்டலவோ வீற்றிருபத்ந்தார் மண்டல்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
மண்டபத்தின் முன்னேவந்து மாலைமுடியானும்
யானைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பன்
வாளுருவிக் கைப்பிடித்து வல்லயத்தைத் தோளிவிட்டு
ஓடைமலர்க் கண்ணனும் உள்ளே நுழைந்தான்காண்
பூவும் புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
அட்சதையும் போட்டு அனைவருக்கும் தெண்டனிட்டான்
ஆறுபேர் பாத மடிவணங்கித் தெண்டனிட்டான்
வந்து பணிந்தவனைக் கண்டு மனமகிழ்ந்து
வாயார வாழ்த்தி மனது பெரிதுகந்து
இருமிரு மென்றுசொல்லி யிட்டார்சிம் மாதனங்கள்

இட்டசிம் மாதனத்தி லேறியவர் வீற்றிருந்தார்
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
இந்திரனைத் தாம்பார்த்து ஏதேது எடுத்துரைப்பார்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவே
தூதுரைக்கப் போனீரே சுந்தரப்பூ முடியாரே
என்ன-அப்போது இந்திரனுர் ஆணழக ரேதுசொல்வார்
போனதுவும் வந்ததுவும் புதுமை நடந்ததுவும்
அங்கே நடந்த அதிசய முள்ளதுவும்
கண்ணில்லான் மாளிகைக்குக் கடுகி நடந்ததுவும்
கட்டி யணைத்தவுடன் கற்றூணும் நெரிந்ததுவும்
மண்டபங்கள் தாமிடிந்து மண்ணோடே சாய்ந்ததுவும்
தேசத்தை யாளுந் திரியோ திரப்பெருமான்
ஐவருக்கு நாடு கொடேனென்று சொன்னதுவும்
அத்தனையுஞ் சொன்னுனே யாணழக னிந்திரனும்
நாலுரண்டு வார்த்தைகளாய்ச் செப்பினுன் ராசாவும்
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
எல்லாருங் கேட்டு வெகுவாய் மனங்குளிர்ந்தார்
போரஞ்சா மன்னர் புலந்திர வீரியரும்
போகவிடை தாருமென்று பொன்னடிக்குத் தெண்டனிட்டார்
ஐவ ரரையரும் ஆழி யுசந்தாரும்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவை
கட்டி யணைத்துக் கனிவாயை முத்தமிட்டு
திஷ்டி கழித்துமல்லோ சீரான புலந்திரர்க்கு
போய்வாரு மென்று பொருந்த விடைகொடுத்தார்
விடைபெற் றெழுந்தார் வேந்தர் பெருமாளும்

## புலந்திரன் மதுரையில் சின்ன மூதுவது.

படிபடி யென்றுன் படிந்தது அவ்வானை
முக்கம்பந் தட்டி முதுகின்மேல் காலைவைத்து
மத்தகத்தைத் தட்டி மதயானை ஏறினுன்
கைத்தலத்தைத் தட்டிக் கறுத்தானை ஏறினுன்

அம்மானும் அத்தானும் அழகானை ஏறினன்
மாமனுந் தானும் மதயானை ஏறினர்
வந்தவந்த பேர்களெல்லாம் வாகனம் சென்றேறினர்
அவ்வீதி விட்டு நடந்தார் அழகாக
மாலை முடியானும் மதுரைக்கு வந்தானே
ஊதினன் சின்னம் உலகேழுந் தானதிர
ஊதினன் காளம் முலகு தலைதுமுக்க
வென்றுவந்தே னென்றுசொல்லி விருதெடுத்து ஊதினன்
செயம்பெற்று வந்தேனென்று சின்னமெடுத் தூதினன்
ஊதின சின்னத்தொனி கேட்டா ளுத்தமியும்
பிறவா முடிதரித்த பெண்பெருமாள் தான்பார்த்து

## அல்லி தாதிகளைவிட்டுப் புலந்திரற்கு திஷ்டிகழிக்கிறது.

தாமக் குழலாளைத் தாதியரைத் தான்பார்த்து
தூதுரைத்து மீண்டானே சுந்தரப் பூமுடியான்
அர்ச்சுனனார் புத்திரற்கு ஆலாத்தி காட்டுமென்றாள்
தாதி யெழுந்திருந்து தானுமங்கே ஓடிவந்து
முத்தினு லாலாத்தி முப்பதுநூ றாயிரமாம்
பவளத்தா லாலாத்தி பத்துநூ றாயிரமாம்
திஷ்டி கழற்றித் தெருவெங்கும் விட்டெறிந்தாள்
கற்பூர வாலாத்திக் காட்டியந்தக் காரிகைமார்
ஆலாத்தி காட்டி யணியிழைமார் நீங்கினின்றார்
போரஞ்சா மன்னர் புலந்திர ராசாவும்
ஆனைவிட்டுக் கீழிறங்கி ஆனந்த வாழ்மார்பர்
ஓடைமலர்க் கண்ணாரும் உட்கட்டில் போய்ப்புகுந்தார்
கோசவள நாடார் கொலுவந்து வீற்றிருந்தார்

## பாட்டன்மார் தாயார் அல்லி முதலானவர்கள் வந்து புலந்திரனைக் கண்டதற்கு புலந்திரன் போய்வந்த சங்கதிகளையுரைத்துச் சுகமாக மதுரையை அரசாண்டிருந்தது.

ஆறுயிரம் பாண்டியர்கள் ஐயன்மார் வந்துகண்டார்
பெண்பெருமா ளல்லியரும் புத்திரரை வந்துகண்டாள்
போனதுவும் வந்ததுவும் புதுமைக ளுள்ளதுவும்
நாலுரண்டு வார்த்தைகளாய் நடப்பித்தா ரிந்திரரும்
அனைவர்க்குந் தாமுரைத்து அரசாண்டு வாழ்ந்திருந்தார்
புலந்திரனர் தம்கதையைப் பத்தியுடன் படித்தவர்கள்
இந்திரனர் தம்தூதை இன்பமுடன் சொன்னவர்கள்
பப்புரவாக னன்தூதைப் பட்சமுடன் வாசித்தவர்
மண்டலத்தில் கீர்த்திபெற்று மாருமல் வாழ்ந்திடுவார்
தேசத்தில் கீர்த்திபெற்று சிறப்புடனே வாழ்ந்திடுவார்
சுந்தரனர் தூதுரைத்தோர் சொக்கர் பதம்பெறுவார்
மன்னவனர் தூதுரைத்தோர் மாயர் பதம்பெறுவார்
மாயர் பதம்பெறுவார் மாருமல் வாழ்ந்திடுவார்
புலந்திர ராசனைப்போல் பூரித்து வாழ்ந்திருப்பார்
இந்திர ராசனைப்போல் பூரித்து வாழ்ந்திடுவார்
குற்றங்கள் நேராமல் குறைகளொன்றும் வாராமல்
தப்பிதங்க ளில்லாமல் தாழ்வொன்றுஞ் சேராமல்
இந்தக் கதைதன்னை இன்பமாய்க் கேட்டவர்கள்
ஆல்போலே தழைத்து அறுகுபோல் வேரோடி
மூங்கில்போற் சுற்றம் முசியாமல் வாழ்ந்திடுவார்
வாழிவாழி யென்றுசொல்லி வரமளித்தா ரீஸ்வரனர்

புலந்தரன் தூது முற்றிற்று.

---

குறிப்பு:—இந்நூலை இயற்றிய புகழேந்திப்புலவர் சரித்திரம், மாதர் மஞ்சரியின் முதன்மலராகிய ஏணியேற்றம் என்னும் நூலில் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.